இதனாற் கிடைக்கும் சகல வருமானமும் இவ்வூர்
தர்மக் கல்விச்சாலைக்கே உபயோகமாகிறது.



# Words of Peace.

Vol. II.] சாந்தி வசனம். [No. 1 & 2.

ஸ்ரீமான். ஜினராஜதாஸர் அவர்களால்
இயற்றப்பட்ட

# I PROMISE.

# எனது பிரதிக்ஞை

இரண்டாம்பாகம்.

Published by
A. RATNASABHAPATHI MUDALIAR, F. T. S.,
*Santhi Asramam*, T. S. *Tirumeyachur*,
Peralam Post Tanjore.

July & August, 1917.

திருமீயச்சூர்
பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

 [விலை அணா 6.

# ஜகத்குரு ஸ்தோத்திரம்.

---

மற்றுப்பற்றெனக் கின்றிநின்திருப் பாதமேமனம் பாவித்தேன்

என்றமெட்டு.

வெள்ளி யம்பலத்துள்ள தேவனே வேலைசூழுல கின்கணே
உள்ள மாமதம் யாவினுக்குமே உயர்ந்த தாமதி காரியே
உள்ள தாலவ சியமதாகவே உம்முடைய வோர் வரவுதான்
உள்ள மோடுமை நோக்கு வார்க்கரு ளுதவவேயிவண் வருகுவீர்.

சண்டையை மனங் கொண் டலைந்திடும் தன்மைமேவு சகோதரர்
கொண்ட எண்ணினை விட்டிடும்படி யாகவும் மொரே கூட்டமாய்க்
கண்டு நண்பினைக் கொண்டு வாழவும் கருதியேயுமை நோக்கிடும்
தொண்டர் மாமகிழ் கொள்ள வும்மிவண் தோன்றவே வருவீரரோ.

நாளுமாகிடும் செலவை யாவரே நாட வல்லவர் நாதனே
மாளுவார் கணக் கோதவல்லவர் மண்ணில் யாவரே வானவா
ஆளுமாபகை நீங்கி யன்னவர் முன்ன மெவ்வண மவ்வணம்
ஆளுமா றருள் செய்ய வேயிவண் ஆதியேவரு வீரரோ.

பொருளி னுசையாம் மருள்கொடேயலை போதம் நல்வழிப் போதவும்
இருளு லாமனத் தருளிலா தவர்க் கேற்றயாவு மியம்பவும்
தெருள லாதொரு பொருளு மில்லையாற் றேடஎன்பது செப்பவும்
அருளு லாமனத் தையனே யிவண் அருளவேவரு வீரரோ.

ஈசனேநமக் கேற்ற தந்தையென் றெண்ணவும் மவர்க் கியாமெலாம்
ஆசை நன்மகா ராகுவம்மென அறிய வும்மறி யாமையால்
நாசகாரண மாகும் மாப்பகை நாடல் போக்கவும் நாடியே
பேசுவாரிலை யாதலா லெமைப் பேணவே வரு வீரரோ.

A. R. ஸ்ரீனிவாச முதலியார், F.T.S.
சேக்ரேடேரி. நாராயண லாட்ஜ். செனகலே.

அன்றியும் அவலக்ஷணமான வார்த்தைகளை நீவிர் எக்காலத்திலும் பேசுதல் கூடாது. சம்பாஷணை செய்யும்பொழுது உத்தமமான வசனங்களையோ அல்லது அவலக்ஷணமான சொற்களையோ நீங்கள் பேசலாம். கற்றோர், நாகரிகர் இவர்களைப்போன்றாவது அல்லது மிதப்பாமரர்களான கூலிக்காரர்களைப்போலவாவது நீங்கள் வசனிக்கலாம். இவ்விருதிறத்தாருள் யாவரை நீங்கள் பின்பற்றல் வேண்டுமென்பதை யான் கூறலுமவசியமாமோ? ஆதலின் நீங்கள் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் யோசனையுடன் பொருக்கியெடுத்துச் சம்பாஷித்து வரல்வேண்டும். இழிவான வார்த்தைகளை நமது பழக்கத்திலிருந்தே தவிர்த்துவிடல் வேண்டும். ஆங்கிலச் சிறுவர்கள் சில சமயங்களில் ஒருவர் மற்றொருவரைப் பார்த்து நீ மிருகசுரூபன் எனவழைத்துப் பேசுவதுண்டு. இஃது எவ்வளவு அவலக்ஷணமானது பாருங்கள். இவ்வசனத்தை நீங்களும் வாய்திறந்துபேசல் ஆகுமோ? இவ்விதமான மொழிகளைக் கூறுதற்கு அவசியமொருபோதும் வாராது. இம்மாதிரியான அவலக்ஷண வசனங்கள் இங்கிலீஷ் பாஷையின் சம்பாஷணையில் அதிகம் ஏற்பட்டிருக்கின்றன வென்பதை நீங்கள் அப்பாஷையைப் படிக்கப் படிக்கத் தெரிந்துகொள்ளுவீர்கள். இவ்வாங்கில பாஷையை நங்குருநாதர் பேசவும் எழுதவும் வல்லார். ஆயினும் இவ்விதமான அவலக்ஷண மொழிகளையவர் ஒருபோது முரையார். ஆதலின் அவரையே பின்பற்றிவரத் துணிந்த நீங்கள் இவ்வித வசனங்களை யறவேநீக்கி மிகவு மழகுவாய்ந்த சொற்களையே எக்காலமும் உபயோகித்து வரக்கடவீர்.

முதலில் இழிவான சொற்களைத் தவிர்க்கும் பயிற்சி நுங்கட்கு ஏற்படுமாயின் பின்னர் உசிதமான வசனங்கள் எத்தன்மையவெனக் காண்டற்கு வழியுந்தென்படும் எங்க. ஆதலின் நுங்கட்கு அனுபவமுதிர்ந்து வரவரத்தான் மிகவழகுடைய வசனங்களை யுபயோகிக்கும் சக்தியுங்கிட்டும். இதற்கு எவ்விதம் முயல்வேண்டுமெனில் கூறுவேன்; நமது குருநாதர் திருவாய்மலர்ந்தருளியிருக்கும் வசனங்களை ஆராய்ந்தறிதலினாலென்க. இப்பிரமஞான சபையின் புத்தகங்களில் நமது குருதேவரது வாய்மொழிகள் பலவுளவாதலின், அவற்றையெல்லாம் பெருக்

வைத் தனியே ஒரு புத்தகரூபமாய் கையெழுத்தாலமைத்துக் கொண்டு, அவ்வித வசனங்களையெல்லா மவர் உபயோகிக்கும் வழியை கூர்ந்துணர்ந்து வருவீராயின், நுங்கட்குஞ் சிறிதுசிறிதாய் அவ்வாது நினைவுகளில் பிரவேசமும் லபிக்குமன்றோ! இவ்விதமே விவிலிய நூலின்கண் கிடைக்கும் கிறிஸ்துநாதரின் வசனங்களையு மாராய்வீராயின் அவற்றுள்ளும் சிறப்புடையவைகளாய பதங்களுந் தொடர்மொழிகளும் வேண்டியவளவு தென்படுமன்றோ! வயது வரவர நீவிர் அநேக புத்தகங்களைப் படிக்கத் துடங்குங்காலை, யிவ்வாறே பகவான் புத்தர், ஸ்ரீகிருஷ்ணபகவான், கிறிஸ்துநாதர் முதலிய மகாபுருடர்களின் வசனங்களைக் கண்ணுறும்பொழுதவற்றை விசேடக் கவனத்துடன் குறிப்பிட்டுக் கொள்ளல்வேண்டும். அவர்களாற் பேசப்பட்டனவாய இச்சிறப்புடைச் சொற்களை மறவாது நெஞ்சிலெழுத்திக்கொள்ளும் பழக்கமுங்கட்கு வாய்க்குமாயின், அப்பொழுதுதான் அழகுருசிதமும் விளங்கிய பதங்களின்னவை யென்பதை நன்கறிந்து கொள்ளுவீர்கள்.

நங்குருதேவனும் பெரியோனிடம் விளங்கு மநந்தகுணங்களில் ஒன்று எவ்விதச் சுந்தரத்தன்மையல்லது அழகையுமறிந்தனுபவிக்குந் திறமையாகும். ஆதலின், சிறுவர்களேயாயினும் நீங்களுமிந்நாண்முதலே நுங்களாலியன்றமட்டு மிவ்விதம் அழகுடை வசனங்களையே யுபயோகிக்கப் பயின்று வருவீர்களாயின், நாளடைவில் குருதேவரும் தன் சக்தியைச் சிறிதுச் சிறிதாயுங்கட்களிக்கத் துடங்குவார்.

இனி நீங்கள் இளமைப் பருவத்தினரேயாயினும் இம்மாதிரியாய் வனப்புடைச் சொற்களையாராய்ந்து தெளிந்துகொள்ளற்குத் துணிவீராயின், அதற்கேற்ற யுக்தியொன்றை யுங்கட்குக் கூறுவேன். உங்களில் ஒவ்வொருவரும் சீடத்தன்மையை யடைந்தவரேயாதலின், உங்களது அந்தரங்க நிலையிற்றங்கிநிற்கும் உள்ளுணர்ச்சியொன்று நீங்கள் சம்பாஷிக்கும்பொழுதும் எழுதப் புகும்பொழுதும், நுங்கட்குத் தென்படுஞ் சொற்களிலுசிதமும் அனுசிதமுமானவை யாவை யாவையென பகுத்தறிந்துகொள்

ளுஞ் சக்தியை யளித்துவிடுகின்றது. ஆகவே நீங்களதிக கவனங்கொண்டு உங்களைப் பழக்கிவரும்பொழுது, ஏதேனு மனுசிதமான வார்த்தையொன்றை உபயோகிக்க நேரின் மேற்சொல்லிய வுள்ளுணர்ச்சி மிகவுமிருதுவாய், அவ்வசனமுசிதமன்றென, உண்மையுரைக்கவந்த ஓர் அசரீரியைப்போன்று, நுங்கள் நெஞ்சிற் காட்டிவிடுகின்றது. அஃதையுடனே நீங்களுநும் குறிப்புடன் கவனஞ்செலுத்தி யுணர்ந்துகொள்ளாது விடுவீர்களாயின், திரும்பவுமஃது கிளம்பாதடங்கிவிடும். அவ்விதமல்லாது மிகுந்த சாக்கிரதையுடன் எப்பொழுதும் நீங்கள் சொல்லுஞ் சொல்லையும் எழுதுமெழுத்தையும் ஸ்ரீ குருதேவனது நாமங்கொண்டும், அவனது காரியாதிகளை நிறைவேற்றற் கெனவுமே உபயோகித்து வருவீர்களாயின், நிச்சயமாய் நாளடைவில் இவ்வுணர்ச்சியின் வலிமிகுந்து, அதனுதவியால் அழகற்றவைகளை யறவே நீக்கிக்கொண்டு அழகுள்ள வசனங்களையே யெடுத்தாளுநும் பக்குவமுங் கிட்டிவிடுமன்றோ!

இனி மூன்றும் விபாகமான 'உண்மையான வசனங்கள்' யாவையென விளக்குவாம். நீங்க ளடைந்திருக்கும் பரிபாக ஸ்திதியில் இனி புத்திபூர்வகமாய் உண்மையில்லாத தெதையும் நீங்கள் பேசமாட்டீர்கள் என்பது சொல்லாமே பெறப்படும்.* ஆயினுமுலகினிற் பெரும்பாலார் இந்நாளிலும் பொய்ம்மைநிறைந்த பலவிதங்களில் சம்பாஷணைகளைச் செய்துவருதலை யொவ்வியே நிற்கின்றனரன்றோ! அதிலும் ஆங்கிலபாஷையில் இவ்வித மெய்யற்ற வசனக்கிரமங்கள் பற்பல விளங்குகின்றன. இனி உண்மையான வசனமாவது யாதோவெனின், எவ்விஷயத்தை யொரு வார்த்தை விளக்கப்புகுந்ததோ அதற்கேற்றதுவாய் அஃது நிற்றலே யாகுமென்பதே. பாருங்கள்! அதோதோன்றும் பெருங்கடலைப்பற்றிக் கூறப்புகுந்து யான் அஃதை கடலென்று கூறினுலுண்மையாகுமேயன்றி, அதுவோர் 'ஏரி'யென வறைவேனாயின் அஃதையுள்ளபடி நான் வருணிப்பவனாவேனோ? ஆதலின் நாம் வருணிக்கப்புகும் வஸ்துவை யுள்ளபடி விளக்குஞ்சொல்லே யுண்மை

* வாக்குமனமொன்றுபட்ட வார்த்தையல்லால்வெவ்வேறாய்ப்
போக்குடையவார்த்தை பொருந்தேன்பராபரமே! **தாயுமானவர்.**

யுள்ளதுவாகும்.' ஆங்கிலபாஷையின் சம்பாஷணைக் கிரமத்தில் எம்மட்டில் உண்மையென்பதிறந்த சொற்றொடர்களுளவென் பதை அடியில்வருஞ் சில வுதாகரணங்களால் நீங்களறிந்துகொள்ள லாம். ஜனங்கள் ஒருவரோடொருவர் வார்த்தையாடும்பொழுது ஒருவன் "இப்பதார்த்தம் மிகப்பயங்கரமான ருசியல்லது அழகு டையது" எனவும், "யானின்று மிகப்பயங்கரமானவிதமாய் சந் தோஷங் கொண்டிருக்கிறேன்" எனவுங் கூறுவது சகஜமாயிருக் கின்றது. இஃது எவ்வளவு விபரீதம் பாருங்கள்! பீதியும் சந்தோ ஷமு மொன்றோடொன் றெவ்வின குணங்களாகுமோ? இவ்வித மான பரஸ்பர விருத்தமுடைய குணங்கள் ஓரிடத்தில் வாய்க் குமோ? வாயாவென்பதை ஆராயின் எவரும் அங்கீகரிப்பாராயி னும், மேற்றிசையில் இவ்வசனங்களை ஜனங்கள் மிகச்சாதாரண மாய் உபயோகித்து வருகின்றனர் என்பதை யானறிவேன். இக் காரணங்கொண்டு நீங்களும் அவ்வகைச் சொற்களைப் பேசுதல் கூடாது.

இனி, எச்செய்கையையும், நமது குருநாதர் அதையங்கீ கரிப்பரென்பதை நிச்சயமாயறிந்து கொண்டாலன்றி, உலகினர் யாவருமதைச் செய்துவருதலையே நியாயமாக்கொண்டு நீவிர் செய்யப்புகுதல் ஒவ்வாது. ஏனெனில் பெரியோனாங் குருநாதன் செயல்கணமக்குப் பிரமாணமாகுமே யன்றிக், கீழ்நிலையிலுள்ள சாமானிய வுலகினரின் அநுஷ்டானங்கள் ஒருபோதும் பிரமாண மாகாவென்பது திண்ணமன்றோ! *

அன்றியு முண்மையென்பது யதார்த்தமேயாகுமாதலின், உங்கள் வார்த்தைகள் கூடுதல் குறைதலிலாவண்ணம் சரியான கருத்துக்களையே தெரிவிக்கும்படி யவற்றைச் சாக்கிரதையுட

* நாளவங்கள்போகாம னொடொறுநந்தன்மையே
யாளவந்தார்தாளினிக் கீழாட்புகுந்தாய் - மீளவுன்னைக்
காட்டாமனிற்குங் கருத்தறிந்தானெஞ்சேயுன்
னட்டானை யில்லை.

அருளுநீ; மௌன ஞானதாதாவுநீ,
பெற்றதாய் தந்தை தாமுநீ தமருநீ, யாவுநீ காண்! தாயுமானவர்.

னுபயோகித்து வரல்வேண்டும். இங்கிலாந்து தேயத்தில் இவ் விதமல்லாது யோசனையற்று அளவுமீறிய கருத்துக்களைக் காட்டும் பதங்களை யுபயோகித்தல் வழக்கமாயிருக்கின்றது. அந்நாட்டில் ஒருவன் 'காட்டீச்சம்பழங்கள் சேர்ந்த அடைப்பணியாரத்திலெனக்கு பக்தி' யுண்டெனக் கூறுவான். இங்கு 'பக்தி' யென்பது அளவுகடந்த சொல்லேயாகுமன்றோ! கடவுள், குருதேவர், நண்பனிவர்களிடம் ஒருவன் பக்திவைத்தல் தகுமேயன்றி, அற்பமான ஸ்தூலசரீரத்தி னுணவுகளைக்கண்டு அத்தகைய வுயர்நோக்கங்களைக் கொள்ள லெங்ஙனமமையும்? உண்மையிலிவ்வீச்சம்பழ வடையின்மீ தாசைகொள்வது இவனது ஸ்தூலசரீரமாகும் ஜடரூபவஸ்துவான பூதாத்மாவேயாதலின், அஃதுணராது, இவன் தன் சரீரத்தினுணர்ச்சிகளை எடுத்துக் காட்டுதற்குத் தன்னுயர் நோக்கங்களைக் குறிக்குஞ்சொற்களை யோசனையின்றி யுபயோகப்படுத்துகிறானே யன்றி வேறன்றெண்க.

ஆங்கிலேயர் பேசுவதைக்காட்டினு மிகவுசிதமாய் அவ்வாங்கில பாஷையை நீவிர் பேசுதற்கு கற்றல்வேண்டும். அத்தகைய சிறப்பையும் நீங்களிப்பொழுது சம்பாதித்துக்கொள்ளலாம். தற்கால மிவ்விந்திய நாட்டில் மேம்பட்ட இராஜயோகத்தின் வழியைச் சிறிது கற்றுணர்ந்தும், அவ்வழியில் தமது வாழ்வை நடாத்திவர முயன்றும் வருவோராய், சிலர் இவ்வாங்கில பாஷையின் சாரத்தை அந்நாட்டிற் பிறந்த வாங்கிலேயரைக் காட்டினுமிக நுண்ணியவிதமாய் கிரஹித்துபயோகிக்குந் திறல் வாய்ந்து நிற்கின்றனர். இனி வருநாட்களில் நுங்கட்கெல்லாம் இவ்வாங்கிலபாஷையி னுபநியஸிப்பதுவே முக்கியமான தொழிலாய் வாய்க்கும். ஏனெனில், ஸ்ரீகுருநாதனது திருவார்த்தைகளை யப்பாஷையில் உலகிற்கெல்லாந் தெரியும்படி பிரசங்கித்துவரும் பாக்கியம் நுமக்குங் கிட்டவிருப்பதாலென்க. ஆதலினத்தருணங்களில் அவனதுள்ளக் கருத்துக்களை வெளியிட்டுவரத் தகுதியடைந்து விளங்கும் வண்ணம், இந்நாண்முதலே நீவிர் அப்பாஷையைப் பிழையின்றி யழகுடன் பேசும்பழக்கத்தை யேற்படுத்திக்கொள்ளலே கடமை. ஏனெனில் அவ்விதம் நீவிர் தகுதி

யுடையார்விடி னவர்க்கு உசிதமாய்த் தொண்டுபுரித லுங்களா லெங்ஙனமியலும்? அந்நாட்களில் நீர் பேசுதலும் பிரசங்கித்த லும் அவர் பொருட்டேயன்றோ நிகழல்வேண்டும்!

இதுவுமன்றி யுண்மையுடன் நீங்கள் பேசி நடித்துவரல் வேண்டுமென்பதற்கு மற்றோர் காரணமுமுண்டு. நீங்களிப்பொழு துலகில் வாழ்ந்து வரும்பொழுதே பிறருங்களிடம் நம்பிக்கை கொள்ளுமாறு ஒழுகிவருதல் வேண்டும்.. ஏனெனில், உங்களைத் தனது சீடர்களாய் குருதேவன் ஏற்றுக் கொண்டிருப்பதெல்லாம் இவ்வுலகில் ஏனைய மானிடருங்களையணுகி யுதவிபெற்று வரு மாறு நீங்கள் உத்தமராய்ச் சகலருமறிய வாழ்ந்துவரல் வேண்டு மெனு நோக்கங் கொண்டேயன்றோ! தான் நம்பிக்கைகொளு மற்றொருவனிடமன்றோ உலகில் எவனுமணுகி தன் குற்றங்குறை களைக் கூறிக்கொள்ளலேயும், அவற்றிற்குத் தக்கவுதவிகளை நாடு தலேயுஞ் செய்துகொள்ளுவான். ஆகவே பிறர் நுங்களிடம் விசு வாசங்கொள வேண்டுமாயின் நீங்களும் எல்லா விதங்களாலு முண்மைதவறு வொழுக்கமுள்ளவர்களாதல் வேண்டும். பிறரொ டும் சம்பாஷிக்கும்பொழுது கூட்டிக்குறையாது உள்ளதையுள்ள படி நீங்கள் பேசிவரல்வேண்டும். உண்மை தவறுது நீவிர் பேசி வரத் தவருவீராயின், பிறருங்கள் வசனங்களை முழுதும் நம்பி நிற்றலெங்ஙன மமையும்? ஆதலின் உண்மையென்பது யொரு சிறிதுங் குறையாதவிதமாய், உங்கள் வசனங்கள் எப்பொழுதும் நிகழுமாறு பழகிவரலே யுங்களது பெருங்கடமையாகும்.

இதுகாறும் யானியம்பியவற்றால் உங்கள் வசனங்கள் யாவும் அன்பு, அழகு, உண்மையெனு மிம்மூன்றம்சமும் பொருந் தினவைகளாயின பின்னரே, அவை தீரகுணமடைந்தன வாகு மென்பதை நீங்களுணர்ந்து கொள்ளுவீர்கள். இவ்விதம் நுங்கள் வசனங்களில் தீரத்தன்மை விளங்குமென்று யானிங்கு கூறுதலின் கருத்து யாதோவெனில், மேற்கூறிய வண்ணம் பரிசுத்தமடைந்த நுங்கள் வார்த்தைகளிலெல்லாம் ஸ்ரீகுருதேவனது சோதி வெளி யிற் பிரகாசிக்க வாரம்பித்துப் பின்னர், அச்சோதியின் மூலமாய் அவனது வல்லமையும் தோன்றுமென்பதே. குருதேவனுங் கட்டு

ஞூலகத்தை நோக்குதற்குதவும் பலகணியாவராதலின், நீங்க ளும் குருநாதர் உலகில் தனது திருஷ்டியைச் செலுத்தற்கான ஜன்னல்களாவீர்க ளென்பதிற் றடையில்லை.

குருதேவர் கடவுளோடைக்கிய முற்றவராதலின் சதாகால மும் தான் தைரியமே வடிவாய் விளங்குபவராவர். துன்பமுலகி லெங்கு தோன்றினும் அவரதையெல்லாந் தனது வல்லமையால் குறையச்செய்து வருவர். அவ்விதமே அறிவின்மையா மந்த காரம் தோன்றுமிடங்களிலெல்லாம் அவர் அதைத் தன் சோதி யாற்றுலைப்பர். ஏனெனில், துன்பத்தையு மஞ்ஞானத்தையும் போக்குதற்கான திறமை யவரிடமுண்டன்றோ! இக்காரணத்தால் குருதேவர் எக்காரியம் வரினும் அதையெல்லாம் 'முடிப்பேன்' எனவுள்ளுறையில் நினைவு கொள்ளுவரேயன்றி வேறுவித முத்தே சிப்பதில்லை. நாம் பல பெருங்காரியங்களை நிறைவேற்ற வேண்டி யிருக்கின்றது. அவற்றையெல்லா நோக்கும்பொழுது அவை நஞ்சத்திக்கு மிகவு மிஞ்சியிருத்தலால் நமக்கவை யசாத்தியங்க ளெனவே தோன்றுகின்றன. இவற்றையுங்கூட நாம் சாதிக்கப் புகுதல் எங்ஙன முசிதமாகுமெனில், அவற்றைக் கேவலம் நமது முயற்சியைமட்டுங் கொண்டல்லாமல், குருதேவனது ஆணையால் நிறைவேற்றத் துணிகின்றோ மாதலினென்க. நாமறியாதவளவு நம்மிடஞ் சத்தியுண்டென குருதேவர் அறிந்துளார். ஆனால் குருதேவரறிய நம்முட் சக்தியுண்டென்பது வாஸ்தவமாயினும், சுரங்கத்துட் டங்கும் பொன்னை வருந்தித் தோண்டியே யடைய வேண்டுமாபோல், நாமு நம்மிடமுள்ள விச்சத்தியாந்தனத்தை பெருமுயற்சிகொண்டு தோண்டுதலே வேண்டும். இதற்கு ஆரம் பப் பிரயத்தினமாவது எந்தற்காரியத்தையும், "யான் செய்வேன், அவ்விதம் அசையா மனத்துணிவு கொள்வேன்" எனச் சங்கற்பித் துக்கொள்ளலேயென்க. ஆதலின் நமது வசனங்கள் யாவும் துணி வுந்தீரமும் நிறைந்தவைகளாகவே விளங்கல்வேண்டும். இதுவே துங்கட் கியானியம்பவந்த பொருளாகுமென்க.

தற்காலத்திலுலகில் இத்தைரியென்பது மிகவு மவசியமா யிருப்பதை நீங்கள் சற்றேனு மறந்துவிடல் கூடாது. எங்கு

நோக்கினும் எண்ணிறந்த விதங்களான அதைரியமெனுங் கோழைத்தனத்தின் மணங்களே வீசுகின்றதன்றோ! ஆதலின் மன்பதைகட் குதவிபுரிய வேண்டுமாயின் அவர்கண்மீது அன்பைப் பொழிவதுமட்டும் போதாது, பின்னை தைரியமல்ல துறுதியெனு முத்ஸாகத்தை யளித்தலு மவசியமாகின்றது. இதுவே நமது கடமையாகும். ஆதலி நமக்குச் சிறிது கடினமாய்த் தோன்றும் விஷயமெதுதென்படினு மதைக்கண்ணுற்று மயங்கி நிற்காமல் அத்தருணத்தில் எல்லாம் வல்ல சத்திமானுகும் குருநாதனை நினைந்துகொள்வதே யுங்கட் குற்றதோர் வழியாகும். ஆதலின் நீங்களு முலகத்தின்பொருட்டே அவனிடமிருந் துதவியை பிரார்த்தித்து வரல்வேண்டும். ஏனெனில், உறுதியாங் குணத்தை நீங்கள் வேண்டிநிற்பது, உங்கண்மட்டில் உங்களுக்குள்ள பயத்தன்மையை நீக்கிக்கொள்ளற் கல்லவன்றோ! பின்னை நீங்கள் முதலிலவ்வுறுதியை யடைவதால் பின்னர் உங்கண்மூலமாய் உலகத்தவர்க்கு மவ்வுறுதியை ஈந்தளிக்கு மெண்ணங்கொண்டேயன்றோ! அன்றியும் குருதேவன் தனது தீரகுணத்தை யுலகிற் களிக்கக் கருணைகொண்டு நிற்கிறுனென்பதையும், அதற்கு நீங்கள் தைரியமுள்ளவர்களாகிவிடின் உங்கண்மூலமா யுலகத்தில் தான் கருணைவெள்ளத்தை பாய்ச்சக்கருதியே காத்திருக்கிறுனென்பதையும், நீங்கள் மனத்திற்கொள்ளல் வேண்டும். இங்ஙனம் குருதேவனுக்குத் தொண்டுபூண் டுலகிற்கு நன்மைசெய்யு மிவ்வுயர் பாக்கியம் இளமைப் பருவத்திலேயே யுங்கட்குக் கிட்டியிருக்கின்றதன்றோ!

இனி குருதேவனு முங்களைத் தன் காரியத்திலுபயோகித்துக்கொள்வது எந்த நிமிஷத்தில் வாய்க்குமென்பதை யார் சொல்லக்கூடும்? எச்சமயத்திலாவது அவர் ஒரு மனிதனுக்குக் கருணைபுரியு நோக்கங்கொள்ளி னுடனே யந்நிமிஷமே யுங்களிலொருவரைத் தன் கருவியாயாண்டு கொள்வரன்றோ! அநேகமாய் இவ்வித சந்தர்ப்பங்கள் வருவதும்போவது முங்கட்குத் தெரியாமலே நிகழும். இதனுல் யாதொரு பாதகமுமில்லை. பின்னைப் பாடசாலையி லிருக்கும்பொழுதும் விளையாடிக் கொண்டிருக்குங் காலையிலும், உங்கட்குமட்டும் மேலே கூறிய்

போந்தவண்ணம் உள்ளக்கனிவு இடையறாது விளங்கிவருமா யின், அப்பொழுது குருதேவன் நம்பக்கலிலிருக்கும் ஒவ்வொருக் கும் உதவிபுரிய விச்சைகொண்டா லுடனே யுங்களையாவது, நுங்கண் மானதகாமிக சரீரங்களையும், வேண்டுமாயின் நுங்கள் ஸ்தூல சரீரங்களையுங் கூடத் தன் கருவிகளாயுபயோகித்துக் கொள்ளத் தடையிராது. இவ்விதம் தனது காரியங்கட் குதவு தற்காகவன்றோ அவரும் நுங்களைத் தன் சீடர்களாக்கிக் கொண் டிருக்கின்றனர்.

ஆதலின் நீங்களும் உலகின் க்ஷேமார்த்தம் தைரியம்பொ ருந்திய வசனங்களையே மொழிந்து வரல்வேண்டும். இவ்வித தைரிய வசனங்களும் அன்பு சத்தியமழகுள்ளவைகளா யிருத் தல்வேண்டும். இவ்வியற்கையனவாய நுங்கள் வசனங்களினூடே உலகபரிபாகமாந் திருவிளையாட்டாகிய தனது சங்கல்பத்தை ஜயம்பெற முடியும்வண்ணம் நடத்திவரத் திருவுள்ளங்குவித்தி ருக்கும் கடவுளது வீரியமும் உலாவிநிற்குமன்றோ! ஆகவே நுங்கட்கேற்படும் எக்காரியமும் கடினமானதாகுமாயின் அஃ தைக் கண்ணுற்று மயக்கமுறாமல், அஃது சாமானியரது திருஷ்டி யால் நோக்குமிடத்து நம்மால் முடியாதது போற் றோன்றினும், நம்முட்டங்கி நின்றியக்கஞ் செய்யும் பரமன் சத்திக்கு அசாத் தியமன்றாதலின், "அக்காரியத்தை முடிப்பேன், அஃதை முடிக்க முயலுவேன், அம்முயற்சியைக் கைவிடேன்" எனவுள்ளுறையில் நீங்கள் நினைவுகொள்ளலே தகுதியாகும். அவ்வாறின்றி யஃ தைக் கண்ணுற்று மனத்தளர்ச்சியடைந்து "இஃது எங்களாலிய லாது, இஃது எங்கள் சக்திக்கு மீறியதே" யென வெண்ணுதல் கூடாது.

இனி நீங்கள் யாவரும் தைரியமுடை மொழிகளையே பகர் ந்துவரப் பயிலுவீராயின், ஸ்ரீகுருதேவனுக் குகந்த முன்னிலு மதிகமான தைரியகுணம் வாய்ந்த சீடர்களே யாகிவிடுவீர்கள். அன்றியுமதனால் நுங்கட்கு ஆனந்தமிகுதியு முண்டாகும். ஏனெ னில், இவ்விதம் நீங்கள் ஒழுகிவருவதால் குருதேவரே உங்கள்

வசனங்களைத் தனது மொழிகளாய் ஆண்டருள விடங்கொடுப்பீராயின். தகுதியடைந்த சீடர்கள் கிடைப்பின் சமயம் நேர்ந்துழி ஸ்ரீகுருநாதரும் அவர்களைத் தன் கருவியா யுபயோகித்துக்கொள்ளப் பின்னிடையாரன்றோ! ஆகவேகுருதேவரும் நீங்களறியாமலே சிற்சில வபூர்வ சமயங்களில், தான் வெகுதூரத்திற் கப்பாலுள்ள தனதாசிரமத்தி லிருக்கும்பொழுதே, நீங்கள் உலகில் பிறரொடும் சம்பாஷணை செய்யுங்காலையில் ஒருவார்த்தை சொலத் துடங்கினவுடன், தனது சத்திஸ்ய யும்மிடம் அனுப்பியுமது வசனத்திற் புகவிடுதலும் கூடும். அச்சமயத்தில் நீங்கள் பேசுமவ்வொரே வார்த்தை அவனதருள் நிரம்பியதாதலின் அவ்வன்னியருக்கு மிகவதிசயிக்கத்தக்கதான வுதவியைத் தரலாகுமன்றோ!

இனி வருநாட்களில் நுங்கள் தொழின்முழுமையும் பெரியோர்களாங் குருமூர்த்திகள், பிர்ம்மவித்தை இவைகளைப் பற்றிய வுண்மைகளை இவ்வுலகத்தாருக்கு எடுத்துரைப்பதுவே யாகும். * இப்பெருங் காரியத்திற்கே யிப்பொழுது நீங்கள் யாவரும் பழக்கமடைந்து வருகிறீர்கள். ஆதலின் பல ஜனங்களுக்கு

---

* வீறுசிவ[illegible]தல் விளம்பியபடியே
யாறுமனுதியென் றறிஞருககுறைத்தோன்,
கொல்லாவிரதங் குவலயத்தோர்க
ளெல்லாம்பெறுமினென் றியம்பியதயாநிதி,
தருமமுந்தானமுந் தவமும்புரிபவர்க்
குரிமையாயவரொ டுறவுகலப்பவன்,
றன்னுயிர்போலத் தரணியின்மருவிய
மன்னுயிரனைத்தையும் வளர்த்திடும்வேந்தன்,
களவுவஞ்சனைகள்செய் கருமிகடமக்குந்
தெளிவுவந்துறவருள் செய்திடுந்திறத்தோன்,
தான்பெறும்பேறு சகமெலாம்பெறவே
வான்பெருங்கருணை வழங்கியமாரி
தஞ்சமென்றடைந்த தாபதர்தம்மை
யஞ்சலென்றருளு மறிஞர்சிகாமணி,
சீவகோடிகளுஞ் சித்தர்கோடிகளுமி
யாவரும்புகழ யாவையுமுணர்ந்தோன்! தாயுமானவர்.

பெரும்பெரு முபந்நியாஸங்களை பஹிரங்கத்திற் செய்புந்திறமை யுடையீராதல் வேண்டும். ஆதலினித்தொழிற் கேற்பவே ஆண் புடை வசனங்கள், அழகுடைச் சொற்கள், உண்மையுள்ள வார்த் தைகளிவை யாவையெனச் செவ்வனே நீவிர் யாவரும்இப்பொ ழுதே யறிந்துணர்ந்து கொள்ளல்வேண்டும். இவற்றை நீங்கள் சிறிது சிறிதாயுபயோகித்து வரவே, இவ்வசனங்களைப் பேசு தற்கு விசேஷசத்தி யுங்கட்குண்டாகும்படி குருதேவர் அனுக் கிரஹித்திருப்பதைத் திடீரென ஒருநாள் நீங்களுங் கண்டுகொள் ளுவீர்கள். ஆதலின் குருதேவன் உங்களுக்கு வெகு தூரத்தி லேயே தனது ஸ்தூலசரீரத்தில் வாசஞ்செய்பவராயினும் நீங் கண்மட்டும் அவருக்கிணங்கி நடப்பீர்களாயின், உடனே அவரும் நுங்கட்கருகிலிருப்பவராய் விளங்குவரென்றறிக. இவ்விதம் தைரி யம் விளங்குஞ் சொற்களை நீங்கள் பேசும்பொழுதெல்லாம் ஸ்ரீ குருதேவரையே யும்மிடம் வந்தடையும்படி நீங்கள் அழைத்தலை யொக்கு மென்பதில் ஐயமில்லை.

இதுகாறும் கூறி முடிந்தவற்றால் நீவிர் கடைப்பிடியாய் பிடித்துகொள்ளற்பால தியாதோவெனில், இத்தகைய பெருந் தொழிற்கே யாட்பட்ட நீங்கள் யாவரும் பிரதிதினமும் ஸ்ரீகுரு நாதனும் பெருமானை மனத்திலுன்னி "தீதில் பரமாம் குருதே வரே! எமக்கு வாய்த்த தந்தை வடிவான பேருறவே! யாங்க ளனைவரும் நினதருளாலே யாவரிடமும் தைரிய நிறைந்த சொற் களையே * பேசிவரக் கடவேம்" என நும்மனத்துள்ளேயே பிரதிக்ஞை யொன்றைச் செய்துவரல் வேண்டுமென்பதே.

---

* சொல்லிறப்பச்சற்குருவாய்த் தோன்றிசுகங்கொடுத்த நல்லுரைக்கேகொத்தடிமை நான்காண்பராபரமே. தாயுமானவர்.

# சந்தோஷ நிறைந்த நினைவுகள்.

இனி மூன்றுஞ்சாதனமான சந்தோஷமுள்ள நினைவுகள் யாவையென்பதை யானின்று விளக்கப்புகுவேன். ஜீவனோடிருக்கும் எவ்வஸ்துவும் சுகமல்லது ஆனந்தத்தையே நாடிநிற்கின்றதன்றோ! அற்பப்பொருட்களான புற்பூடுகளும், மிருகங்களும் மானிடரும் ஆகிய யாவுமே சுகத்தை யடைவதற்கே முயன்றுவருகின்றன. ஆதலின் சுகம் பெறவேண்டுமெனுமிவ்வாசை சகலவஸ்துக்களினிடமும் பரமாந்தரங்க வியற்கையிலுள்ளூறியே நிற்கு நாட்டமாகின்றது. ஆகவே சுகமடைதலில் விருப்பம் யாவரிடத்திலுமுள ஸ்வபாவமாந் தன்மையே யாகும். இனி யிவ்வுண்மையிங்ஙனமிருக்க, உலகில் நாற்புறத்திலும் துன்பமுந்துக்கமுமே யானந்தத்தைக்காட்டினும் பன்படங்கதிகமாய் செறிந்து நிற்பது என்னவிந்தை! ஆனந்தத்தையே நாடிமுயலுமியற்கையினராமாந்தர் யாவரும் அவ்வானந்தத்தை மிகுதியுமடையாமற்றுன்பமே நிறைந்தவராய்விளங்கலும் யாதுகாரணம்பற்றி நிகழ்கின்றது? எக்காரணத்தால் மன்பதைகள் இவ்வாறு ஆனந்தமிழந்தோராய் நிற்றலேற்படுகின்றது?

இதற்கெல்லாங் காரணமியாதோவெனில் சூரியனது பிரகாசம் எங்கும் நிறைந்து விளங்கும்பொழுதும் அதனோடு இருட்டும் ஆங்காங்கு தோன்றுவது எப்படியோ அவ்விதமேயாகுமென்க. சூரியனிடைவிடாது ஒளிவீசிநிற்பினும், அவனது சோதிக்கும் பூமிக்கு மத்தியிலொரு தடை குறுக்கிடுமாயின், உடனே அச்சோதியை மறைக்கும் இருட்டும் பூமியின்மீது தோன்றிவிடுமன்றோ! ஆதலின் ஆனந்தங்கிட்டாதல்லற்படுமாந்தர் யாவரும் தத்தம் ஜன்னல்களில் தீமையெனுங்களங்கங்கள் அடையாவண்ணம் வைத்துக்கொண்டிருப்பவர்களல்லவென்பி

தேயுண்மையாகும். * கடவுளது பிரகாசம் நம்மிடம் வந்துசேருதற்கு உதவுஞ்சன்னல்களான நற்குணங்களியாவையெனு யான் முன்னரே நுங்கட்குக் கூறியவற்றை நீவிர் மறவாதிருத்தல்வேண்டும். இத்தகைய குணங்களிலெதுவேனும் மாசுடையதாய் நிற்பின், அதன் காரணமாய் ஆனந்தமாம் ஒளிக்கு நேரிடையான நிழலாகும் துன்பம் வந்தடைவதும் சகஜமேயன்றே! கடவுளைப்பற்றிப் பேசும்பொழுது ஒரு சமயத்தில் பகவான் மைத்திரேயர் திருவாய்மலர்ந்தருளியதாவது: "அவனிடம் இருள் என்பது கடுகளவேனும் இல்லை. பின்னை யவனை மானிடர் முன்னின்று நோக்காது, பின்புறமாய் நின்று தம் மாலேற்படு நிழற்குள்ளேயே நடப்போராகி, விருட்டையேகண்டு ஒளியைக் காண்கிலேமென, அந்தோ! அலமந்து காலங்கழிக்கின்றனர்." † என்பதே.

* என்னுட்டுன்று கூறிருளைத் துரந்திடு மதியே
துன்பமுமின்பமுமாகி நின்றவாதனையைக் கடந்தவர்நினைவே
நேசமே நின்பரம் யானே.

பெற்றவர்பெற்ற பெருந்தவக்குன்றே, பெருகிய கருணைவாரிதியே
நற்றவத்துணையே யானந்தக்கடலே, ஞாதுரு ஞானஞேயங்க
ளற்றவர்க்கற்றத நட்புடைக் கலப்பே! தாயுமானவர்.

† கண்டார்கண்ட காட்சியுநீ காணார்காணுக் கள்வனுநீ.

வீட்டைக் கருதுமப்போது வெளியாமுலக வியப்பனைத்தும்.

வாயிலோ ரைந்திற் புலனென்னும் வேடர்
வந்தெனை யீர்த்துவெங் காமத்
தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்
சிந்தைநைந் துருகி மெய்மறந்து
தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்
தாயினுங் கருணையா மன்று
ளுயக் மாகி யொளிவிடு மணியே
நாதனே ஞான்வா ரிதியே.

முத்திநல்வித்தே முடிவிலா வின்பமே செய்யுந்
தானமேதவமே நின்னைநா னினைந்தேன்
றமியனேன்றனை மறப்பதற்கே. தாயுமானவர்,

ஆகவே தற்காலத்தில் உலகின்கண் துன்பமே மிகுதியும் விளங்குகின்றது. ஏனெனில் பகவான் மைத்திரேயர் உரைத்தவண்ணம் பல்லாயிரங்காலங்களாய் ஆண் பெண்ணாகிய மனிதவர்க்க முழுமையும் கடவுளின் சோதியை யுற்றுநோக்காமலே அதற்கு நேர் முறண்படவொழுகி, தத்தஞ்சுவயநலத்தையே பாராட்டியும், தம்முள்ளுமொருவருக்கொருவர் இடுக்கண்களை விளைவித்துக்கொண்டும் காலங்கழித்து வந்திருப்பதால், அவற்றின் கரும பலன்களான துன்பங்களை யிப்பொழுதிவர்களனுபவிக்க நேர்ந்திருக்கின்றதேயன்றி வேறன்று. இவ்விதமாய் பிரபஞ்சமுழுவதும் ஏற்படுத்திக்கொண்டிருக்கும் கருமபாரத்தைத் திடீரென நினைத்தவுடன் நீக்கிக்கொள்ளல் சாத்தியமாகாதாதலின், அவற்றைச் சிறிதுசிறிதாய் அகற்றிக்கொள்ள முயலுவதே மேன்மை. ஆயினுமிதற்கு நீண்டகாலஞ்செல்லுமேயென நீவிர் மயக்கமுறல் கூடாது; ஏனெனில் கடவுளும் உலகிலெங்கு மானிடர்க்கு ஆனந்தமுண்டாகும்வண்ணம் வியவஹரிக்கின்றனரெனுமுண்மையை நீங்கள் மனத்திற்கொள்ளல்வேண்டும். ஆனந்தமயமேயான தனது சோதியைப் பிரகாசிக்கவொட்டாது மறைக்கும் அந்தகாரத்தை மாநதரின் இருதயங்களினின்றும் துடைத்து அங்கெல்லாமின்பமும் பிரகாசமுந் தோன்றுமாறு கடவுளே பிரதிநிமிஷமும் முயலுகின்றனரன்றோ! * அவ்விதமே கடவுளொடைக்கியமுற்ற குருதேவரும் தாரணியில், ஆண்,

* என்னை வாவாவென் றுலப்பிலா வானந்தமான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே!
கள்ளமே தூரக்குந் தூவெளிப் பரப்பே!

தூயதான துரிய வறிவெனுந்
தாயுநீயின்பத் தந்தையு நீயென்றாற்
சேயதா மிந்தச் சீவத் திரளன்றோ!
வாயும் பேரொளி யான வகண்டமே!

கன்மமேது கடுநர கேதுமேற்
சென்ம மேதெனைத் தீண்டக் கடவதோ
வென் மனோரத மெய்தும் படிக்கரு
ணன்மை கூர்முக்க ணாத னிருக்கவே.

தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்க மாயெனக் கானந்த மாகியே
போக்கி னோடு வரவற்ற பூரணந்
தாக்கி நின்றவா தன்மய மானதே.

தாயுமானவர்.

பெண், பாலர் முதலிய யாவருக்கும் கூடியவளவு மகிழ்ச்சியை யேயளித்துவரச் சதாகாலமுமுயன்று வருகின்றனர். ஆதலின் இவ்வழியிற் செல்லத்துணிந்த நீங்களும் ஸ்ரீ குருதேவனுக்குத் தகைய தொழிலிற் சகாயத்தைச் செய்துவருதலைக் கடமை யாகக்கொள்ளல் வேண்டுமன்றோ!

இனி வெறுஞ் சம்பாஷணைகளால்மட்டும் பிறருக்குச் சந்தோஷமூட்டல் சாத்தியமாகாதன்றோ! பின்னை இடுக்கண்களுற்ற ஜனங்களுக்குத் துன்பத்தை விளைவிக்கும் நிலைமைகள் யாவற்றையும் நீக்கி அவர்கட்குத்தக்க ஜீவனோபாயங்களை நிருமித்துவைத்தும், இன்னுமநேக சௌகரியங்களையும் நாம் ஏற்படுத்திக் கொடுப்பினன்றி, அவர்கள் க்ஷேமப்படு நாட்கள் கிட்டுதல் எங்ஙனமாகும்? ஆதலின் உங்கட்குத்தக்க வயது வந்த பின்னர், உலகத்தை க்ஷேமப்படுத்தும்பொருட்டு அநேக நற் காரியங்களை நீங்கள் செய்யவேண்டிவரும். நீங்கள் சந்திக்கு மனிதர்க்கெல்லாம் உலகினில் நிகழுந்தீமைகள் யாவற்றையும் நீங்கள் எடுத்துரைக்கவேண்டியிருக்கும். ஆனால் இவ்வித வேலை சிறிதுகாலஞ்சென்றபின் நீங்கள் செய்யவேண்டியதுவாகுமாதலின், வயதில் முதிர்ந்த எம்போலியருக்கு இஃது கடமையாவதுபோல், நுங்கட்கிவை யிப்பொழுது நிறைவேற்றவேண்டியதாகாது. இப்பொழுதே உலகின் துன்பங்களை நீக்கமுயற்சி செய்யுந்தொழில் நுங்களுடையதாகாது. ஆயினும் நீங்கள் இச்சமயத்தில் சிறுவர்களாயிருக்கும்பொழுதே சந்தோஷத்தால்நிரம்பியவெண்ணங்களை யுண்டுபண்ணிக் கொள்ளுவீர்களாயின் உலகினருக்கு விசேஷவுபகாரத்தை விளைவித்து வருதல் கூடுமென்பதை மறத்தல்கூடாது. ஆதலின் நீங்கள் யாவருமானந்த நிரம்பியே விளங்கல் வேண்டும். ஏனென்பீராகில், மற்றுமோர் எளிதில் விளங்குங்காரணமு மதற்குரைப்பேன். நமது குருநாதன் ஆனந்த நிரம்பியவ ராதலினவர் உலகத்தை தரிசித்ததற்கேற்ற ஜன்னலாய் நீங்களொவ்வொருவரு மாகிவிடல் வேண்டுமன்றோ! இவ்வாறே குருமூர்த்திகள் யாவருஞ் சந்தோஷமயமா மியற்கையுடையவர்களேயென வறிந்துகொள்க. அவர்கள் தங்களிடம்

விளங்கு மடங்காவானந்த வெள்ளத்தை யுலகினருக்கெல்லாம் பகிர்ந்துகொடுக்க விரும்பியே நிற்கின்றனர். நீங்கள் நமது நாட்டின் பெரியோர் சரித்திரங்களை ஒழுங்காய்த் தெரிந்துகொண்டவர்களாயின், பகவான் ஸ்ரீபுத்தர் 'பிரதிதினமுங் காலையில் யோகநிட்டை கூடுவாரா யிருந்தனரென்பதைக் கேள்வியுற்றிருப்பீர்கள். அன்றியுமவர் துயிலைவிட்டெழுந்தவுடன் தவராது தினந்தோறுஞ் செய்துவந்த முதல்வேலையாவது பிரபஞ்சமுழுவதுமோடிப் பரவும்வண்ண மானந்தமயமான பேரலைகளை சிரிட்டித்தனுப்பி வருதலேயென்க. அவரடிக்கடி திருவாய்மலர்ந்தருளிவந்த விஷயமாவது: "பிரதி ஜீவனுமடையும்படி ஆனந்தமென்பது கரையில்லாவாரிதிபோன்று இயற்கையில் நிரைந்து நிற்ப துண்மையாதலின், தனது சீடர்கள் அவரவர் சென்றவிடங்களிலெல்லாம் இவ்வானந்தஞ் சிறிதுசிறிதாகவது உலகினருக்குள் பரவிவருமாறு முயலுதல் வேண்டும்". என்பதே. ஆகவே இந்நாளிலுங்கூட எவராயினும் பௌத்ததேசத்திலுள்ள சந்நியாசி யொருவர்க்கேதேனு மோருபகாரத்தைச் செய்தால், அச்சந்நியாசியு முடனே அவரறியாவண்ணம் தனக்குள்ளேயே "உமக்குச் சுகமுண்டாகட்டும்" எனப்பாலிபாஷையில் திரும்பி யாசீர்வாதத்தைக் கூறியருளும் பழக்கமேற்பட்டிருக்கின்றது. அச்சந்நியாசிக்கு ஒருவர் நமஸ்காரஞ்செய்து வணங்கினால் அப்பொழுதும் பாலியிலே முற்கூறிய வாசீர்வாதத்தையே யவர்செய்வர். இம்மாதிரி யொவ்வொருவரும் தாந்தாம் பிறரைநோக்கி இவ்வானந்தமேயுண்டாகும்வண்ணம் வாழ்த்திக்கொண்டு வந்தனைகள் செய்துவருதலே பகவானுன ஸ்ரீ புத்தர் மானிடர் மத்தியில் நிலைபெறவேண்டுமென தனது திருவுள்ளத்திற்கருதிய வழியின் ஓர் சிற்றறிகுறியாகும்.

* மனமா மாயைக் குடிகெடுக்கத் துசங்கட்டிக்
கொண்ட மோன குருவேயென் றெய்வமே
கோதிலாத படியெனக் கானந்த வெள்ளம்வந்து
தேக்கும்படி யெனக்குன் றிருக்கருணைப் பற்றுமாறே
யடியெடுத் தென்முடியி லின்னம் வைக்கவேண்டு
மடிமுடி யில்லாத வகண்ட வாழ்வே!

இன்னுமிவ்விதமே ஸ்ரீ கிருஷ்ணபகவான் உலகெலாமுருக்கிய தனது வேணுவாத்தியத்தினாற் கானம் செய்யும்பொழுதெல்லாம் ஜந்துக்கள் யாவருக்கும் அளவிலாவானந்தம் ஏற்பட்டதன்றோ! அக்காலை நாற்றிசையினின்று மானிடர் யாவருமோடி வந்தவரைச் சூழ்ந்துநின்றவரது குழலினின்னிசை யோசையைப் பருகினரன்றோ! அவரது இயற்கையே ஆனந்தத்தால் நிரம்பியதாதலின் அவர் நின்றவிடமெல்லாம் சகல பக்ஷிகளும் அவரருகிற் சேர்ந்து நீங்கமுடியாமலே சூழ்ந்துநின்றன. இனி கிறிஸ்துநாதரைப்பற்றிய சரித்திரங்களிலும் இவ்வாறே புலகினருக்கு அவர் ஆனந்தமளித்துவந்தனரென்பது கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் இம்மகாபுருடர் உலகிற்கு ஆனந்தமூட்டிய வழியானது முன் சென்றவர் அனுட்டித்த வழிகளினின்றுஞ் சற்று வேறுபட்டதுவாத் தோன்றியது. ஏனெனில் கிறிஸ்துநாதர் யூதரெனுஞ் சாதியார் மத்தியிற் றோன்றியபொழுது அஜ்ஞனங்கள் அவருக்கு பலவிதங்களில் ஹிம்சைசெய்தும், அவரதுலகம்புரக்குந் தொழிற்கிடைஞ்சல் விளைவித்தும் வந்தனராதலின், அவர் தனதியற்கையாம் ஆனந்தத்தை மிகச்சிறிதே புலகினருக்களிக்கச் சாத்தியமாயிற்று. ஆயினுமவர் அக்குரூர சிந்தையுடைய மாந்தருக்கும் ஏற்றவாறு தன்னானந்தத்தையளித்தே சென்றனர். அவர் திருவாய்மலர்ந்து 'எனது சாந்தியை நுங்கட்கு மளிப்பேன்' என்றுங் கூறினரன்றோ! இனி குருதேவரதியற்கையிற் றங்கிநிற்குஞ் சாந்தியாவதியாதோவெனிற் கூறுவேன். அஃது சாமானியவுலகினர் தவறுதலாய்ப் பேணிவரும் தொழிலற்றதும் பிரயோஜனமற்றதுமான சோர்வு, களவு மயமாம் போலிச் சாந்தியாகாது; பின்னைச் சந்திரோதயகாலத்தில் பகற்போல்க்

---

அகிலநிகில பேதமனைத்தி னுள்ளுந் தானாகி
யறிவானந்தத் தேனாகிப் பாலாகிக் கனியாய்க்
கன்னற் செழும்பாகாய்க் கற்கண்டாயத் திகழ்ந்தவொன்றே!
நானெனை நிற்குஞான ஞானமன் றந்தஞான
மோனமா யிருக்கவொட்டா மோனமின் றாகவேதான்
றேனென ருசிக்கு மன்பாற் சிந்தைநைந் துருகும்வண்ணம்
வானென நிறைந்தானந்த மாகடல் வளைவதின்றே.

ஆவுடியிற் பரமகுருவாழி யகண்டிதாகார வருளடியார் வாழி.

காயுநிலையில் நாற்ப்புறமுங்காணப்படும் பொருட்களியாவும் வெயின் முதலியவற்றின் குரூரமடங்கி சாந்தியான் மூடப்பட்டு விளங்கினும், தம்முட் பூரணவுத்ஸாஹ சந்தோஷங்கணிறைந்தே விளங்கி நிற்குமாபோல், சகல வீரியமுள்ளடங்கியதோர் சாந்தியேயாகுமென்க.

ஜீவன்முத்தி பதவியையடைந்த குருமூர்த்திகளில் ஒவ்வொருவரும் பிரதிதினமுமுலகின்மீது தன்னிடமிருந்து ஆனந்தமாமழையைப் பொழியும் வழக்கமேயுடையராவர். ஆதலினாற்றான் குருதேவரது சீடர்களான நீங்கள் யாவருமவ்விதமே உலகிற்கானந்தமூட்டும் பழக்கமடைந்துவரல் வேண்டியதுமவசியமாகின்றது. வாலிபராகிய நீங்கள் இவ்விளமைப்பருவத்திலேயே அவ்வானந்தந்தங்கும் தனித்தனி ஸ்தானங்களாதற்கு பழகிவரல் வேண்டும்; * ஏனெனில் பிற்காலத்தில் நீங்கள் பற்பல பெருங்காரியங்களை நிறைவேற்றவேண்டி வருஞ்சந்தர்ப்பங்கள் நேரும்பொழுதெல்லா முழுவதுஞ் சந்தோஷங்கொண்டவர்களாயிருத்தற்கு தகுந்த சௌகரியங்கள் நுங்கட்குக் கிடைப்பது அரிதாகும். இப்பொழுதோ அவ்விதமின்றித் தகுந்த சம்ரக்ஷணையுங்கட் கேற்பட்டிருப்பதாலும், நுங்கட்கெவ்விதத் துன்பமுமணுகாவண்ணம் எம்போலியர் விசேஷ ஜாக்கிரதையுடனுங்களை யிப்பொழுது கட்டிக்காத்து வருவதாலும், பூரண சந்தோஷமே கொண்டொழுகிவரல் நுங்களது பெருங்கடமை யாகுமன்றோ!

இனி வெறுஞ்சந்தோஷத்திற்கும் விசேடமாயவானந்தத்திற்குமுள்ள வேற்றுமை யாதென்பதை யுங்கட்கெடுத்துரைப்பேன். அன்னியர் தமக்குப் பரிசுகளளித்தல், பிறர் தம்மாட்டன்பு செலுத்தல் முதலியன நிகழும்பொழுது மானிடர் கொள்ளும் திருப்தியே சாமானியமானதோர் சந்தோஷமாகும். இவ்

தெய்வநல்லருள் படைத்த வன்புரொடு
சோரவுங்கருணை ... ர்வையோ.
தெரிவதற்கரிய பிரமமேயமல சிற்சுகோ தயவிலாச[illegible]ம!
இவ்வன்புருவ மாகியன்பரொடு மின்பவீட்டினி லிருப்பனே.

வகையுவகையாவு முற்றுநோக்கில் நமக்குப்பாஹ்யமான வெளி யுலகத்தின் பொருட்களாலாக்கப்பட்டதுவேயாகும். ஆனாலுண் மையான திருப்தியாகுமானந்தமோவெனின் நம்முள்ளுறையி னின்றுமே கிளம்புகின்றது. உதாரணமாய், பூமியினுண்ணின் றுங் கிளம்பி யிரவும்பகலுமிடைவிடாது கொப்புளித்து வெளி யேறுமோர் "ஊற்றுப்பெருக்கை"ப் பாருங்கள்! இவ்வாறேயாகு நமது யதார்த்தமானவானந்தமுமென்க. அஃது நம்முண்ணின் றுமேயூறுவதாய் பிறர் நம்மாட்டுப்புரியத்தகு மெச்செயல்களா லுமாளுததாகவும், காலத்தால் பாதிக்கப்படாத்தாயும் நிலைநிற் குமோரியற்கையேயாகும். ஆதலின் பிறர் நமக்குச்சந்தோஷ மூட்டும்பொழுதெல்லாம் அதன் மூலமாய் நமதுண்மையானந் தமும் வெளிக்கிளம்பி பிரகாசிக்கின்றது. ஆனால் பிறரிவ்வண் ணம் நமக்குச் சந்தோஷமளியாவிடினும், நமதியற்கையானந்த மானது எப்பொழுதுமொரேவிதமாய் நம்முள்ளுறையில் ஊறிக் கொண்டு நின்றே, தனதுத்ஸாஹத்தை பஹிரங்கமாகவோ, அல்லது சற்றே மறைவுடனேயோ, நாற்புறத்திலுஞ் செல்லுமாறு விடுத்துக்கொண்டு விளங்குகின்றது. நம்மொவ்வொருவருள் ளும் ஆனந்தமானது அந்தரங்கத்திலாழ்ந்து நிலைபெற்றதோர் அம்சமேயாகும். ஒவ்வொரு ஜீவனிடத்திலும் மானசாம்சத் தையுந்தாண்டிநிற்கும் 'புத்தி' யெனுந்தத்வமுண்டென்பது நுங் கட்குத் தெரிந்தவிஷயமன்றோ! ஆதலினுண்மையில் நீங்கள் காமமும், மனது யிவ்வம்சங்களியாவற்றையுந்தாண்டியே நிற்குஞ் ஜீவர்களேயாவீர்கள். இன்னுமப்பாற் சோதிக்கின் நுங்களியா வரிடமும் கடவுளின் சுபாவமாம் அம்சமும் தங்கிநிற்கின்றதை யுங் காண்போம். இக்காரணங்களால் உங்களொவ்வொருவரி டத்திலும் கடவுளினியற்கையேயானவானந்தமென்பது தங்கி நிற்கின்றதென்பது பெறப்பட்டது. * ஆனால் இவ்வானந்

தனையென்று மறந்திருப்ப வருள்வடிவானது
மேற்றட்டி யெழுந்திருக்கும், இன்பந்தன்மயமேயதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்; மற்றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்தவாதனையா
மாசையொழி மன்னெரு சொற் கொண்டே. தாயுமானவர்.

தம் நமதியற்கையினுண் மிகவாழத்திற்றங்கி நிற்கின்றமைபற்றி அஃது வெளியே கொப்புளித்து ஊற்றுப்பெருக்கமாகி யாவ ருமறிய பஹிரங்கமாய் விளங்கவேண்டுவீராயின், அவற்றிற்கு விரோதமாய தடைகள் நம்மாலேற்படாவண்ணமுயன்றுவரு வது நுங்கடமையாகுமன்றே!

இனி யித்தடைகளியாவு நீங்கி யிவ்வானந்தம் வெளிக்கி ளம்புமாறு நாமுயலுவது மெவ்வாறெனை நீவிர் வினவுவீர்கள். இதற்கும் விடையளிப்பேன். உபகாரமயமான சிந்தைகளைச் சிந்தித்தலே நமதியற்கையிற் றங்கிக்கிடக்குமானந்தத்தினூற்றுக் கள் பெருகிவருவதற்குற்ற வழிகளி லுத்தமமானவைகளாகும். நீவிர் பிறர்க்குபகாரம் புரியக் கருதுவீராயின், அப்பொழுதுண் மையில் அவ்வுதவியைச் செய்யப்புகுந்தது நீங்களல்ல, பின்னைச் சதாகாலமும் யாவரையுங் காத்துவருங் கடவுளே நும்மூலமாயவ் வழியில் முயலுகின்றனென்றறிக. எப்பொழுதாயினுநீங்கள் உங்களை மறந்து உலகிற்கோர் பேருதவி செய்யத்துணியுந்தருணத்தில் கடவுளுநும்முட்கலந்து நும்மொடுமுழைத்து வருவரென்பதிற்ற டையுமுண்டோ? அச்சமயங்களிலெல்லாம் நுங்களது உதவிபு ரியுஞ்சத்தி கடவுளின் சத்தியோடு கலந்து விருத்தியடைகின் றது. இவ்விதமே பிறர்க்குபகாரஞ்செய்வதற்கு நினைவு பூணி னுங்கூட நமது சத்தி விருத்தியடையுமெனக்கொள்க. ஏனெ னில் அத்தருணங்களிலெல்லாம் கடவுளுந்தனது நினைவையு நமது நினைவுடன் கலப்பிக்கின்றன். நாம் மிகவுயர்ந்த நினைவு களை நினைப்பின் அப்பொழுது கடவுளும் குருநாதனுமே நம்

---

சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிகுத்த தீமை விளைய விளக்கின்றே
னகத்து ளாரமு தாமைய நின்முத்தி
சுகத்தி னுன்வந்து தோய்வ தெக்காலமே.

பொருளைப்பூவைப் பூவையரைப் பொருளென்றெண்ணு மொருபாவி
யிருளைத்தூர்த்திட் டொளிநெறியை யென்னுட்பதிப்ப தென்றுகொலோ
தெருளத்தெருள வன்பர்நெஞ்சந் தித்தித்துருகத் தெவிட்டாத
வருளைப்பொழியுங் குணமுகிலே! யறிவானந்தத் தாரமுதே! தாயுமானவர்.

மொடுங்கலந்து நினைக்கின்றனரெனு முண்மையை யுணரின் நமக்குண்டாகுமானந்தத்திற்கு மளவுமுண்டோ? *

ஆதலின் எப்பொழுதும் பரோபகாரமயமாஞ்சிந்தனைகளையே நீவிர் நினைந்துவரல் மிகவுமவசியமாகின்றது. இனி யிவ் வாறுபகாரமாயிருத்தலுமெப்படியோவெனினுரைப்பேன். சிறுவர்களாநுங்கட்குச் சுலபமாய் விளங்கற்பாலனவாய் இவ்விதவுதவிபுரியும் வழிகளிற்சில வாய்த்திருக்கின்றன. இவையாவும் நுங்கள் வீட்டின் கண்ணேயே நுங்கட்குக் கிடைப்பனவாகும். "சகலதர்மமும் முதலில் அவரவர்களிருப்பிடமாகிய சொந்த வீட்டிலேயே லபிக்கு"மெனும் பழமொழி மிகவுமுசிதமானதாகும். இவ்விதமே சகல நற்குண சம்பத்துக்களும் முதன்முதல் அவரவர்கள் கிருகங்களிலேயே வாரம்பமடைகின்றன. அன்பு பிரதமத்தில் ஒருவன் தன்வீட்டிலுள்ளாரிடத்தில் காட்டவாரம்பிப்பதாற்றான் உத்பத்தியைப்பெறுகின்றது; அவ்வாறே யுபகாரசீலமா நற்குணமுமாமென்க. நீங்கள் உங்கள் கிருஹங்களில் நுங்கட்கருகிலுள்ளார்கட்குதவிபுரியக் கூசுவீரேல், தூரத்திலுள்ளார்க்குள்ளபடி நீங்களுதவுதலுமெங்ஙனம் வாய்க்கும்? ஆதலின் இவ்வுபகாரமாங்குணத்தை வளர்த்துக்கொள்ளு மார்க்கமா

---

என்னுடையுயிரே, என்னுளத்தறிவே!

உளவறிந்தெலாநின்செயலாமெனவுணர்ந்தோர்
களவிலானந்த மளித்தனை.

உற்றுணர்ந்தெலா நியலதில்லையென்றுனையே
பற்றிநின்றன ரெந்தைநின்னடியர்.

நானென்றொருமுதலுண்டந்த நான்றலைநாணவென்னுட்
டானென்றொருமுதற்பூரணமாகத் தலைப்பட்டொப்பி
லானந்தந்தென்னறிவை யெல்லாமுண்டவசநல்கி
மோனந்தனைவிளைத்தாலினி யாதுமொழிகுவதே.

எனக்கோர்சுதந்தரமில்லையப்பா வெனக்கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோதகற்றும்பரம்பொருளே யென்னைவாழ்வித்திட
நினக்கேபாரநின்னை நீங்காதபூரணநீள்கருணை
தனக்கேபரமினிச்சும்மா விருக்கத்தகுமென்றுமே.

வது நமது *சமீபத்திலுள்ளவர்களான வீட்டிலுள்ள நம்மூத்தோரையும் நம்மினுர்தாழ்ந்தோரையு மெவ்விதமுபகரிப்பதென்பதைச் சிந்தித்துவருதலே யாகுமன்றோ!. நுங்கள் குடும்பங்களொவ்வொன்றிலும் நுங்கடாய்தந்தையுரா நுமது மூத்தோருக்கிணங்கி அவர்களுக்குங்களால் பலவித செளகரியங்கள் நேரும்படி யுழைப்பதவசியமென்பதை நீங்களறிவீர்கள். ஆகவே நீங்கள் அவர்களிடுங்கட்டளைகளை நிறைவேற்றியவர்களுக்குதவி புரிந்துவரல் வேண்டும். அப்பால் சரீரத்தி னிளமையாற்றாழ்ந்தோரல்லராயினும், நுங்கட்கான்மானுபவத்தில் கீழோர்களேயான வீட்டுவேலைக்காரர்களின் விஷயத்திலும், மேற்கூறியவண்ணமே அவரவர் தத்தமக்குறிய கடமைகளை யொழுங்குடனிறைவேற்றிவருதற்குதவிகளையு நீவிர் புரிதலே வேண்டும். அவர்களுங்கள் விஷயத்திலதிகமாயுழைக்குங்காரணத்தால்த் தங்கள் சொந்த கடமைகளினின்றும் அறவே வழுவிச்செல்லாவண்ணம் நீங்களவர்களிடம் பக்ஷமாலோசனைகளைக் காட்டிவரல் வேண்டும். உங்கள் வீடுகளிலெப்படியோ யப்படியே பாடசாலைகளிலும் நீங்கள் உபகாரங்களையே புரிந்துவரல் அவசியமாகின்றது. பாடசாலைகளில் நீங்களேனைய சிறுவர்களோடிணங்கிச் சிலகடமைகளை மீறாது நிறைவேற்றுதல் வேண்டும். நீங்கள் தங்கும் வகுப்புகளிலுபாத்தியாயர் பாடங்களைக் கற்பிக்குஞ்சமயமானது, நுங்கட்குமட்டுமல்லாது மற்றுமியாவர்க்கு மிகவுமுருசியுள்ளதுவாயேற்படுதற்கு எவ்விதம் நும்முபாத்தியாயருக்கு நீவிர் சகாயஞ்செய்தல் கூடுமெனவாலோசித்துவரல் வேண்டும். இவ்வாறே நுமது வகுப்பிற்குமட்டுமல்லாது பாடசாலை முழுவதிற்குமே பேருபகாரமாயுழைக்கத்துணிவது நுங்கடமையேயாகுமன்றோ! ஆகவே ஏனைய சிறுவர்களுடனு நீவிர் கலந்து விளையாடுங்காலையிலும், நீங்கள் மட்டுஞ் ஜயமடை யவே ணுமெனுமாசையைக் கொள்ளாமல், நும்மொடுஞ்சேர்ந்த சகல பிள்ளைகளுநிரம்பிய பாடசாலை முழுமைக்குமே ஜயத்தை வருவிக்குமுபாயங்களைத் தேடுவீரா யவ்விளையாட்டை நடத்திவரல் வேண்டும். இவ்விதமாய் பிறர்க்குதவிபுரியு நாட்டமே நாளடைவில் நுமதியற்கையிலமர்ந்து நிலைபெறுதல் வேண்டுமென்க. ஏனெனில் எங்

கெங்கு பரோபகாரச் சிந்தையுண்டோ வங்கெல்லாமச்சிந்தை யினிருதயத்திலானந்தமும் வீற்றிருக்குமென்க. *

ஆகவே நீங்கள் பிறர்க்குபயோகமாம் நற்காரியமேதையாவது செய்துகொண்டே வருவதால் சதாகாலமுமானந்தமடைந்தவராய் நிற்றற்குத் தகுதியைப் பெறுதல் வேண்டும். முதன் முதலிவ்விதம் செய்யப்பழகுவதால் ஆனந்தத்தின் ஒரு சிறு விதை யாரம்பத்தில் நுங்கள் மனங்களில் வேறூன்றி நாளடைவில் இலை பூ முதலிய மேற்பலன்களை யளிக்குமன்றோ! ஆதலின் வீட்டிலும் பாடசாலையிலும் உபகாரங்களைப் புரிந்துவருவதற்குபாயங்களைச் சிந்தித்துவரலே கடமை. இத்தகையவற்பவுதவிகளைச் செய்துவருதலிற் பழகித் தேர்ச்சியடைந்தாலன்றோ பிற்காலத்தில் ஸ்ரீ குருதேவருக்குகந்த சகாயஞ்சேவைகளைச் செய்துமுடித்தற்குத் தகுதியுங்கட்குக் கிட்டும்? பெரும்பெருங் காரியங்களைச் செய்துமுடிப்போமெனும் வீண் கனவுகளைக்கண்டு பொழுதுபோக்கி, யிப்பொழுதே நாமிருக்கும் ஸ்திதிகளில் நம்மாற்செய்து முடிக்கற்பாலதாய் கிடக்கும் பற்பல சிறு காரியங்களைச் செய்யாதொழிதல் ஒருபோழ்தும் பயனுளதாகாது. ஆதலினிதுகாறுங்கூறி முடித்தவற்றால் நீவிர் தெளிந்துறுதி கொள்ளவேண்டியது யாதெனில், உங்களியற்கையிலேயே தங்கிநிற்கும் சாசுவதமாமானந்த நிலையைத் தேடிக்கண்டுகொள்ள விச்சிப்பிராயின் அதற்கு வழியாவது உங்களருகே செய்துமுடிக்கவேண்டியதாய்த் தென்படுமுதவிகளியாவற்றையுஞ் செய்

---

* அன்புஞ்சிவமு மிரண்டென்பரறிவில ரன்பேசிவமாவ தாருமறிகில ரன்பேசிவமாவ தாருமறிந்தபி னன்பேசிவமா யமர்ந்திருப்பாரே.
திருமந்திரம்.

இன்பமயனீச னின்பம்விளைத்தலாற்
சம்புவெனும் பேருற்தகும். வள்ளலார்.

எவ்வுயிருமென்னுயிர்போ லெண்ணியிரங்கவுநின்
றெய்வவருட்கருணை செய்யாய்பராபரமே.

கொழுந்தில்வயிரமெனக் கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண் டாகும்பராபரமே. தாயுமானவர்.

துவாலேயன்றி வேறன்றென்பதே. * இவை யாவும் நமது வீடு கூளிலேயே நமக்குக் கிடைக்கின்றனவென்பதிற் சந்தேகமு முண்டோ?

இனிச் சந்தோஷநிறை நினைவுகளியாவும் நம்முண்ணின்றும் வெளிநோக்குடையவைகளாகவே கிளம்புவனவாகின்றன. ஆரா ய்ந்து பார்க்கின், பூரண சந்தோஷங்கொண்ட நினைவொன்றை நீங்கள் நினைக்கின், அஃது அன்னியரொருவரைப்பற்றியோ, அல்லது அவருக்குச் செய்யவேண்டிய வுதவியைப்பற்றியோ நீங்கள் நினைக்கு நினைவேயாகுமென்பதை யறிந்துகொள்வீர்கள். ஆதலின் எப்பொழுதாயினு முங்களைப்பற்றி, யுங்களது சுகதுக்கம் அபஜயமாதிகளைக் குறித்ததாய நினைவென்று நுங்களிடந்தோன் றுமாயினுடனே யஃதை மாற்றிக்கொண்டு நுங்கட்கு வெளியே யன்னியர் யாவரையேனும் நீவிர் நினைத்தல் வேண்டும். "எங்க ளைப்பற்றி நினையாமனிற்பது சாத்தியமாக வில்லையே"யென நீவிர் ஆக்ஷேபிக்கலாம். "எங்களுக்கு தம்மையே மறந்து நிற்கும்படி யவ்வளவு சந்தோஷங் கிடைக்கவில்லையே. என் 'செய்வது" எனவும், நீவிர் கூறுவீர்கள். அத்தகைய சமயங்கள் நேர்ந் துழி அவ்வெண்ணங்களை நீக்கிக்கொள்ள நீவிர் முயலுதலே வேண்டும். இதற்குற்ற வுபாயமாவது இத்தருணங்களில் யாவ ராயினு மன்னியரொருவரை நினைத்துக்கொண்டு அவர்மாட் டெவ்வகை யுதவிகளை நீங்கள் புரியலாகுமென்பதை யுடனே முழுமனதுடன் சிந்திக்கத் துடங்குதலே. இங்கு 'நமது' குரு நாதர் திருவாய்மலர்நதருளிய வசனங்களை நீவிர் ஞாபகத் திற்கு வருவித்துக்கொள்ளல் வேண்டும். அவையாவன: "எப் பொழுதாயினுமுங்கள் மனங்கள் நினைவற்றுச் 'சும்மாவிருக்க நேரின், அத்தருணங்களிலெல்லாமுடனே யங்குவருவித்துபயோ கப்படுத்திக்கொள்ளற்குத்தக்கனவாய் சில நினைவுகளை நீங்கள் தயார்படுத்தி நும்மனங்களுள்ளாழத்தில் வைத்துக்கொண்டே வரல் வேண்டும்" என்பதே. இவ்வித நினைவுகள் யாவும் அழ

---

* தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ்செய்பவர்
சிவஞானந்தனையணைய நல்லோர்பராபரமே! தாயுமானவர்.

கும் உபகாரமயமுமான நினைவுகளாகவே யிருத்தல் வேண்டு மென்பதே குருநாதனுந் திருவுள்ளத்திற் கொண்ட குறிப்பா கும், இவ்வித சமயங்களில் நீங்கள் யாவரும் மிகுந்த க்ஷேம தசைகளிலிருப்பதாற் சந்தோஷமே நிறைந்து நிற்பின், இச் சந்தோஷத்தை நும்முள்ளேமட்டு நிற்கும்படி விட்டுச் சும்மா விராமலதைப் பிறருக்கும் பகிர்ந்தளிக்கத் துணிதல் வேண்டும். நுஞ்சந்தோஷத்தை வெளியிற்காட்ட வுபாயந்தேடுவீராகி பிற ரெவருக்காவது ஓர் நிருபமெழுதல், அல்லது மற்றோர்வழியில் வே றொருவர்க்குதவிபுரியும் வழியுண்டோவெனச் சிந்தித்தல், இவை போன்ற கருத்துக்களை யுத்பத்திபண்ணிக்கொண்டு வருவீர்களா யின், நாளடைவி லிப்பழக்கத்தால் நும்மனங்களினுள்ளே யாழ மாய் மிகுசுந்தரமும் பரோபகார சீலமும் பொருந்தினவைகளான நினைவுகள் ஸ்வயமேயுதயமாகி வளர்ந்துவருவதை நீவிர் கண்டுபிடி த்துக் கொள்ளுவீர்கள். இவையாவும் வரவர விசேஷவுறுதியை யடைந்தனவாகி நும்மைக் கெடுக்குஞ்சிந்தனைகளான சத்துருக் கள் நும்மை வந்தெதிர்த்து கலகஞ்செய்யுங்காலை நீவிரோடித்தப் புவித்துக்கொள்ளற்குதவுங் கோட்டைகளாய் விளங்குவதிற்றடை யில்லை. ஸ்வய நலச்சிந்தை, துக்கமுதலிய நமது நற்காரிய துரோகிகளான சத்துருக்கள் நம்மை வந்தடைந்தாலப்பொழு தெல்லா மேற்கூறிய பெருமை, யுபகாரமிவைமயமான சிந்த னைகளாங்கோட்டைகளை நாமுலகக்ஷேமத்தின்பொருட்டு நம்மி டம் பழக்கத்தாலேற்படுத்திக் கொண்டிருப்போமாயின், அவ்வர ணுடைக்காப்புகளிற் பிரவேசஞ்செய்துகொண்டு சந்தோஷமி ழக்காமற்றங்கலாமன்றோ!

இனியிவ்வுண்மை யானந்தமென்பதனுள்ளு மூன்று அம் சங்கணிறைந்து நிற்கின்றன; அவையாவன: சுத்தமல்லது தூய்மை, சாந்தி, சக்தியல்லது வீரியமிவைகளே யென்க. ஆகவே யிம்மூன்றம்சங்களின் தன்மைகளைச் சிறிது சிறிதாய் நும்மனங்களின்கண் சிருட்டித்து வருவீராயின் அவற்றின் முதிர்ச்சியாகும் ஆனந்தமு மும்முள்ளுறைகளிற் கொஞ்சங் கொஞ்சமா யுற்பத்தியாகி வரும். இனியிம் மூவம்சங்களை நிருவித்துக்கொள்ளும் வழியாதோவெனில் கூறுவேன். முதலில்.

தூய்மையைப் பற்றிச் சிந்திப்போம். தூய்மையாஞ் சுத்தமும் உட்லிற்றூய்மை, இச்சையிற்றூய்மை, சிந்தையிலுந் தூய்மை யென மூல விரிவுகளுடையதாகுமன்றே! இன்றுங்கட் கியான் கூறுவான் போந்த விஷயமிவற்றுள் சிந்தையின் றூய்மையே யாகுமெனவறிக. முதன்முதனு மறிந்துகொள்வது யாதெனில் நமது நினைவில் கடுகளவேனு பிறற்குத்தீங்கென்பது தங்குமே யாயினஃது அசுத்திபெற்றதுவே யாகுமென்க. ஏனெனிலிவ்வித வசுத்த நினைவின்கண் ஸ்ரீகுருதேவனது பிரகாசஞ் சிறிதுகூட விளங்காதன்றே! தூய்மையாகு நினைவிற்றன் குருதேவன் தன துன்னத சுபாவத்தின் தன்மையைக் கொஞ்சமாவது பிரகாசித் தல் கூடும். ஆதலின் பிறரை நோக்கி யழுக்காறு, கோபமுஷ்ண மிவை சற்றேனுந் தங்குநினைவு நம்மிடமெக்காலமு முண்டாகா வண்ண நீவிர் ஜாக்கிரதை கொள்ளல்வேண்டும். இஃது ஓர் புறமாக, நுஞ்சிந்தையே முழுமையுந் தூய்மையடைந்து விளங் கும்படிக்கேற்ற நேருபாயங்க ளின்னவையென நுமக்கெடுத்துக் காட்டப்புகுவேன். *

இவ்விஷயத்தி லுங்கட் கியான் கூறப்போவது சற்றே புதி தாகவே விளங்கும். இதுவரை நீங்களிஃதைக் கேள்வியுற்றிரு க்கமாட்டீர்கள். ஆயினுமஃது மிகப்பூர்வகாலத்திய சமாசாரமே தவிர வேறன்று. அஃதாவது நுமது நினைவுகளிலுள்ள வசுத் தியை இயற்கையி லிவ்வுலகிலுள்ள சௌந்தரியமுள்ளுடைய வஸ் துக்களைப் போற்றிப் புகழ்வதால் போக்கடித்துக்கொள்ளல் ஆகு மென்பதே. இயற்கையாவது கடவுளால் படைக்கப்பட்ட புற் பூடு மிருகங்கள், ஆகாசமிவைமுதலிய சகல வஸ்துக்களுமே யாகு மன்றே! கடவுளாற் படைக்கப்பட்டனவு மின்றும் படைக்கப் படுகின்றனவுமான மேற்கூறியவைபோன்ற வஸ்துக்களையுற்றுநோ

* ஒளவியமிருக்கநா னென்கின்றவாணவ
மடைந்திட்டிருக்க லோபமருளின்மை
கூடக்கலந்துள்ளிருக்கமே லாசாபிசாசமுதலாம்
மவவ்விபகுணம்பல விருக்குமென்னறிவூடு
மெய்யனீவீற்றிருக்க விதியில்லை.

க்குவீராயின் * உங்களது நினைவுகள் யாவும் களங்கங்கணீங்கித் தூய்மையடைந்துவிடும். புஷ்பங்களை யுற்றுநோக்கி யானந்திக்கும் பழக்கத்தை நீங்களேற்படுத்திக் கொள்ளல்வேண்டும். புஷ்பங்கள் எவ்வளவு சுந்தரத்தன்மை பொருந்தினவை பாருங்கள்! ஒரு புஷ்பம்போன்ற வுருவத்தைக் கடுதாசியினாற் செய்யப்புகுவீராயி னப்பொழுதுதான் அதையுருவாக்குவது எவ்வளவு கடினமென்பது மதிலுள்ள வழகினருமையு முங்கட்குப் புலப்படும். இனியிவ்வித புஷ்பத்தையும் ஸ்ரீகுருநாதனது பிரகாசந்தங்குமிடமாய் பார்க்கும் பழக்கமுங்கட் கேற்படல் வேண்டும். ஏனெனில் புஷ்பத்தினிற் காணப்படுமழகும் குருதேவன தழகேயாகுமன்றோ!

இம்மட்டோ? புஷ்பங்கணிற்க, அப்பால் விருக்ஷங்களைச் சற்றுக்கூர்ந்து நோக்குமின். அங்கும் சௌந்தரிய நிறைவுக்குத் தாழ்ச்சியுண்டோ? சிற்சில மரங்களினு மழகுள்ள வஸ்துக்களே கிடையாவெனக் கூடச்சொல்லலாகுமன்றோ! இன்றுபோ லியான் ஞாயிற்றுக்கிழமைதோறு மிஜ்ஜன்னலடியி னுட்கார்ந்து அதோ தோன்று முயர்ந்த தென்னைமரங்களை வழக்கமாய் பார்வையிட்டு வரும்பொழுதெல்லாம் ஆகாயமளாவிய வவற்றினுச்சிகள் காற்றிலொய்யாரமாயாடிக்கொண்டு நிற்பதைக் கண்டவுடன் எனக்குச் சொல்லரிய வானந்த முதிக்கின்றது. இப்படியே 'இவ்வடையார்' ஸ்தலத்தில் கீழ்கோடியிலுள்ள கடலை, மாலையில் தரிசனம் செய்த பின்னர்த் திரும்பி வரும்பொழுது இருமருங்கு நிறையுயர்ந்த தெங்குகளின் வரிசைகளினூடே செல்லுவதைக் காட்டினுமானந்த மனுபவிக்கும் வழியுயர்ந்தது வேறெதுவுங் கிடைக்குமோ? இத்தென்னைகளிங்கு நாற்புறமு நெருங்கிநிற்பதற்கு மவை மத்தியில் நாம் சஞ்சரிப்பதற்கு முவமைதேடின், உயர் நெடுங்கால்கணிறைந்த பெரியதோரழகிய மூடத்தின் கன்னக்கால்களினூடே யுலாவுதலையே கூறுதல்வேண்டும்.

* பார்த்திடமெங்கும் பரந்தெழுசோதியை
யாத்தமதாகவே யாய்ந்தறிவாரில்லை. திருமந்திரம்.

இத்தேயத்தில் சூரியோதயாஸ்தமன சமயங்களினழகை யும் வருணித்த லெவராலுமுடியுமோ? ஆகாயத்தி லப்போதைக் கப்போது காணப்படும் பன்னிறமேகங்களி னழகுதானென்னே? இதோ வாழமற்றதுந் தீவிரவோட்ட மில்லாததுமான நமது அடையார் நதியினுங்கூட கூர்ந்து நோக்குவார்க்கு வனப்புத் தோன்றுமன்றோ! ஆகவே யிவ்வகை யியற்கையிலுள்ள வஸ்துக்க ளியாவற்றையு மிகுசுந்தர மமைந்தனவேயெனவு, மதனால் நாம் அவற்றை ஜடவஸ்துக்களென வலக்ஷியஞ்செய்யாது ஆங்கு தங்கி நின்று விலாசஞ்செய்யும் 'ரஸம்' எனும் சாரத்தை மதிப்பிட்டுப் போற்றி கவுரவத்துடனேயே யுற்றுநோக்குதலே மேன்மையென வுந் தெளிர்ந்துணருதல் வேண்டும். *

இனிப் பல்லாயிர வகையான மிருகவர்க்கத்தையு முற்று நோக்குவோம். இவ்விடத்தில் அழகுள்ள சிறு தவளைகளினங்க ளுலாவுகின்றன. இவற்றுள்ளொவ்வொரு சிறு தவளையும் எனக்கு வாய்த்த வேறொருவகை மித்திரனெனவே தென்படுகின்றது. ஆனாலிவ்வெனது மித்திரனுக்கு வாயில்லை, எப்பொழுது மெனைக் காணினுஞ் சிறிது பயந்தே திரிவன். ஆயினுமவனை யுற்றுநோக்கி யருமை பாராட்டுவார்க்கன்றி யவனிடமுள சுந்தரமுந் தோன் றுமோ? தோன்றாது. இன்னுஞ் சின்னஞ்சிறிய சிட்டுக்குருவி களும் மாடப்புறாக்களும் மற்றும் பல்வகைப் பறவையினங்களு

---

* அருளேசகலமு மாயபவுதிக
மருளேசராசர மாயவகில
மிருளேவெளியே யெனுமெங்குமீச
னருளேசகளத்த னன்றியின்றாமே. திருமந்திரம்.

அருட்கண்ணிலாதார்க் கரும்பொருடோன்றா
வருட்கண்ணுளோர்க் கெதிர்தோன்றுமரனே
யிருட்கண்ணினோர்க்கங் கிரவியுந்தோன்றா
தெருட்கண்ணினோர்க் கெங்குஞ்சீரொளியாமே. திருமந்திரம்.

காலினிலூறுங் கரும்பினிற்கட்டியும்
பாலினுண்ணெய்யும் பழத்துளிரதமும்
பூவினுள்நாற்றமும் போலுளனெம்மிறை
காவலனெங்குங் கலந்துநின்றானே. திருமந்திரம்.

முளவேயன்றோ! இவ்வனந்த ஜீவசமூகமும் எங்குநிறை யகண்டாகார வாழ்வாம் பரமனின் பிரகாசமா மம்சங்களேயெனு ஞாபகத்துடன் நீவிர் இவை யொவ்வொன்றையு முற்று நோக்கியவை யவற்றினிட மபிமானமும் பற்றுங்கொண்டோ ராதல்வேண்டும். அவையவை யெவ்வகையூணுடையன, அவைகளினமான வஸ்துக்களியாவை, பகன்முழுவது மவ்வவ்வினங்கள் எவ்வகைத்தொழிலைச்செய்து காலம்போக்குகின்றன, வென்பதையெல்லாங் கவனஞ்செலுத்தி யறிந்துணருதல் வேண்டும். இவ்விஷயத்தைப் பற்றிக் கூறும் புத்தகங்களைப் படித்தலும் கேட்டலும்வேண்டும். ஏனென்பீரோ கூறுவேன். அவற்றுள்ளெல்லா நிறைந்து விளங்கும் வஸ்து கடவுளேயாகையால் இத்தனி வஸ்துக்களிற் காணப்படுமியற்கையாகிய பரமனது வாழ்வை நீவிரெம்மட்டில் கூர்ந்து தியானிப்பீர்களோ அவ்வளவிற்கு நுங்கண் மனங்களும் மாசுகணீங்கித் தூய்மை யடையுமன்றோ! *

கூடியவரை வீட்டைவிட்டு வெட்டவெளியிலேயே சஞ்சரித்துலாவி யாகாயத்திலுள்ள மேகங்கள் முதலியவற்றை யுற்றுநோக்கும் பழக்கமுங்கட்கதிகமேற்படலே வேண்டும். காற்று தலையினு ரோமங்களையாட்டவு மழை முகத்தில் வீசவுமிடங் கொடுத்து வளருதல் வேண்டும். உலகில் நமக்கு நாற்புறத்திலும் விளங்குஞ் சகல வஸ்துக்களினழகையு முற்றுணர்ந்தறியு மனுபவ நுங்கட்குக் கிட்டலவசியமாகும். சில சமயங்களில் அரசாங்கத்தாரா லேற்படுத்தப்பட்டிருக்குஞ் சித்திரப்பொருட்காட்சிச்சாலைகளில் நிரம்பியிருக்கும் பொருட்களிலநேகம் நுங்கட்கானந்தம் விளைவிக்கக்கூடியனவாரும்; அப்படியே சித்திரப் படங்களின் சாலைக்குள்ளும் நீங்கள் சென்று பார்த்துவருதல் வேண்டும். லண்டன்மா நகரத்திலியான் வாசஞ்செய்தபொழுதெல்லாமெனக்கு மிருகக்காட்சிச் சாலைக்குச்சென்று அங்குவளர்க்

---

எங்குந்திருமேனி யெங்குஞ்சிவசத்தி
யெங்குஞ்சிதம்பர மெங்குந்திருநட்ட
மெங்குஞ்சிவமா யிருத்தலாலெங்கெங்குந்
தங்குஞ்சிவனருட் டன்விளையாட்டதே.

கப்பட்டுவருங் காட்டு மிருகங்களைக் கண்ணுற்று வருதலே பேரானந்த முண்டுபண்ணிற்று. அச்சாலையில் வைக்கப்பட்டிருக்கும் பிராணிகளி லொவ்வொன்றும் கடவுளின் சிருஷ்டியன்றோவென நீவிர் வியப்படைந்து புகழ்ந்து வரும்பொழுது நுங்களிருதயங்களியாவுமிகப் பரிசுத்தியடையு மென்பதற்குத் தடையில்லை. இவ்விதம் நாம் நமதுலக வாழ்க்கையின் பல விடுக்கண்களான் மனமுடைந்து களைப்படையுந் தருணங்களிலெல்லாம் மேற்கூறியபடி இயற்கையினழகு வாய்ந்த பொருட்பிராணிகளுளொன்றைக் கண்ணுற்றானந்திக்கப் புகுவது எத்தன்மைய தாகுமெனில், ஆபாஸகரமான கைத்தொழிலொன்றைச் செய்துமுடித்தா னொருவனுடனே தன்னுடம்பைச் சுத்தஞ்செய்வதற்கென தண்ணீரிற் குளிப்பதுபோலவே யாகுமெனக்கொள்க.

இவ்வுபாயங்க ளனைவற்றுள்ளு மிகவு மேன்மையானதுமியாதோவெனில் சிறு குழந்தைகளுடன் கலந்து வியவஹரித்தலே யாகுமென்க. நீங்களுஞ் சிறுவர்களேயாதலின் குழவிப்பருவந் தாண்டின பின் சின்னாட்களே நுங்கட்குங் கழிந்திருக்குமாதலால் அக்குழந்தைகளின்நிலைமைக்கு வயதின்முதிர்ந்தவெம்போலியரைக் காட்டினு நீவிர் சமீபித்திருப்பவரே யாவீர்களன்றோ! ஆனது பற்றி நீங்களுமிக் குழந்தைகட்குகந்த வுதவிகளைப் புரியத்தகுதியுற்றவரேயாவீர். சிறு குழந்தைகளினிடம் இயற்கையில் களங்கமற்ற பரிசுத்தி தங்கிநிற்கின்றதாகையினால் அவரோடு கலந்தவர்களது விளையாட்டிலுங் கல்விமுயற்சியிலு நீங்களுந்தலையிடுவீர்களாயி, நுங்களது நினைவுகளியாவும் பரிசுத்தியைப்பெறுமென்பதற்கையமேயில்லை.

இனிச்சாந்தமெனும் பெருங்குணத்தாலு நுங்கணினைவுகள் பரிசுத்தமடையுமென்பதை நீங்களறிதல் வேண்டும். 'பாலஸ்தீன்' நாட்டினில் வாசஞ்செய்த காலத்தில் பகவான் கிறிஸ்துநாதர் திருவாய்மலர்ந்தருளியதாவது "மானிடற்குள் கலகமுதலியன நீங்குமாறு சாந்தியைப் பரவச்செய்வோரே பரமபாக்கியம் பெற்றவராவர். ஏனெனில் அவர்களே கடவுளின் குமாரர்கள் என வழங்கப்படு

வார்கள்" என்பதே. சாந்தியைப்பற்றிய நினைவுகளியாவும் பரிசுத்தியை விளைவிக்கும். பரிசுத்தியெங்கு விளங்குமோ வங்கெல்லாங் கடவுளின் தன்மையுஞ் சிறிது புலப்படுமென்க. ஆதலின் எக்காரணத்தானு நீங்கள் எவர்க்காயினும் பொல்லாங்கு நினையாமலிருப்பீர்களாக. பிறர்க்குத் தீங்கிழையாதிருப்பது அத்துணை யுத்தமமன்று, பின்னைப் பிறர் தமக்குத் தீங்கிழைப்பரென்றெண்ணுதலே யடாது. எவராயினு நுங்கட்குத் தீங்கிழைக்குங் காலையிலும், அவர்கள் நும்மாட் டப்பொல்லாங்கைச் செய்யுமெண்ணத்தைக் கொண்டனரென நீங்கள் கொள்ளல் கூடாது. பின்னையவ்விதம் தீங்குசெய்தவர் அறிவின்றியவ்விதஞ் செய்தனரென வுணருதலே நியாயமாகும். உண்மையில் ஒருவன் தத்துவமுணரின் பிறர்க்குத் தீங்கிழைப்பனே? ஏனெனில் அவனுன்ம ஸ்வரூபமர்தலாலும், ஆன்மாவுட் சகலமு மடங்குமாதலாலும் தனதம்சத்திற்கே யொருவன் தீங்குறுத்தல் எங்ஙனமாகும்? இவ்வித காரணங்களால் பிறரிடமுள்ள வறியாமையினடியாப் பிறக்குந்துர்க்குணங்களைப் பாராட்டாமலே அவரிடமுறையு மான்மாவினியற்கையாமுத்தம சுபாவத்தையே பேணிப்போற்றுதலே யுங்களது கடமையாகும்.

இன்னு நீங்கள் கொந்தளிப்புள்ள கடலின் மத்தியிலுள்ள அசைவற்றதோர் குன்றம்போலுஞ் சலனமடையாத சாந்தியைப் பெற்றவராய் விளங்கல்வேண்டும். நெருநலியான் "ஊழிதோறு மழியாப்பெருங்குன்ற"மாகு மகாவஸ்துவைப்பற்றிப் பேசினேனன்றே! இவ்விதம் நீங்களும் ஓர் அசைவற்ற குன்றைப்போல் உறுதியடைந்தவர்களென நுங்களையே பாவித்துக் கொள்ளல் வேண்டும். ஸ்ரீ குருதேவனது சீடர்களான நீங்களு முங்கள் காலத்தில் சில பெருங்காரியங்களைச் செய்துமுடிக்கவேண்டியிருக்குமாகையால் இவ்வுறுதியுங்கட்கு மிகவின்றியமையாததுவேயாகுமன்றே! அப்பொறுப்புகளுக் கேற்றவாறு அவற்றை நிறைவேற்றற்குவேண்டிய பலமும் குருதேவனிடமிருந்து நுங்கட்குக் கிட்டுமாதலின் நீங்கள் கவலைகொள்ளல் அவசியமாகாது.

ஆதலின் நீங்கள் ஸ்திரபுத்தியுடன் அசையாவுறுதிகொண்டோரா ய்ச் சாந்தி நிரம்பிய வுள்ளம்படைத்து விளங்கலே வேண்டும்.*

அப்பாலு நீங்கள் இவ்வுயர்நலம்பொருந்திய சாந்தியைப் பெறவேண்டின் பின்னுங்கூறுவேன். எவரிடமிருந்தாயினு நுங் களை நீக்கிக்கொள்ள நினையின் அவரொடு நும்மை முன்னிலுமதிக மாயிணைப்பித்துக்கொள்ளும் நினைவுகளையே நினைந்துவருதலும். அவரையு நுங்களையும் வேறுபடுத்திப் பிறிவுசெய்துவிடுபவைகளை யறவே நீக்கிக்கொள்ளுதலு மவசியமாகும். "அவருநானு வேறு பட்ட சுபாவமுள்ளவர்கள்" எனு நினைவேனுங்களிடம் நிகழுதலா காது; பின்னை "இவ்விஷயங்களிலெல்லாம் நாங்களிருவரு மொரே தன்மையர்களன்றோ"! எனச் சிந்தைகொள்ளலே வேண்டும். ஆக வே பிறருக்கு நமக்குமுள்ள ஐக்கியாம்சத்தைக் காட்டுங்குணங்க ளையே பொறுக்கியெடுத்துக்கொள்ளல் வேண்டும். இவ்வழிகளை யனுஷ்டானஞ்செய்துவரத் துணிவீராயின் நுங்கட்குப் பிற ரோடு மைக்கியமல்லதிணக்கமடைந்துகொள்ளுமிரகசியம் நாள டைவிற் கைகூடும். இஃது குருதேவன் நீவிர் அறிந்துகொள் ளவேண்டுமென விச்சைகொண்டிருக்கும் விஷயங்களில் முக்கிய மானதொன்றாகும். இவ்விதமன்னியரொடு மிணைதலாவது அவ ரொடுங்கலந்து சிறு பெருங்காரியங்களை நிறைவேற்ற முயலு தலேயாகும். காரியங்களை நிருவஹித்து வருங்காலை நுங்களொடு மிணைந்திருக்கு மன்னியரிடந்தங்கி விலாசஞ்செய்யுங் கடவுளி னம்சமாகும் அவரதியற்கை யல்லது சுபாவத்தை நீங்களுமறிந்துகொண்டாற்றான் அவரொடுமிணங்கி நீவிர் வியவஹரிப்ப வராவீர். ஒருவரிடம் பல குறைகளொடு மொரேயொரு நற் குணம்மட்டுமிருக்கலாம். குருதேவனிடம் நீவிர் சீடர்களாகியடி மைபூண்டொழுகி வருகின்றமையின் மேற்கூறிய வன்னியரிட

* சூதாடுவாதம்போற் றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே. தாயுமானவர்.
மாயமயக்கொழிந்தார் மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையி னிற்பார்பராபரமே. தாயுமானவர்.
நீரத்தினுற்றுறவு சேராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல் பண்போபராபரமே. தாயுமானவர்.

முள்ள அவ்வொரே நற்குணத்தையே பொருட் படுத்தியவரொடு மிணக்கமுற்று காரியமாதிகளிற் கலந்து வருதலேவேண்டும்.

இவ்வாறே பிறருநுங்களொடு சேர்ந்திணங்கிவருமாறும் நீவிர் செய்துகொள்ள முயலுதல் வேண்டும். பிறரையுங்களொடிணங்கி சிறு பெருங்காரியங்களிலுழைக்கச்செய்யும் பெரியதோர் பழக்கமுமுங்கட்கு வேண்டுமென்பதுங் குருதேவரது கருத்துகளில் மற்றொன்றுகும். சிற்சில சமயங்களில் பிறர் சகாயமின்றியே யான் தனியே சிலவேலைகளைச் செய்வேனுகில், அஃது வேறொருவரது தவியுடன் செய்யப்படுவதைக்காட்டினு மதிக சிலாக்கியமாகவே என்னுல் நிறைவேற்றப்படுமாயினும், நானுழைப்பதோடு வேறொருவரையு மவ்வேலையி லென்னுடனுழைக்கும்படி யான் செய்யக்கூடுமாகில் அதுவே அக்காரியத்தைச் செய்துமுடித்தற்குற்ற சிறந்த வழியாகுமென்பதிற் றடையேயில்லை. பௌத்தர்களின் கோவில்களில் ஸ்ரீ புத்ததேவருக்கு புஷ்பமளிக்கச்செல்லுமாந்தர் தாங்கொணர்ந்து செல்லும் புஷ்பக்கூடையை மற்றும் பலரிடமுங்காட்டி அவர்களைப்பல்லா மப்புஷ்பங்களைத் தொட்டு ஆலயத்திலுள்ள விக்கிரஹத்திற்களிப்பதற்கனுமதி கொடுக்கும்படி செய்துகொள்ளுவார்கள். இவ்விதம் புஷ்பங்களைத்தொடுஞ் ஜனங்களிலநேகர் அம்மாதிரி தாமும் புஷ்பங்களை கிரயத்திற்கு வாங்குவதற்குச் சக்தியற்ற தரித்திரர்களாயிருப்பதுமுண்டு. ஆதலின் அவ்வகையினர் இப்புஷ்பங்களைத் தொடுவதால் ஆலயத்தில் தெய்வத்திற்கு புஷ்பமளிக்கும் புண்ணியத்தை தம்மொடுஞ் சேர்ந்தனுபவிக்கும்படி சக்தியுள்ள மாந்தர் செய்யலாகுமன்றே! இஃது ஓர் பெருந்தர்மமேயாகுமென்று பகவான் புத்தருமுபதேசித்திருக்கின்றனர். இம்மாதிரியே உலகத்துக்கு நீவிர் செய்யுமுபகாரங்களில் மற்றவர்களையுமும்முடன் சேர்ந்துழைக்கும்படி யிணக்கிக்கொள்ள வுங்களால் முடியுமாயின், நீங்களுமதனுல் விசேடச்சாந்தமுற்று வாழ்வீரென்பதிற்றடையில்லை.

சுந்தோஷ நிறை நினைவிலிதுவரையிரண்டம்சங்களைப்பற்றிக் கூறினேமாகவே யினியதன்கண்ணுள்ள மூன்றாமம்சமாகுஞ் 'சத்தி'யல்லது வீரியமாவதியாதென்பதை விரிப்பேன். நம்மோவ்வொருவருள்ளு மிவ்வீரியமெனுங் கடவுளினம்சம் நிறைந்து நிற்கின்றதென்வும், பல தருணங்களில் நாம் வீரியமேயற்றவர்கள்போன்று நடிப்பினுமுணரினு முண்மையில் நம்முள்ளே கடவுளின் வீரியமாஞ்சத்தி தங்கிநிற்பது சத்தியமேயெனவு, மியான் முன்னமே கூறினேனன்றோ! ஆயினுமதை நம்முண்ணிலையினின்றுந் தோண்டியெடுத்த பின்னரே யன்றோ நாமடைந்தனுபவிக்க வியலும்! அஃது பூமியிலாழத்திற் கிடக்கும் புதையலின்கண் வைக்கப்பட்டிருக்கும் விலையுயர்ந்த ரத்தினம்போன்றதுவேயாகுமென்க. இதையடையும் வழி யாதோவெனில் "அதை நிச்சயமாயடைவேன்" என வுறுதியுடையிச்சையை நாங்கொள்ளுதலேயென்க. முயற்சி கொள்ளின் நாம் தவறாது ஐயமடைவோமெனுமுறுதி எப்பொழுதும் நம்மைவிட்டகலுதல் கூடாது. இவ்வுறுதியெங்குண்டோ அங்கெல்லாங் குருதேவனதுதவியுந் தடையின்றி விளங்கும். ஏனெனில் குருதேவனும் வீரியத்தின் வடிவமேயாதலின் தனது சீடருள் எவனுவது சகல துர்ப்பலத்தையுமடக்கியாளத் துணிவானுயி னுடனே யவன்மீது தனதன்பையுமருளையுங்காட்டிப் புன்முறுவல் செய்வரன்றோ! சிறு குழந்தையொன்றின் பிதாவொருவன் அக்குழந்தைக்குச் சங்கடம் நேர்ந்தபொழுது அது தைரியமேகொண்டொழுகி யழாமநிற்குமாயின் அஃதைக் கண்ணுற்று விசேடவானந்த மடைவனன்றோ! இவ்வண்ணமே ஸ்ரீகுருதேவரு நம்மைக் கண்டானந்திப்பர். ஆதலின் எந்நற்காரியத்தையாவது நாஞ்செய்யத்துணிந்தபின் மத்தியிலெத்தனையோ தடவைகளில் நாந்தவறி மேற்செல்லாது நிலைகெடினும், உடனே யுற்சாஹங்கொண்டெழுந்து முன்போல் முயற்சிகொள்வோமாயின் குருதேவருமஃதைக் கண்ணுற்று நம்மீது திருப்தியடைந்து தனது கிருபையையு நமக்கனுப்பி யருளுவரென்பதிற் றடையேயில்லை.

நமது குருதேவர் தற்காலத்தில் வீரியமாதி சகல நற்குணங்களையும்படைத்து மிக மேன்மைவாய்ந்தவராய் விளங்குவதுபோலவே நீங்களும் பிற்காலத்திலொருநாள் வீரியமுமேன்மையுமுடையீராவீர்களென்பது திண்ணமென்பதை நீங்கள் மறவாதிருத்தல் வேண்டும். இப்பொழுதுங்களிடந் தோன்றுங்குறைவுகளைப்போலவே வெகுகாலத்திற்கு முன்னவரிடமும் குற்றங்கள் காணப்பட்டன. குருமூர்த்தி எதை நிறைவேற்றி முடித்திருக்கின்றனரோ அதை நீங்களுஞ் செய்துமுடிக்கலாமன்றோ! ஆனால் எக்காரியங்களையுஞ்செய்துமுடித்தற்கு அதற்குத்தக்கவளவுள்ள காலம்மட்டுஞ்செல்லும். ஆதலின் வருங்காலத்திலென்றைக்காயினு மொருநாள் நீங்களுமன்பும்பேரறிவும் நிரம்பியே வாழ்வீராவீர். இப்பொழுது குருதேவர் எவ்விதமுயர்நிலையுடையரோ அப்படியே நீங்களுமாகிவிடலா மென்பதுந் திண்ணமேயன்றோ!.

ஆகவே யானிங்கு நுங்கட்கு வற்புறுத்திக் கூறுவனென் போந்த விஷயமாவது யாதெனில், நீங்களியாவரும் சென்றகாலங்களிலு நிகழ்காலங்களிலு நின்றுவந்திருக்கு நிலைமைகளினியற்கையைச் சிறிதுங்கவனியாமலினி வருங்காலத்திலடையவிருக்கும் ஸ்திதிகளையே யூன்றிநோக்கி முயன்றுவரல் வேண்டுமென்பதே. எந்த சம்பவமும் நிகழ்ந்தபின்னரதைலக்ஷியஞ்செய்யாது மறந்துவிடல் வேண்டும். சென்றவைகளெல்லாமிறந்தவைகளே படித்தபாடமேபோன்ற பழஞ்சம்பவங்களையுங் குற்றங்குறைகளையு நினைந்துவரும் பழக்கத்தையே தவிர்த்துநிற்றல் வேண்டும். மென்மேல்பிவிர்த்தியை நோக்கி முயலுங்காலை பலமாந்தர் தகுந்த வுத்ஸாஹங்கொள்ளாம நிற்றற்குக்காரணமநேகமாய் தாந்தாஞ்சற்று முன்வறைநின்ற நிலைமைகளையேயுன்னி யுன்னி, தமது பலவீனத்தைக் குறிப்பிட்டே காலங்கழித்து மனத்தளர்ச்சியடைவதாற்றனென்க. அவ்விதமின்றியினிவருங்காலத்தில் அடுத்தவருடத்திலல்லது வருநூற்றுண்டினில் நமக்கு எவ்வளவு விசேஷ வீரியம் விளையும் என்பனவாயமே நோக்கங்களைச் சிந்தித்துவருதலே நமது கடமையாகும். ஆதலின் எப்பொழுதாயினும் நமக்குறுதிவேண்டுமாயி னுடனே

"ஸ்ரீ குருதேவன் முயன்று சாதித்த பெருமையையானுஞ்சா திப்பேன்" என நினைவை மனத்துள்ளே நினைவீராயினப்பொ ழுதே யும்முள்ளும் வீரியமாஞ்சத்தியும் வந்துட்புகுமென்க.

இவ்வாறு ஆனந்தமெனுங் குணத்தின் கண்ணுள்ளபரிசுத்தி,சாந்தம்,வீரியமாய முவ்வம்சங்களு மியாவையென விளக்கப் பட்டனவன்றே! இவ்வானந்தமாங்குணத்தையு, மிக முதிர்ச்சி யடைந்த பெரியோர்மட்டு மடையலாமேயன்றி அனுபவங்குன் றிய சிறுவர்க்கதது கிட்டுதல் சுலபமாகாதெனை நுமக்குத் தோன் றுதல்கூடும். ஆனால் இவ்விதம் ஆனந்தம் பூரணமாய்ப் பெரியோ ருக்கே கிட்டுமென்பதுண்மையாயினும், உங்களில் ஒவ்வொருவ ருக்கும் அஃது கூடியவரையில் அதிகவளவு லபிக்குமென்பதிலை யில்லை. ஏனெனில் நீங்களனைவருமான்மவியற்கையிற் கலந்து நிற் கின்றமையின்,உங்களொவ்வொருவரிடமுஞ் சுபாவத்திலானந்தஞ் சிறிது அதிகமாய்த் தங்கியே நிற்கின்றது; நீங்களியாவருமுத்த னுங் குருமூர்த்தியினிடஞ் சீடர்களாகி யடைக்கலம்புகுந்து நிற்கி ன்றமையின்? நுங்களிடமற்றவர்க்குக் கிட்டாத வீரியமும், எக்காரி யத்தையுஞ் சாதித்துக்கொள்ளுஞ் சாமர்த்தியமும் விளங்குகின் றன. இதுநிற்க நமது குருநாதனுவார் அன்பின் வலியைக்கொ ண்டே முயன்று தனக்கிப்பொழுதுள்ள மஹிமை யத்தனையும்பெ ற்ற பெருமானென நீங்களறிவீர்களன்றோ! அவரிவ்வுலகின்மீது செலுத்திய வன்பாலேயே சகல ஞானசக்திகளையுமடைந்தவர்.

இனித்தமது வீரியகுணத்தை முன்னிட்டே முயன்று அப்பால் ஞானமன்பாதிகளிற் பூர்த்தியடைந்த வேறு முத்தர் களுமுளர். இவ்வெவ்வேறு வழிகளுள் நீங்களுமியானு மின்னும் நம்மியற்கையைச் சார்ந்தோருஞ் செல்லற்குரிய குறிப்பிட்ட மார்க்கமாவதியாதெனில், இவ்வுலகிற்குதவிபுரிவதற்கு நாந்தகுதி யடையும்வண்ணம் நம்மிடமேற்படவேண்டிய முக்கியகுணங்க ளாகிய ஞானவீரியமாதிகளை நம்மிருதயத்துட்டங்கி நிற்கும் அன் பின் வலியாற்பக்குவப்படுத்துவதேயாகும்.

(இன்னும் வரும்)

# OPINIONS.

ENANGUDI POST, TANJORE DT.
*30th Dcember 1915.*

I was much overjoyed to receive your kind note and the notices. Indeed, it is a very good undertaking. I shall be a thousand times glad to support the undertaking. Please pubiish the same in the Poornachandrodyam. Wishing your undertaking every success by the help of the Great Ones whose tools we are.

V. RAMACHANDRA NAIDU, F.T.S.
T. S. Lodge Inspector.

MADANAM POST, TANJORE DISTRICT.
*31st December, 1915.*

Your kind letter with the enclosed notices duly to hand, and it only remains for me to congratulate you & your workers upon the noble work you propose to undertake. The idea of starting a Journal to disseminate Theosophy is verily a laudable one and fully meets with my deep sympathy, as it will with that of all lovers of truth.

T. A. GOPALASWAMI NAIDU, F.T.S.,
T. S. Lodge Inspector.

KUMBAKONAM, *6th October 1916.*

I have received your card of the 2nd Instant, & the pamphlets kindly sent by you. I certainly consider it my duty to support your very useful work & shall always remember it. I am writing to about half a dozen friends who will be much benefitted by your publications & I hope they will become subscribers. Many thanks & good wishes.

A. G. BALAKRISHNA IYER, F.T.S.
Kumbakonam

THIRUPPANI VATTARAM
*November 2nd 1916.*

"In acknowledging, with heartfelt thanks, receipt of the Nos. 2 & 3 of the Tamil monthly "Words of Peace," I should like to state that no words of praise from me will sufficiently be speaking the high merit of the tamil rendering of the number 3 which is beautiful not only in matter but also in the get-up.

That many a number of this type may see the light of day, is the wish of your well wishing brother.

T. A. GOPALASWAMY NAIDU, F.T.S.
T. S. Lodge Inspector.

KUMBAKONAM, *2nd November 1916.*

Your kind card of the 31st ultimo. I fully sympathise with the effort made by you in issuing your Journal and maintaining your school.

The Hon'ble Rao Bahadur V. K. RAMANUJACHARIAR.

MYSORE, *17th November, 1916.*

I am really very glad to learn that the profits go to the educational activity of that place. I quite sympathise with your object which is the key to the salvation of our Motherland.

Really you are rendering a magnificent service to the Tamil-talking public by the translation of the works of one who has been devoting her very life for the welfare of India.

S. RAMASWAMI IYER.
Headmaster, Hardwick Commercial School.

TRIVANDRAM, *26th February 1917.*

Your kind card to hand. I shall try my very best to encourage your very laudable undertaking here. * * * * I know the objects of the publication and wish it heartily all success.

I shall try to go to your place some time during the summer vacation. * * * * * * *

R. SRINIVASAN, M.A., M.R.A.S.
T. S. Lodge Inspector.

# அபிப்பிராயங்கள்.

வேலூர், 27—2—17.

தாங்கள் அன்புகூர்ந்து புத்தகத் தபால் வாயிலாக அனுப்பித்த புத்தகங்களிரண்டும் சேர்ந்தன. அவை செவ்விய தமிழ்நடையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. தமிழ்ப்பாஷைப் போக்கைத் தழுவிய அப்புத்தகங்களை அனைவரும் வாங்கி வாசிப்பார்களாயின், பிரமஞானம் யாண்டும் பரவுதற்கேதுவாகும்.

பு. வே. பாலகிருஷ்ண முதலியார்,
தமிழ்ப்பண்டிதர், உரிக்காலேஜ், ராயவேலூர்.

மதுரை, 1917ஆ ஜனவரீ.

**பக்தியின் மகிமை**—திருமீயச்சூர் பிரமஞான சங்கத்தைச் சேர்ந்த அ. இரத்தினசபாபதி முதலியாரவர்களால் பிரசுரிக்கப்பெற்று வரும் "சாந்தி வசனம்" என்னும் கிரந்தமாலையின் மூன்றாவது பகுதியாக இது வெளிவந்துளது. மாதுஸ்ரீ பெஸண்ட் அம்மையவர்களால் இயற்றப்பெற்ற ஆங்கில வாசகத்திற்கு இது தமிழ்மொழி பெயர்ப்பாகும். அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற அனேகமான இத்தகைய சிறு புத்தகங்களை யெல்லாம் முற்றும் தமிழிற் கொண்டுவந்து தமிழுலகமும் பயன்பெற வேண்டுமாறு செய்யக் கங்கணம் கட்டிக்கொண்டுழைக்கும் இவரது முயற்சியைத் தமிழபிமானி ஒவ்வொருவரும் ஆதரிக்க வேண்டுகிறோம். பெஸண்ட் என்று சொன்னால், தன்னை மீறிந்த ஓர் ஊக்கத்தோடு எவரும் சற்று காதுகொடுத்துக் கேட்கும் இக்காலத்தில், இத்தகைய மொழிபெயர்ப்புகளை வாங்கிப் படிக்கவேண்டுமென்று யாம் கூறாமலே எவரும் உணர்வார்.

பூர்ணசந்திரோதயம்.

மதுரை, 1917ஆ எப்ரல்.

"அவன் பெயரால்" என்னும் அரியநூலின் முதற்பாகம் திருமீயச்சூர் பிரமஞான சங்கக் காரியதரிசி ஆர். ஸ்வாமிநாதய்யர் வேண்டுகோளால் சாந்திவசனத் தொடரின் 4, 5-வது பாகங்களாக அ. இரத்தினசபாபதி முதலியாரவர்களால் பிரசுரிக்கப்பெற்றது. இதன் விலை அணு 4. பிரமஞான சபை அங்கத்தினருள் ஞானத்திற் சிறந்தவராகிய ஸ்ரீமாந். வி. ஜினராஜதாஸரவர்களால் உலகமுய்யுமாறு உபதேசரூபமாய் வெளியிடப்பட்ட உத்கிருஷ்டமான 'In His Name' என்ற ஆங்கில நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு. இம்மகானுடைய நூல்களின் சொன்னயமும், பொருணயமும், தொடைநயமும், நடைநயமும் யாவரானும் போற்றத் தகுந்தது. மேலும் இந்த கிரந்தத்தில் கூறப்பெற்ற விஷயமோ, அந்தரங்க சிஷ்யனுக்கு அவன் மூத்தனான சகோதரனால் ஞானாபிவிருத்தியினிமித்தம் ஆத்மவிகாஸ முறைகளையும் குஹ்யமான விஷயங்களையும் பற்றி சொல்லப்பட்டது. இந்த சிறந்த ஞானசாஸ்திரத்தை மொழிபெயர்த்தல் சுலபமானதன்று. முதனூலின் உட்கருத்தை நன்குயறிந்து அதை வேறு பாஷையில் வெளியிட வேண்டுமானால் இரண்டு பாஷைகளிலும் தேர்ச்சியும், கூறப்பட்ட விஷயத்தில் பழக்கமும் வேண்டும். இல்லையேல், தமிழ் மொழி பெயர்ப்பானது பயனற்றதாய் விடும். இந்நூலின் மொழிபெயர்ப்பாசிரியர் பெயர் வெளியிடப்படவில்லை. அவர் யாராயிருப்பினும், அவரையும் சாந்திவசனத் தொடரை வெளி

யாக்கிவருவோர்களையும் மொழிபெயர்ப்பின் குணத்தைப்பற்றி சிலா கிக்கிறோம். தமிழ் நடையும் நன்றாயிருக்கின்றது. முதனூலின் பொருளையும் சரியாய் துலக்கியுள்ளது. தாயுமானவர் முதலிய கவிவரர்களின் பாட்டுகளை ஆங்காங்கு சமயத்துக்குத் தக்கவாறு சான்றாக கீழே வரைந்துளது. இந்த உயர்நூலை தமிழில் மொழிபெயர்த்து தமிழுலகுய்யுமாறு உபகரித்த சாந்திவசனத் தொடரை பிரசுரம் செய்தவர்களுக்கு நாம் மிகவும் நன்றிபாராட்ட கடமைப்பட்டுளோம். இனி விரைவில் அடுத்த பாகமும் வெளிவரும் என்று ஆவலுடன் எதிர் பார்க்கிறோம்.

பூர்ணசந்திரோதயம்.

மதராஸ், 1916ஆ டிசம்பர்மீ 21உ.

சாந்தி வசனம்—'பக்தியின் மகிமை' என்ற விஷயத்தைப் பற்றி மிஸஸ் அனிபெஸண்டு செய்த பிரசங்கத்தின் தமிழ் பெயர்ப்பு புஸ்தகம் ஒன்று வரப்பெற்றோம். மிஸஸ் அனிபெஸண்டின் மதசம்பந்தமான பிரசங்கங்களின் அருமைகள் எல்லோரும் அறிந்த விஷயம், அப்பிரசங்கத்தின் மொழிபெயர்ப்பு நல்ல தமிழில் எழுதப்பட்டிருக்கிறது. இது போளூரைச் சேர்ந்த திருவிசநல்லூர் சாந்தி ஆசிரமம் என்னும் தியசாபிகல் கிளைச்சங்கத்தின் காரியதரிசியின் வேண்டுகோளால் மொழிபெயர்க்கப்பட்டது. அச்சங்கத்தின் காரியதரிசி இப்படிப்பட்ட புஸ்தகங்களை வெளிப்படுத்துவதால் இதிலிருந்து வரும் வருமானங்களை அங்கு ஸ்தாபித்திருக்கும் கல்விச்சாலையின் சார்பாகச் செலவழிப்பதாகவும் எழுதுகிறார்.

சுதேசமித்திரன்,

மதராஸ், 1917ஆ அக்டோபர்மீ 17உ.

எனது பிரதிக்ஞை.—தஞ்சை ஜில்லா பேரளம் போஸ்டைச் சேர்ந்த திருவிசநல்லூர் பிரமஞான சங்கத்தினின்றும் சாந்தி வசனம் என்ற துண்டுப் பிரசுரத்தின் 11-வது, 12-வது பிரதி கிடைத்தது. இப்பிரதியில் 'எனது பிரதிக்ஞை' என்னும் ஒரு அரிய சிறிய நூல் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. இதனை ஆங்கிலத்தில் பிரமஞான சங்கத்தைச் சேர்ந்தவராகிய ஸ்ரீமான். சி. ஜினராஜதாஸர் (I Promise) என்று ஆங்கிலத்தில் தலைக்குறியிட்டு எழுதியிருக்கிறார். அதன் மொழிபெயர்ப்பே 'எனது பிரதிக்ஞை' என்னும் இவ்வரிய நூலாகும். இதில் மலர்ந்த பார்வைகள், தேமொழிகள், சந்தோஷம் நிறைந்த நினைவுகள், வீரியமுடைய செயல்கள், முடிவுரை என்ற பலதலைக் குறிகளிட்டு அவ்வவ் விஷயங்களைக் குறித்து எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இடையிடையே முத்துக் கோத்தாற்போல் தாயுமானவர் செய்யுள்களிற் சில ஆங்காங்கு மேற்கோள்களாக காட்டப்பட்டிருக்கின்றன. இதனைத் தமிழில் ஆலங்குடியிலிருக்கும் பென்ஷன் பெற்றுள்ள தாசில்தார், மெஸர்ஸ். கே. இராமச்சந்திர ஐயரும் பிரமஞான சபையைச் சேர்ந்த பி. ஆர். சுந்தரராஜ ஐயரும் மொழிபெயர்த்தார்கள். இப்பிரதியின் முகப்பில் ஸ்ரீமான். ஜினராஜ தாஸரின் உருவப்படமும் அச்சடிக்கப்பட்டிருக்கிறது.

சுதேசமித்திரன்.

[illegible] வருமானமும் இவ்வூர்
[illegible] உபயோகமாகிறது.



# Words of Peace.

Vol. II.] சாந்தி வசனம். [No. 3 & 4.

ஸ்ரீமான். ஜினராஜதாஸர் அவர்களால்

இயற்றப்பட்ட

# I PROMISE.

# எனது பிரதிக்ஞை

மூன்றாம் பாகம்.

Published by

A. RATNASABHAPATHI MUDALIAR, F. T. S.,

*Santhi Asramam*, T. S. *Tirumeyachur*,

Peralam Post Tanjore.

September & October, 1917.

திருமீயச்சூர்

தர்ம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

 [விலை அணா 6.



கவனியுங்கள்! கவனியுங்கள்!! கவனியுங்கள்!!!

# பிர்ம்ம வித்தியா பிரஸ்.

திருமீயச்சூர், பேரளம் போஸ்ட்,

தஞ்சாவூர் ஜில்லா.



இவ்வச்சாபீஸில் ராஜரீக சமபந்தமற்ற சகலவிதமான பத்திரிகை, புஸ்தகங்கள், விசித்திரமான கலர்வேலைகள் முதலியன மிகவும் நயமாய் அச்சிட்டுக் கொடுக்கப்படும். சார்ஜுகள் மிகக் குறைந்தனவே. குறிப்பிட்ட காலத்திலும், ஒழுங்காயும் வேலைகள் முடித்துக்கொடுக்கப்படும்.

இவ்வச்சாபீசு இவ்விடம் திருமீயச்சூரில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற கல்விச்சாலையின் தருமத்திற்கென்வே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாதலின் இதன் வரும்படி முழுமையும் அக்கல்விச்சாலையின் அபிவிர்த்திக்கே உபயோகிக்கப்பட்டு வருகிறது. இதைப் படிக்கும் நந்தேசாபிமானிகள் யாவரும இவ்வச்சாபீசில் மிகுந்த வாதரவுவைத்து தங்களாலியன்ற வேலைகளைக் கொடுத்து, பிறருக்குஞ் சொல்லி வேலைகளை இங்கனுப்பச்செய்து, இங்கு நடத்தப்பட்டுவரும் கல்விச்சாலையை யபிவிர்த்திசெய்யும் புண்ணியத்தையடைய முயலுவார்கள்.

இவ்வச்சுக்கூடத்தில் ரூல்போடவேண்டிய எவ்விதமான வேலையையும் அழகான பைண்டிங் வேலையையும் வெகு நேர்த்தியாய் செய்துகொடுக்கிறோம்.

இங்கு வேலைகொடுக்கப் பிரியப்படும் நமதபிமானிகள் நேரில்வர சௌகரியப்படாவிட்டாலும், கடிதமூலியமாய் அவர்கள் விருப்பங்களைத் தெரிந்துகொண்டு திருப்திகரமாய் அவர்கள் வேலைகளை முடித்துக் கொடுக்கிறோம்.

பிர்ம்ம வித்தியா பிரெஸ், திருமீயச்சூர். [illegible]

இனி முக்தனுங் குருதேவரும் பிரதிதினமுந் தான் வசிக்கு மூலகையும், தனது வசத்திலுள்ள மானிடரனைவரையும், தனக் கடிமைபூண்ட சீடர்களான தன் சொந்த மனிதரையும், பிரயத் தின பூர்வமாய்த் தனதன்பிற் கிலக்காக்கி வருவர். தன்னாற் சோதனை நிலையிலேற்றப்பட்டிருக்குந் தனது புதுச்சீடர்களின் பரீக்ஷார்த்தம் தனதாசிரமத்தில் சூட்சும பிரகிருதியினுலாக்கி வைக்கப்பட்டிருக்கும் "பிரதிமைகளை" அவர் நாடொறும் பார்த்துவருவரென்பதையு நீங்களறிவீர்கள். ஆயினுமிவ்விதமிப்பிர திமைகளை மிகவுங் கடுமையாய் அவற்றிற்குரியரா வோரிடமுள குற்றங்குறைகளை யாராய்ந்து, நமது பாடசாலையில் பரீக்ஷகர்கள் மாணுக்கர்களைச் சோதித்து குற்றங்களையறிந்து அவரவர்கள் வகுப்புகளிற்குத் தகுதியின்மையைத் தீர்மானிப்பதுபோல், உங்க ளைத் தள்ளிவிட விசசியாமல், நீங்கள் நாளடைவில் அபிவிர்த்தி யடைந்து வருவதைக் கண்ணுற் றுங்களிடமுள பலவீனங்களை யெல்லா மகற்றவு முங்கட்குறுதியை யளிக்கவு முயலுவர். இவ் வாறே யுலகில் மானிடரனைவரையுமே யவர் உதவிகளைப் புரியு நோக்கங்களுடனும் ஆனந்த நிறைவுள்ளத்துடனு முற்றுநோக்கி வருவர். இவரிவ்வித முலகின்மீது தனது திருஷ்டியைச் செலுத் தும்பொழுதெல்லா மவரிடம் மலர்ந்த பார்வைகளுந் தீரவசனங் களுமே விளங்குமன்றே! இவ்வாறே தனதன்பிற் கிலக்காகு மானிடரனைவரையுமே பற்றியவர் தியானமுஞ்செய்வர். ஆத லினிவ்வள்ளலை நீங்களும் பின்பற்றியே நிற்பீராகி * நாடொறு நீவிர் அன்புசெலுத்து மாந்தரனைவரையும் பற்றி நினைந்துவரல் வேண்டும்; நீங்கள் அன்புவைக்க விசசைகொளு மனைவரையு

* ஏறுநெறியே மலத்தை யெரித்தலா
லீறிலுறையா லிருளை யறுத்தலான்
மாறிற்பசு பாசம் வாட்டலால் வீடுக
கூறுபரனே குருவா மியம்பிலே.

அத்தனருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தோட சித்தறத் தெளிவித்தச் சீவனை
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சுத்துட னங்கரு மத்திடுந் தன்மையே.

மின்றுரெனக் குறிப்புடன் தீர்மானித்துக்கொண்டபின்னர் நம்து பிரதிதின தியானத்திலவர்களை நினைந்து வரலேவேண்டும்.

மேற்றிசைத் தேயங்களில் நல்வழியிற் பழக்கப்படும் ஒவ்வொரு சிறு குழந்தையும் இரவில் தான் நித்திரையிற் செல்லு முன் தன் மழலைச்சொற்களாற் கடவுளை நோக்கி யிலகுவானதோர் ஜபத்தைக் கூறிமுடிப்பது வழக்கமாயிருக்கின்றது. அஃதடியில் வரும் விதமாய் நிகழும். "கடவுளே கிருபைபுரிவீராக. என் தந்தையாருக்கு மெனது அன்னைக்கும் நின்னருளுண்டாகுக. அப்படியே என்னண்ணன் 'ஜாக்' குக்கும், அத்தையார் 'ஜேன்' அம்மாளுக்கு மப்பால் தாதியாகிய 'நானி'யம்மாளுக்கும் இன் னும் எமது வீட்டுநாய் 'பிங்கோ'வுக்குமே நின் கிருபை வருக." இவ்விதம் மொழிந்தபின் னச்சிறுகுழந்தை தனக்குஞ், சூழநிற் கும் பெரியோ ரொவ்வொருவரிடமுமிருந்து ஆசீர்வாதம் கிடைக் கும்படி வேண்டுதலைச் செய்யும். இவ்வற்பக் குழந்தை விரும்பு வண்ண மதன் பிரார்த்தனைகளையுங் கடவுள்கேட்டு அவ்வாறே தன்னருளைப் பொழியாதொழிவரோ? இங்கு இச்சிறுவனது பிரார்த்தனையின் முடிவில் தனக்கும் அருள்வேண்டுமென் தன் பெற்றோர் முதலினோரைக் கேட்டலத்தனை யவசியமாகாது. இவ்வருளாசீர்வாதங்களை யெல்லாம் நாம் பிறர்பொருட்டளிக்கும் பழக்கமே நமக்கவசியமாகும். நாம் நெஞ்சார வன்புசெலு த்துவோர் சிலரை நாமன்புடன் நினைக்கும் பொழுதெல்லாம் உடனே நம்மிடமிருந்து அவருக்கு நமதருளும் செல்லுகின்றது. ஆனதாற்றான் நமது குருதேவரைப்போல நீங்களும் உங்கட்கு வேண்டியவர் யாவரையு நினைந்துவரல் வேண்டுமென்ன யான் கூற லுற்றேன். குருதேவர் தினந்தோறுங் காலையில் உலகின்மீது

---

ஈனப் பிறவியி விட்டது மீட்டூட்டி
தானத்து விட்டுத் தனையூட்டித் தாழ்தலு
ஞானத்தின் மீட்டலு நாட்டலும், வீடுற்று
மோனத்துள் வைத்தலு மூத்தன்றன் செய்கையே.

பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலய மெல்லாம்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே.

(திருமந்திரம்)

தன் கருணைமழையைப் பொழிந்தாசீர்வதிக்கிறார். இப்பொழுது குருதேவரைப்போல அத்தனை விஸ்தாரமான மானிட சமுகத்தில் அன்புசெலுத்துங் கடமையும் பொறுப்பு நுங்கட்கில்லை. தற்கால த்திலுங்களன்பிற்கு விஷயமாய்ச் சிற்சிலரே யேற்பட்டிருப்பர். ஆயினுமிவ் வியற்கையில் நீவிர் பழகிவரத் துணிவீராயின், நாளடைவில் அதிகமதிகமாய் உங்கட்கு நண்பர்கள் கிட்டி வருவதையும், நுமதன்பிற் கிலக்காகி நும்மாற க்ஷேமப்படுத்தப் படுவோராவாரின் தொகைவரவர விஸ்தாரமாய்ப் பெருகி வருவதை யுங் கண்டுகொள்வீர்கள்.

இனியுங்களி லொவ்வொருவருக்கும் வருங்காலத்தில் கிட்டற் பாலதாய பரமானந்த நிலையொன்று கிடக்கின்றது. உங்களி லொருவருக்கு அப்பேறு உளத்துள்ளகமகிழ்ச்சியின் மூலமாகவும், இன்னுமொருவருக்கு ஆங்கு விளங்குங் குணமாய அன்பின் வழியாயும், மற்றொருவர்க்கு வீரியமாந் தன்மையைப்பற்றியு முடிவில் வந்தடையும். ஸ்ரீகுருதேவனுக் குகந்த சீடர்களாய் நீவிர் நாளடைவிலாகி வரும்பொழுது, நீங்களனுபவிப்பதற் கெனவே அவ்வுயர்நலம் பெருமானந்தநிலை வெகு காலமாய்க் காப்பாற்றி வைக்கப்பட் டிருக்கின்றதென்பதை நீங்களே கண்டுகொள்வீர்கள். இவ்வாறு அனுபவ முதிர்ச்சியில் உள்ளத்தினுள்ளே அகமெலாங் குழைந்துருக, வீறுசத்தியும் உவட்டாச் சுந்தரமும் விளங்க, விரவிவிரவி மேற்கொளு முணர்ச்சியாகு மவ்வுயர்நிலை யுங்களொவ்வொருவருக்கும் எவ்வெவ்விதமாய் எவ்வெவ்வுருவத் தோடுண்டாகுமென்பதை யானறியேன். இதையுள்ளபடி ஸ்ரீ குருதேவரேயறிவர். * பின்னர் காலம வரும்பொழு துங்கட்

* இருப்பா யிருந்திடப் பேரின்ப வெளிக்கே நமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
வருட்பாய நமக்காக ஆளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயார் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

தாயுமானவர்.

ஊனுயுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனு யமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க் கொன்றைச் சேவகனார். திருவாசகம்.

ருத்தானே வெளியாகும். ஆயினுமிப்பொழுதே நீங்களப்பேரா னந்தம் பெறற்கு வேண்டிய தகுதியை வருவித்துக்கொள்ளும் பொருட்டு முயற்சியை யாரம்பித்தல் கூடுமன்றோ! அவ்வித முயற்சியை நடத்திக்கொள்ளும்வித மியாதென்பதைப் பற்றித் தானிப்பொழு துங்கட்கு விரித்துரைக்க வெழுந்தேன் என்க.

ஆதலாலெப்பொழுது மானந்தமே யுங்களுள்ளுறையிற் பிரகாசித்து வருமாறு நீங்கள் கடவுளின் சோதியை யுற்றுநோக் காது, அதற்கு மூதுகுகாட்டி யொழுகி யுங்களதம வியற்கையாகு

ஞானக் கரும்பின் றெளியைப் பாகை
நாடற்கரிய நலத்தை, நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயி ஞனைச்,
சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனை,ப் பிறப்பறுத் தாண்டு கொண்ட
கூத்தனை, நாத்தழும் பேற வாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப் பொற்சுண்ண மிடித்து நாமே.

மேற்கண்ட வாயுவுங் கீழ்ப்பட்ட மூலத்து
வெந்தழலைச் சூற்கொண்ட மேகமென வூமை
நின்று சொரிவதை யென்றுற் கண்டதன்று,
மவுனுப தேசி யளிக்கை யினிப்
பாற்கண்டு கொண்டனன், மேலேயமிர்தம் பருகுவனே.

கற்கண்டோ தேனே கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தெதென நான் சொல்லுவேன்
விற்கண்ட வான்மதிகாண மௌனி மௌனத்தளித்த
தானமதி யூறு மமிர்தம்.

தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தானறிந்து,
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாய்த்
தீனன்றனக் கிரங்கினையே யினிச் சிந்தை தனக்கென்று
மானந்தந் தானல்ல வோபரமே சச்சி தானந்தமே. தாயுமானவர்.

பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவருளாற் சிவ மாகுமே. திருமந்திரம்.

திழலைக் கண்ணுற்றே காலங்கழியா திருத்தல்வேண்டும்.*பின்னைச் சதாகாலமுமவ் வானந்தத்தையே பாவித்துவருதற்கு நுங்களா லியன்றவரை முயன்றே வரல்வேண்டும். வீரியம், அழகு, சாந்தி யிவையாவுங் குறைவிலாநிறைவாய்ச் சகல மானிடற்குமே வாய்க்கும்படி நினைவால் முயலுதல்வேண்டும். இதுவே, பல்லூழி காலமாய்ப் பரமன் நுங்கட்காக சேகரித்த திரகசியமாய் வைத்திருக்கும் ஆனந்தமா மமுதினை யடைதற் குங்கட்குற்ற வழி யாகும். †

---

* இன்பத் துளேபிறந் தின்பத் துளே வளர்ந்
தின்பத் துனைநினைக் கின்ற திதுமறந்
துன்பத் துளேசிலர் சோறுடுங் கூறையென்
றுன்பத் துளேநின்று தூங்கு கின்றார்களே. திருமந்திரம்.

† ஆராவமுதே யரசே யானந்த வெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே!

பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே!

அருவுருவாகி யல்லவாய்ச் சமய
மளவிடா வானந்த வடிவே
வடிவிலா வடிவாய் மனநினை வணுகா
மார்க்கமாய் நீக்கருஞ் சுகமாய்
முடிவிலா வீட்டின் வாழ்க்கை வேண்டினர்க்குன்
மோன மல்லால் வழியுண்டோ?

படியிரு ளகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை யடக்கி யோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே
யன்ப ரைப் பருகுமா ரமுதே!

அங்கங்குழைந் துள்ளுருகு மன்பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக்கடலே சம்பூரண போதத்தனே! தாயுமானவர்.

முழுக்காதலாகி விழிநீர் பெருக்கிய முத்தரொனுங்
குழுக்காணநின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே!

தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந் தாமரையா
யினியும் பொன்மன்ற முநின்றுடுஞ் சோதி மணிவிளக்கே!

ஆகவே நீங்களியாவரும் பிரதிதினமுங் குருநாதனும் பெருமானை மனத்திலுன்னி, "நீதில் பரமாங் குருதேவரே! எமக்கு வாய்த்த தந்தைவடிவான பேருறவே! யாங்களனைவரும் நினதருளாலே சகலமனித வர்க்கத்திற்கும் க்ஷேமத்தை வருவித்தற்கா வெப்பொழுதுஞ் சந்தோஷநிறைந்த நினைவுகளையே நினைந்து வருவோமாக"வென வுறுதியுடைப் பிரதிக்ஞை யொன்றைச் செய்துவரலே வேண்டும். *

---

* சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோ லீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்க
லற்புதமே தோன்ற லாகுஞ்சற் சீடனே.

மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவ மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ச்சாஸ்திர மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி யொன்றுண்டு.

சிவனை வழிபட்டா ரெண்ணிலாத் தேவ
ரவனை வழிபட்டிங் காமா றொன்றில்லை
யவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.

யானின்று நுங்கட்கு இந்நூலினாம்பத்திற் குறிப்பிட்ட குணங்களல்லது சாதனங்கள் நான்சனுள்ளும கடையதான உதாரமான செயல்களைப்பற்றி வசனிப்பேன். இவை பூர்வகாலத்தில் உலகில் வசித்துவநத வீரர்களின் செய்கைகளாகவே விளங்கிவந்தன வாதலின், அவ்வகையினருண் முககியமான சிலரைப்பற்றிய விவரங்களை யிங்கெடுத்துரைபபதுசிதமாகும். இவ்வகை யுயர்தர காரியங்களைப புரிநதுவநத வீரர்களில் நமக்குச் சரிதவாயிலாய் நன்கு தெரிநதவர்கள் முன்னொருகாலத்தில் இங்கிலாந்தின் அரசனுப் வாழ்நதுவந்த கீர்த்திமானுகிய 'ஆர்தர்' எனுங்கோமகனது பாதநிழலிலமாநது காலங்கழித்த அவனது சாமந்தர்களே. இவர்களனைவருக்கும வட்டப்பலகையின் (மீதாசனங்கொள்ளும்) வீரர்கள்* எனுவிருதும் பட்டமும் ஏற்பட்டிருந்தன.

கிறிஸ்துப்பிறந்து ஆறு நூற்றுண்டுகளுக்குப் பின்னர் இங்கிலாண்டில் ஆர்தர் எனுமோரரசன் சிம்மாசனமேறி யாண்டுவந்த காலத்தில் தேசமுழுமையும ஒன்றோடொன்று கலகமிட்டுவந்த பல சின்னுடுகளாய்ப் பிரிந்து பெருங்குழப்ப நிரம்பி நின்றது. இப்பன்மாகாணங்கட்குந தலைவர்களாய சிற்றரசர்களியாவரும் நீதியற்ற கொடுங்கோன்மையுடையராய் நடித்துவந்தமையின் அவர் கீழமைந்த குடிகளெல்லாம் சந்தோஷமற்றவராகினர். இச்சமயத்தில் அரசபதவியடைநத ஆர்தர் மன்னன் தன் கோலிநிழலிலமர்ந்த குடிகளனைவரும க்ஷேமமுற்று வாழும்படி, சகல வநீதியையு மொழித்துவிட வெண்ணங்கொண்டவனுய், மேலே கூறிய "வட்ட மேஜையின் வீரர்களெ"னும் பெயர்பூண்டதோர் யௌவனசாலிகளான புகழ்பெற்ற சூரர்

* குறிப்பு நமது மதன்னுட்டில் சங்கப்பலகையின் மீதமரும் புலவர் இருந்ததுபோலென்க.

குழாத்தை யுண்டுபண்ணினன். இவர்கள் அரசனதரண்மனைக்கு வரும்பொழுதெல்லாம் ஓர் வட்டமேஜைப் பலகையைச் சூழ வீற்றிருப்பார்கள். அவர்களை யரசனுந்தனது சகோதரர்களென வருமையுடன் வரவழைப்பன். இவ்வீரர்களனைவரும் உலகினரின் க்ஷேமத்திற்காகச் சூரத்தன்மை பொருந்திய வுழைப்புஞ் சேவையும் புரிவதாய் அரசனிடம் பெருஞ்சபதங்களைச் செய்தனராதலின், அவற்றைப் பற்றி யுங்கட்கிப்பொழுது முதலில் சிறிது கூறுவேன்.

எவரும் பிறருக்குக் கொடுமை புரிவதைக்காணி னுடனே யவரவரைத் தடுத்து நிறுத்தி யடக்கிவிடுதலைத் தங்கடமையாகக் கொள்வதாய் அவ்வீரர்கள் அரசனிடம் சபதஞ்செய்தனர். எவ்விடத்திலாயினும ஆண், பெண், குழந்தைகளை யவரவர்களது அதிகாரியாவார் கொடுமையாய் நடத்தினுல் அவ்வவர்பொருட்டு அவ்வவ்வீரன் அங்ஙனே சண்டைபுரியத் துணிவன். நற்குணம், நன்மைகளை யெங்கு காணினுமதை ரக்ஷிப்பதாய் அரசனுக்கவ் வீரர்கள் வாக்குக்கொடுத்தனர். இவற்றையெல்லா நிறைவேற்றுதற்கெனவே அவர்கள் தேயமெங்கு மலைந்துதிரிவாரா யுத்தத்திற்காயத்தங்கொண்டு சதாகாலமும கவசமணிந்த மேனியுடன் மாவேறிசசென்றுவருவர். ஆயினும் அன்னபானமாதிகள் ஒன்றும் தம்முடன் கொண்டுசெல்லாது தனிமையிலேயே சஞ்சரித்துச சென்று, ஆங்காங்கு அதிதிகளை யுபசரிக்குஞ்சிலமுள்ள ஜனங்களையேயண்டிக் காலங்கழித்துச செல்லுவர். பல தடவைகளில் கோட்டை கொத்தளங்கள், அன்னபான வசதிகளற்ற நாடுகளினூடு மவர் சஞ்சரிக்க நேரும். கொடிய தீயோர், அல்லது ராக்ஷசர்களொடும் எவ்விடத்திலுந் திடீரென அவர்கள் யுத்தஞ்செய்ய நேருவதுஞ் சகஜமாயிருந்தது.

இஃதிங்கனமாக, இவ்வட்டமேஜையின் வீரர்களிடம் காணப்பட்ட வதிசயமான குணமாவதியாதெனில், இவர்களனைவர்களும் தமது நற்செய்கைகளியாவற்றையும் கிறிஸ்துநாதரின்பொருட்டே செய்துவந்தார்களென்பதே. அவர்களது தலைவனும் ஆர்தர் அரசனு மிவ்வுயர் குணத்தை யவர்கணெஞ்சில்

வேருன்றி வளரச்செய்து, அக்காலத்திலுலகினில் நிகழ்ந்துவந்த சகல தீமைகளையுங் கிறிஸ்துநாதரின் நாமங்கொண்டே யவர்களகற்றிவரல் வேண்டுமென்பதைக் கற்பித்தனன்.

இக்குழாத்துள் ளொவ்வொருவருக்கு முதலில் ஆர்தர் அரசனே வீரனெனும் பட்டமளித்தனன். பின்னர் இவ்வீரர்களின்கீழ் அந்நாட்டிலுள்ள வுயர்ந்த குடும்பங்களைச்சார்ந்த வாலிபர்கள் அவர்கட்கேவலாளராய்ச் சேவை புரிவதற்கிணங்கியமர்ந்தனர். இவ்வேவலாளரான ஒவ்வொருவரும் தத்தந்தலைவனும் வீரனுடனேயே சஞ்சாரஞ்செய்து பல வருடகால முழைத்த பின்னர், அவ்வீரனும் தன்னிடம் சேவகஞ்செய்த வவ்வாலிபன் ஒழுங்குடனுழைத்து வீரியமான செயல்களியாவையென நன்குணர்ந்திருக்கின்றனனென நற்சாக்ஷிபத்திரமொன்றளித்து, அவனை வீரனாக்குவன். இதற்கெனப் பலஜனங்களுமறிய ஒரு உத்ஸவ சமாஜமேற்படுத்தி அக்காலத்தில் அவனைத் தன்முன்னர் முழந்தாளிடச்செய்து, அவன் தோளிற்றனது வாளால் பரிசித்து அவன் வீரனானென எழுந்துநிற்கச்செய்வது வழக்கம். இப்பழக்கத்தை யிப்பொழுதும் நமது ஜார்ஜ் அரசர் கைவிடாதனுட்டித்து வருகின்றனர்.

நமது அதிர்ஷ்டவசமாய் மேலே கூறினவைபோன்றகொடிய நிலைமைகள் உலகத்தில் தற்காலத்தில் நீங்கியிருக்கின்றன. அக்கிரமமணீதி படைத்துக் கொள்ளைசெய்யுந் தொழிலே கொண்டோராய் ஜனங்களுக் கிடுக்கண் விளைவித்துவந்த முற்காலத்திய பாளையக்காரர் அல்லது சிற்றரசர்கள் தற்காலத்திலில்லையன்றோ! நாடுகளெங்கும் நிலைபெற்ற பேரரசாட்சிகளே காணப்படுகின்றன. இவ்வளவு மாறுதல்களாகி மன்பதைகட்கு க்ஷேமமேற்பட்டிருப்பினும் இன்னும் நமக்கு மேற்கூறிய வீரர்கள் போல்வார் அவசியம் தேவையேயாகும்; ஏனெனில் இன்னு முலகிலெங்கும் அநீதியே செறிந்து விளங்குகின்றது. முன் காலங்களிற்போல் சதாகாலமுமாயுத்தசன்னாகங்கொண்டு தம்மேற்றாங்கிய ஈட்டியுடன் குதிரையேறிச்செல்லுந் தொழிலிலமர்ந்து கவசம்பூண்ட வீரர்கள் இக்காலத்திலத்துணை நமக்கவசியமாகாவிடினும், தற்காலத்திலு

மாந்தர்படு மெண்ணிறந்த துன்பமிடுக் கண்களையெல்லா, மிகத் தைரியத்துடன் ஆங்காங்குழைத்துஞ், சமயங்கணேர்ந்துழிய வற்றினிமித்தங் கலகஞ்செய்யத் துணிந்து, மவற்றை நீக்குவ தற்கென பல விடங்களிலுஞ் சஞ்சரித்துலாவிவரு மியற்கைய ரான வீரர்களிப்பொழுதுந் தேவையேயாகுமன்றோ!

இவ்வுலகினிலிப்பொழுது மெண்ணிறந்த மாந்தர் துன்ப மனீதி, நோய் முதலியவற்றாலல்லற்படுவதியாவு முங்கட்கு விச தமேயன்றோ! இவ்வனர்த்தங்களத்தனையு நீக்கப்படவேண்டு மென்பதே குருநாதரின் திருக்குறிப்பாதலின், அவ்விதந்துன் புறுந்தஞ் சகோதரர்க்காக வுழைக்கத்துணியு மெவருக்குமவர் கருணையுடனுதவிபுரிவர். தனதயலானுக் குதவிபுரிவதற்காக வொரு சிறு நற்காரியத்தையுஞ்செய்ய வெழுந்தவன் எவனுக் கும் பெரியோர்கள் தம்மிடமிருந் துற்சாகமளிப்பரென்பதிற் றடையேயில்லை. ஆகவே பெரியோனுங்குருநாத னுலகிற்குத்தஞ் சீடர்கண்மூலம் விசேட வுதவிகளைப் புரிதலுங்கூடும். ஏனெ னில் பிறர்க்குபகரிப்பதிற் பழகித் தேர்ச்சியடைந்த சீடராவோர் அனைவரும் முத்தனுங் குருநாதனுக் குகந்த கருவிகளாகி அவனது கையின் விரல்களே போன்றுழைக்குஞ் சிலமுடைய ராதலினென்க. அவர்கண்மூலமாய் குருவும் அவர்களைச்சூழ விருக்கு மாண்பெண்களனைவருக்குந் தக்க வுத்சாஹமாதிகளை யளித்துவரல் கூடுமன்றோ! ஆதலினிவ்விதங் குருதேவனுக்குக் கைவிரல்களே போன்றுதவுமாறு நீங்களியாவருமுங்களைப் பழக் கிக்கொள்ளவேண்டுமாதலின் யானுமின்றிவ் வீரியச் செயல்க ளியாவையென நுங்கட்கு விளக்கப்புகுந்தனனென்க.

இனி யிவ்வீரியம்பொருந்திய செயல்களை யெடுத்துரைக் கப்புகுமுன் அவையல்லாதனவாய வீரியமற்ற செயல்கடாணி யாவையோவென வியம்புவேன். ஏனெனில் பிற்கூறிய விவற் றைத் தவிர்த்தபின்னரே முற்கூறியவற்றை நீவிர் சாதித்தலுங் கூடுமென்க. முதலில் உண்மை வீரனுவானொருவன் செயல் எத்தன்மையாகுமென்பதை விளக்குவேன். 'தன்னைப்போலப் பிறரையும் பேணிப்போற்றலே வேண்டும்' எனுங் கிறிஸ்து

நாதரின் பழந்திருவாய்மொழியைப் பின்பற்றுவோன் எவனோ, அவனே யோருண்மை வீரனாவான் என்க. ஆதலினிவ்விதம் நுஞ்செயல்களியாவும் பிறரைப்பற்றிய வாலோசனையுடன் அவர் களது க்ஷேமலாபங்களைக் கருதியே நிகழ்ந்துவருமாயின் நீங்கள் உண்மை வீரர்களேயாவீர்களென்பதிற் றடையில்லை. ஆகவே சாமானியரான வுலகினர் எண்ணிறந்த விதங்களிற் புரிந்து வரும் வீரியமற்ற செயல்களிற் சிலவற்றை யிங்கெடுத்துரைப் பேன். இவைகளியாவு மற்பங்களேயாயினும் குருதேவனிடம்டை க்கலம்புகுந்த சீடராம் நம்போலியருக்குப் பெருந்தொழிற்களி லெப்படியோ யவ்விதமே யற்பக்காரியங்களிலும் நிலைதவறாத் தன்மையே வாய்த்தல் வேண்டுமன்றோ!

நீவிர் ஸ்வயநலங்கருதி நடிப்பதாலெத்துணையு நுஞ்செ யற்களாற் பிறர்க்கு அசௌக்கிய நேரும்படிவிடல் கூடாது. இவ்வகைச் செயற்களியாவையென சிலவுதாகரணங்களாற் காட் டுவேன். சாதாரணமான ஜனங்களின் புகைச்சுருட்டுக் குடிக் கும் பழக்கமொன்றைச் சற்றுக் கவனியுங்கள். ஜனங்களிற் பெ ரும்பாலார் இவ்விதம் சுருட்டுக்குடிக்கும் பழக்கத்தை யனுட் டிக்கு மேற்றிசைத் தேயங்களிற் இப்பழக்கமுடையோருக்கென ரயில்வண்டித்துடரில் தனியறைக ளேற்படுத்தப்பட்டிருக்கும். இங்ஙனமாய வேற்பாடிருக்கையில், இப்பழக்கமுடையா னொரு வருவன் அதற்கான வண்டியிற் செல்லாமல், மற்றைய வண்டியி லிப்பழக்கமற்றவரூடே புகுந்து, தனது சுகத்தையே கருதிச் சுருட்டொன்றை வாயில்வைத்துப் புகையை வெளிப்படுத்தித் தன்னைச் சூழ்விருப்போருக்கிடைஞ்சலை விளைவிப்பானாயின் அது வேவீரனல்லாதான் செய்கையாகும். இவ்வகையினர்க்கென வைக்கப்பட்டிருக்கு மறையானது ஜனங்கள் நிரம்பி யிடமில் லாதிருப்பினும், அக்காரணங்கொண்டு பிறர்க்கிவனிடுக்கண் விளை விப்ப துசிதமாகுமோ பாருங்கள்!

இன்னு மிவ்விதமே தம்பாடே யார்க்குங் குணமுடை யொருவன் இதர மானிடர்க் களவிலாத் துன்பமளிக்கும் வழி கள் பலவுண்டு. இவ்விந்தியாவிலே வடபால் யான் சென்று

பிரசங்கஞ்செய்த வோர் நகரின்கண் யான்றங்கியிருந்த கிருஹத்தினருகே ஒருவன் பிரதிதினமு மதிகாலையிலெழுந்து தன் கைப் புத்தகத்தினின்று முரத்த சத்தத்துடன் படித்துவந்தான். வைகறையிற்றுயினீக்கி யொருவனிவ்விதம் பிறர் யாவருக்குந் தன்னுரத்த தொனியாற் றுன்பமூட்டுவதும் நியாயமாகுமோ? இஃது பிறருக்கு ஹிம்சையேயன்றி வேறாகாது. இவ்விதமே யிந்நாட்டில் ஜனங்கள் பிறர் தங்களைத் தடுத்துக்கூறாது நிற்பதாலேயே அவரை யலக்ஷியஞ்செய்து அவருக்குப் பலவித விடஞ்சல்களை விளைவிப்பதுஞ் சகஜமாயிருக்கின்றது. இத்தகைய துன்பங்களைப் பொறுமையுடையராய நம்போலியர் சகித்துக் கொள்ளல் நியாயமேயாயினும், அவற்றால் எவ்வளவு ஹிம்சை மானிடருக்கு விளைகின்றனவென்பதை யாலோசித்தலு நங்கடைமையே யாகுமன்றோ!

இன்னு மிவ்வகையான வேறொருசம்பவமு மென் ஞாபகத்திற்கு வருகின்றது. அஃது யாதோவெனில் கூறுவேன். இன்னுமொரு ஸ்தலத்திலி யான்றங்கியதற்கயல் கிருஹத்திலுள்ளார் மூட்டிய தீயின் புகை யான் வசித்தவறையினுட் பிரவேசித்தென்னை யல்லற்படுத்தியது; அன்றியுமதைக் கண்ணுற்றோர் யாவருக்கு மஃது சகஜமாகவே தோன்றியது. இவ்விதமயலார்க்குத் தீயின் புகையால் வருத்தமுண்டுபண்ணல் அடாது என்பது பலர்க்குந் தோன்றியிருக்குமாயின், அப்புகையை யவ்வில்லின் மாடியின்மீது ஓர் புகைபோக்கியை நிருமித்து அதன் வழியப்புறப்படுத்த வேற்பாடு செய்திருப்பரன்றோ!

அப்பாலும் 'மோட்டார்' வண்டிகளிலேறி மாந்தர் பிறர்க்கிடுக்கண் விளையுமாறு செல்லுவதைக் கவனியுங்கள். அவர்கட்குத் துரிதமாய்ச் செல்லலில் விருப்பமிருப்பினும் அஃதே வழியிற்செல்லுஞ் சாதாரண நடையுள்ள எருதுவண்டிக்காரர்களின் கதி யென்னவாகின்றதென்பதைக் கவனியுங்கள். இவ்வண்டியிற் செல்லுவோன் கவுரவமுள்ள கனவானாயின் இத்தருணங்களிற்றனது மோட்டார் ரதத்தை நிறுத்தி, சாதாரண வண்டிக்காரர்கள் தங்கள் மாடுகளைத் தடுத்து நிறுத்திக்கொள்வதற்

கவ்வகாசங்கொடுத்தப்பாற் செல்லுவன். கால்நடையோற் செல். லுவோர்க்ககாவெனின் அவர்கட்கு விசேட வாதரவு செய்துபசரிப்பன். இவ்வாறு பிறர் துன்பங்கருதா மோட்டார் வண்டிக்காரர்களனந்தமுண்டன்றோ! ஒரு சமயத்தில் யானேறிச் சென்ற வோர் மோட்டார் வண்டியின் பாகன் செய்தயானென்றுங்காணுவனீதமொன்றெனது ஞாபகத்தி லித்தருணந் தோன்றுகின்றது. எனது ரதத்தின்முன்னு லிப்பாகனுக்கெதிரே ரோட்டின் மத்தியிலொரு கால்நடையிற் செல்வோன் காணப்பட்டனன். இவன் பாதையி லோர்புறமிருந்து மற்றோர் புறத்திற்குக் குறுக்கே தாண்டிச்செல்ல வாரம்பித்து, மத்தியில் தன் பின்னுல் மோட்டார் வருஞ்சத்தத்தை கேட்டுப் பதட்டத்தால் திடீரென வப்பாதையின் மத்தியிலேயே நின்றுவிட்டதை, எனது பாகன் கண்டபின்னரும் தன் ரதத்தின் வேகத்தைத் தணியாமலே யதை யொரே யோட்டமாய் யோட்டி, அம்மனிதன் முகத்திற்கு இரண்டங்குலம் வரை சமீபத்திற் செல்லும்படி நடத்தியப்பாற் சென்றான். இனி யம்மனிதன் மோட்டார்வண்டி தனதருகில் வந்ததையுணர்ந்து பயத்தால் திடீரென வப்பாற்றுவிக் குதித்தனன். அவனிதுவரை யப்பாற்செல்லாது நின்றதற்குக காரணம் அவன் குருடனாதலின் மேற்செல்லும் வழியறியாது மயங்கினின்றனனென யான் பின்னரறிந்துகொண்டேன். ஒரு போக்கியனான பாகன் இச் சமயங்களிற் றனது ரதத்தை வேகந்தணிய நடத்திவருவன். தன்னெதிரில் நின்ற வம்மனிதன் பயத்தால் நடுக்கங்கொண்டனனென்பதை யறிந்தபின்ன ரவனை யச்சந்தீர்த்துச் செல்வனேயன்றி, மேற்கூறியவண்ணம் பயமதிகமாகி மெய்ம்மறந்து போகும்படி யவனைச் செய்துவிடுவனோ சொல்லுங்கள்!

இன்னுமிந்நாட்டிலு மிங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளிலும் பகிரங்கமாய் உபநியாசங்கணடக்கு மிடங்களிலெல்லாம் காலங்கடந்துவந்து சேருமானிடரின் கொடுஞ்செயலைப் பாருங்கள். குறிப்பிட்ட வுபநியாசமானது சகலரும் வருவதற்குற்ற பொதுஸ்தலத்தி லேற்பட்டிருப்பதால், அங்கு எவரும் எத்தருணத்திலுஞ் செல்லலா மென்பதாலோ, அல்லது அதன்கண்

பிரதியாசனத்திற்கும் வேதனமளித்தே செல்லவேண்டுமென்றி ருக்குமாயின், தாங்கிரயமளித்து ஆதரவு பெற்றிருக்கும் ஆஸ னத்திற்கு தமதிஷ்டப்படி செல்லலாமென்பதாலோ, பல மாங் தர் உபநியாஸந்துடங்கிய பின்னர் நேரஞ்சென்று அவ்விடம் வருவதால் நேருமிடைஞ்சலைச் சற்றுங் கவனியுங்கள். தாம் போய்ச்சேரவேண்டு மாஸனத்திற்கு வழியிலுட்கார்ந்திருக்கும் பிறர்க்கு முபநியாஸகர்க்கு மிவர்கள் செய்யு முபத்திரவத்தை யென்சொல்லலாம். இவ்வாறே மேற்றிசையில் பெரிய சங்கீத கச்சேரிகள் நடக்குமிடங்களில், மனிதர் பிறர்க்கும் சங்கீதவித் துவான்களுக்கு மிடைஞ்சல் நேருவதைச் சற்றுங்கவனியாமலே வீண் சத்தஞ்சந்தடிகளைச் செய்துவருதலையுங் காணலாம்.

இன்னும் ரயில்வே முதலியவைகளிற் நாம் சஞ்சாரஞ் செய்யுங்காலை நம்முடன் செல்வோர்க்கு மற்றவர்க்கும் நாமன் புகொண்டொழுகிவரல் நங்கடமையே யாகுமன்றோ! இவ்விந் தியநாட்டில் காணப்படு மொரு விசேஷமியாதெனில், எந்த வூரிலும் ரயில்வரு நேரத்திற்குமுன்னரே ஸ்டேஷன் வந்துசே ருஞ் ஜனங்கள், தாங்கள் நுழையும் ரயில்வண்டியறை நிரம்ப சாமான்களைக் கொணர்ந்து வைத்துக்கொண்டுட்கார்ந்துகொள் வார்கள். இவர்கட்கிவ்வளவு சாமான்களை வைத்துக்கொள்வ தற்கு ரயில்வேயின் சட்டவிதி யிடங்கொடாததை யிவர்களு ணருகிறதில்லை. இதனால் பின்னர் கடைசிநிமிஷத்தில் வந்துசே ரும் பிரயாணிகளின் சாமான்களை வைப்பதற்கிடமில்லாமல்ப் போய்விடுகின்றது. ஒவ்வொரு பிரயாணியும் தன்னுடன் வைத் துக்கொள்ளக்கூடிய சாமான்களுக்களவு இன்னதென்றும், பின் னும் இனமாக கார்டு அதிகாரியின் பாதுகாப்பிலிருக்குமறை யில் வைக்கக்கூடிய வளவின்னதென்றும் வரையறுக்கப்பட்டி ருப்பதை யாலோசித்து, இவ்வகையினர் தத்தம் பண்டங்களை முன்னமே நிறுவைசெய்து ஒழுங்குடன் வைத்துக்கொள்ளாமல், மேலேகூறியபடி தமது அறை முழுவதும் நிறப்பிக்கொள்கிறார் கள். இஃது முற்றிலும் வீரத்தன்மையற்றதோர் செய்கையே யென்பதில் சந்தேகமில்லை.

அப்பாலும் நீவிர் தவிர்க்கவேண்டியதாய வினீதமொன் றுண்டு. அஃதியாதெனில், நீங்கள் பிறர் எவரையுஞ் சந்திப் பதாய் ஏற்பாடு செய்திருப்பதை எக்காரணத்தாலும் தவறு திருத்தலே யென்க. குறிப்பிட்டகாலத்தில் வருவதாய் நீங்கள் எவரிடமாவது ஒப்புக்கொண்டிருந்தால் அவ்வாறே நீங்கள் குறிப் பிட்ட ஸ்தலத்திற்குச் சென்றே தீரல்வேண்டும். யாதுவரினும் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவோர்களாதலே வேண்டும்.

நீவிர் நுமதுலக வாழ்க்கையை நடாத்திவரும்பொழுதெ திர்ப்படு மெவரிடமுங் கௌரவம்பாராட்டி நிற்றல்வேண்டும். கௌரவமல்லது மரியாதையென்பது அரசனது மாளிகையில் வசிப்போராகும் பிரபுக்களின் சுபாவகுணமேயாகும். நீங்களியா வரு மிப்பகிருலகில் வாழ்வோராயினும், உண்மையில் ஸ்ரீ குருநாத னது சீடர்களேயாதலின், அவனுலகமா மேநிலையில் வாழ்வுடை யரும், அரசனு மவனதருகிற் சூழவிருக்கும் பரிவாரங்களாம் பிரபுக்களுமேயாவீர்களன்றோ! ஆதலின் நீங்களு மெதிர்ப்படுமி யாவருக்கு மரியாதையே காட்டிவரல் வேண்டும். இதுவும் வெளிக்குமட்டும் உலகினர் ஒருவருக்கொருவர் காட்டிவரும் தலைதாழ்த்தல் முதலிய வெறுவேடமாய் நிற்றல் கூடாது; பின்னை எவரையுங்காணுமிடத்து அவருங் கடவுளும்மைக்கா ணுதற்கு நிருமித்திருக்குமோர் ஜன்னலே யாவரென மதித் துப்போற்றும் அந்தரங்கத்தின்கண்ணிலைபெறு முபசாரமேயா தல் வேண்டுமென்க.

இதுகாறும் வீரியமற்ற கிருத்தியங்களின்னவை யெனக் கூறிப்போந்தனா குகவினி வீரியமுள்ளவை யாவையென விளக் கப்புகுவேன். வீரியமாஞ்செயற்களின் உயிர்நிலை யாதோவெ னில் அவை யாவும் பிறரை ரக்ஷிக்குந் தன்மையுடையனவை களேயாகுமென வுணர்ந்திடுக. நீவிர் குருதேவனது சீடர்களா தலின் உங்களிடமுள்ள வீரியத்தினுதவியால் நீங்கள் பிறர் யாவ ரையும் பாதுகாத்துவரல் வேண்டுமேயன்றி, பிறர் நுங்கட்குத் தீங்கிழைப்பினதனின்று முங்களையே காத்தற் கவ்வீரியத்தை யுபயோகித்தல் கூடாது. குருதேவனது பெருங்கொடையான

வீரியமெனுந் தனத்தை பிறருக்குச் சேவைபுரிதற்கே யாக்கி வரல்வேண்டும்.

முற்காலங்களில் ஆர்தர் அரசனைச்சேர்ந்த வீரர்களியாவரும் நாட்டிலுள்ள குடிகளுக்கு நேர்ந்த இடுக்கண்களைத் தீர்த்துவந்தார்கள். அக்காலத்தில் போலீஸ் ராணுவங்கிடையாது தேசமெங்கும் கொள்ளை புரிவோர்களனேகரிருந்தனர். ஆதலின் மேற்கூறியபடி யக்காலத்திய வீரர்களிருந்தனராக, விந்நாட்களில் போலீஸ் முதலினோரின் உதவிகளிருப்பதால் ஜனங்கட்கு நும்போலியர் செய்யு முதவியும் வேறுவிதமாய் நிகழலே வேண்டும். இக்காலத்தில் ஜனங்களுக்கு அவர்களுண்ணின்றே யுயிரழிக்குஞ் சத்துருவினின்று மவர்களை ரக்ஷித்தலே நுங்கடமையாகுமென்ச. அந்நாளிற்போலவே யிந்நாளிலும் ஜனங்களுக்கு விசேட ஆதரவும் பாதுகாப்பு மவசியமாகின்றது. எவ்விதமெனில் அறிவெனுஞ்சோதியை யறியாமலே அறிவின்மையா மந்தகாரத்திலுட் கிடத்தலையே சாமானியரான மன்பதைகளுடிக் காலங்கழித்துவருதலின், இவ்வித வறிவின்மையா மந்தரங்க சத்துருவின் மாயையினின்றுமவர்களை விடுவித்தற்குழைத்தலே நுங்கள் பெருங்கடமையாகுமன்றோ!

இத்தகைய வுயர்தரமான வீரியச் செயற்களை நீங்கள் வயதுவந்து பக்குவமடைந்தபின்னரே பூரணமாய்ச் செய்து முடிக்கத் தகுதியடைவீர்கள். பின்னை இச்சிறுபிராயத்திலிருக்கும்பொழுது நீங்கள் மேலேகூறி முடித்த வீரியமற்ற செயல்களைமட்டுந் தவிர்த்து நிற்கத் துணிந்து ஜயமடைவீராயின் இதுவே ஸ்ரீ குருதேவனுக்குத் திருப்தியைத் தருமென்பதிலையமில்லை. இஃதுங்கட்கு முதற்படியாகும். இவ்வழி யொழுகியப்பால், பருவம் வந்தபின், பிற்காலத்தில் சகல மானிடர்க்கும் அறிவின்மையை யகற்று மடுத்தபடியாகும் பெருங்காரியங்களைச் செய்துமுடித்தற்கு வல்லமையைப் பெறுவீர்கள்.

இனியிம்மேதினியின் க்ஷேமார்த்தம் நீவிர் செய்யவேண்டிய வுதாரச் செயல்களி யாவற்றையு மிரண்டு விபாகங்களாய்ப் பிரித்துக்கொள்வோம்.

ஜீவன்முத்தராங் குருமூர்த்திகளால் நிருவஹிக்கப்படும் உலகரக்ஷண மகாகாரியத்தில் * இரண்டு பெரும் விபாகங்கள் (Departments) அல்லது டிபார்ட்டுமெண்டுகளுளவென யான் முன்னொருதடவையிற் நுங்கட்குக் கூறியுள்ளேன். ஒன்று மனுக்களின் வழியும், மற்றொன்று 'போதிசத்வா' என பௌத்த தேசங்களிலழைக்கப் பெறும் ஜகத்குருமூர்த்திகளின் † வழியுமாமெனக. இங்கு முதலில் மனுக்களாம பிரபுக்கள் ஆக்ஞாபிக்குமு லோகோபகாரச செயல்களியாவையென விளக்குவாம்.

ஸ்ரீ மனுமூர்த்தியானவர் தனது வர்க்கத்தைச் சார்ந்த சகல மானிடரும், சோர்வு, கோழைத்தனமாகிய விவ்விரண்டு குற்றங்களையுந் தவிர்த்துநிற்றல் வேண்டுமெனக் கோறுகின்றனர். தனது வம்ச மானிடர்களனைவரும் தகுதியுற்ற தொழிலாளிகளாயும் பேருழைப்பு முயற்சியுமுடையோராயும் விளங்க வேண்டுமென்பது அவர் சங்கல்பம். பெருந்தன்மையும் வீரசூர சுபாவமும் படைத்து உலகந்தழைக்குமோர் நற்காரியம் வரினதற்காகத்தமதெனு மெல்லாவற்றையும் அர்ப்பணஞ்செய்யுமியற்கைபூண்டோராதல் வேண்டுமென்பதே யவர் கோரிக்கையாகும். இவ்விதம் ஜனங்கள் பீதி, சோம்பலாந் துர்க்குணங்களைநீங்கி க்ஷேமப்படவேண்டுமாயின், அதற்கு நீங்கள் பலவிதங்களிலுழைக்கவேண்டும். இவற்றுட் சிலவற்றை யிங்கு ஸ்ரீ மனுவாம் குருமூர்த்தியினது வழியிற் செல்ல விரும்புவோர்க்குபயோகமாம்படி யெடுத்துக்காட்டுவேன்.

---

* ஏன்றுங்கருணைபெற்ற யின்பத்தபோதனர்சொல்
சென்ற சென்ற திக்கனைத்துஞ் செல்லுமபராபரமே! தாயுமானவர்.

† குறிப்பு:—மகர்ஷிகளுள் வியாஸபதவியிலுள்ளோரே ஜகத்குருவெனப்படுவர். இவர்களதாதரவின் கீழேயே உலகிலவ்வக்காலத்திற்றோன்றுஞ் சகல கல்வி கேள்விமுதல் தத்வவாராய்ச்சிமயமான சமயங்களின் பிரசாரங்களும் நிகழுகின்றன.

களிலும், புத்தகங்களிலும், அவ்விதமே நாடகசாலைகளிலும் மிக வருவருப்புக்குரிய வவலக்ஷணம் நிரைந்து விளங்குவதைக் காணலாகுமன்றோ!

கடல்சூழ்ந்த விவ்வையகத்திலித்தருணம் எங்குநோக்கினும் மென்மேலு மழகுமானந்தமும் பிரகாசிக்க வேண்டுமாயின் அளவிலாச் சீர்திருத்தங்கள் நடைபெறவேண்டியதா யிருக்கின்றன. சுந்தரத்தன்மையாஞ் செல்வத்தை மானிடர்போற்றி யபிமானிக்கும்படி நீவிர் அவர்க்குபதேசித்தல் வேண்டும். இவ்வழகை ஜனங்களும் தந்தம் பிரதிதின வாழ்க்கையில் காட்டிவரும் பழக்கமடைவாராயின் நாம் எங்குசெல்லினும், எதைக்காணினு மங்கெல்லா நமக்கிவ்வழகே தென்படும். கைகிலகப்படும் வர்த்தமான பத்திரிகையை நோக்கினும் சமயத்திற்கிட்டும் புத்தகத்தைப் பார்க்கினும் மற்றும் எவ்வகைப் பண்டங்களைக் கண்கொள்ளினு மங்கெல்லாம் சித்திரங்கள் முதலிய வடிவங்களிற் சுந்தரமேதோன்றி நம்மை யெதிர்கொண்டழைக்குமன்றோ! இவ்வழியிலுழைக்கத்துணிவீராயின் நுங்கட்கு வேண்டும் பொழுதெல்லாம் ஜகத்குருவாம் பெருமானிடமிருந் தளவிலாவுத்ஸாஹம் வந்தடையு மென்பதிலையமே யில்லை. உங்களிலொவ்வொருவரையு மம்மகாபுருடன் தனது அன்பையுமழகையு முலகிற்குச் சுமந்துசெல்லுந் தூதனா யாக்கிக்கொள்ளற்கே திருவுளங் கொண்டிருக்கின்றனரென நீவிர் தெளிந்துணருதல் வேண்டும்.

நுங்கட்கு வயதுவருநாளில் இதுவேயுகந்த பெருந்தொழிலாயேற்படும். ஆனால் இதுமிகவுஞ் சுலபமானதொழிலென யான் கூறவரவில்லை. ஏனெனில் இப்பெருமுபகாரத்தை யுடையவிரும்புமானிடரதிக சொற்பமேயாவர். இதுவே நமதுலகை யுற்றுநோக்குவோர் யாவருக்கும் வியசனத்தை விளைவிக்குமம்சமாகின்றது. பசியுடன்வருந்துவோ னொருவனிடம் வந்து "ஐய, விதோவுனக்கன்னமெனக் கூறினவன் களிப்புடன் சட்டெனக் குதித்தெழுந்தவைதைத்தருகவென கேட்பானன்றோ!''வென நீவிர் நினைந்தியான்மேற் கூறியது ஒருவாறுண்மையாகாதென வாக்ஷேபிக்கத்துணிவீர்கள், ஆயினுமவ்வுதாகரணங் கொண்டே யுலகினரி

னியலை யானுமெடுத்துக் காட்டுவேன் கேண்மின்: நீவிர் அவ்வி தம் பரிந்துதவவெண்ணங் கொண்டணுகிய வொருவனுட னே நுங்கையிலிருக்கு மாகாரத்தைக் கூர்ந்துநோக்கி "ஐய, விது வன்றி யான் வழக்கமாய் பெற்றுக்கொள்ளுமுணவு, ஆதலினெனக் குதவா விவ்வன்னத்தைப் புட்கொள்ளுதலினும் யான் பசியுடன் கிடத்தலே நன்றாகு"மென விடையளித்து விடவுமுண்டன்றே! இவ்விதமாய வியற்கையதிகமாய் இவ்வுலகமாக்களினிடம் படி ந்து விளங்குகின்றமையினாலேதான் உலகிற்குதவுதலு மத்தனை மிகக்கடினமாகின்றது. ஆதலின் நீங்களெப்பொழுது மிடைவிடா திவ்வழி முயன்றுவருதலு மிச்சிந்தனையே பிரதிதினமுங்கொ ண்டு நுஞ்சகல காரியங்களையு நிறைவேற்றியுழைந்துவருதலு மவ சியமாகும்.

இனி நீங்கள் தக்க வயதுவந்தபின் பிரௌடமையையடைந்த மானிடாம்பொழுது ஸ்ரீ குருதேவனுக்காப் பெரும்பெருங்காரி யங்களைச் செய்யப்புகின் அக்காலை நுங்கள் தொழிலுஞ் சுல பமானதாகுமோ. ஆகாது. ஏனெனி னக்காலத்தில் நுமதுப காரச்செயல்களி யாவற்றையு முலகினர் தப்பபிப்பிராயங்கொண் டுங்களை யவதூறுபேசி வேண்டியவளவிடைஞ்சல்களையே யுண் டுபண்ணுவார்கள். நமது பிர்மஞான சபையினராகிய நம்போ லியர் உலகிற்குபகாரஞ்செய்துவருவதை யுலகத்தவர் ஏற்றுக் கொள்ளாமையும், அதனால் நம்மனோர்க்கு நேர்ந்திருக்குந் துன் பவிசார முதலியவற்றையு நீங்கள் முன்னரே கேள்வியுற்றிருப் பீர்களன்றே! ஆதலின் நீங்கள் படும்பாடு மெவ்வாறாயினு மவற் றைப் பாராட்டாது பிறர் துக்கங்களை நீக்குவான்பொருட்டு நுங்கள் பிராணனையும் விடத் துணிவுகொள்ளலே வேண்டும். ஸ்ரீ குருதேவனுக்குண்மையாகி யாட்பட்டு நிற்குங்கால் மரண ம்வரினுமதையு மனுபவிக்கத் துணிவுறலே, அம்மாபுருடனுக் கபராதியாய் பிராணனைமட்டுங்காத்து வாழ்வதினும்பன்மடங் குமேன்மையாகுமென்பதி லையமுண்டோ?

மானிடரிற் பிறர் நுங்கட்கல்லல் விளைவித்தாலும், அல் லதுங்களை யுயிர் நீக்குவித்தாலும் பாதகமேயில்லை. உண்

களிலும், புத்தகங்களிலும், அவ்விதமே நாடகசாலைகளிலும் மிக வருவருப்புக்குரிய வவலக்ஷணம் நிறைந்து விளங்குவதைக் காணலாகுமன்றோ!

கடல்சூழ்ந்த விவ்வையகத்திலித்தருணம் எங்குநோக்கினும் மென்மேலு மழகுமானந்தமும் பிரகாசிக்க வேண்டுமாயின் அளவிலாச் சீர்திருத்தங்கள் நடைபெறவேண்டியதா யிருக்கின்றன. சுந்தரத்தன்மையாஞ் செல்வத்தை மானிடர்போற்றி யபிமானிக்கும்படி நீவிர் அவர்க்குபதேசித்தல் வேண்டும். இவ்வழகை ஜனங்களும் தந்தம் பிரதிதின வாழ்க்கையில் காட்டிவரும் பழக்கமடைவாராயின் நாம் எங்குசெல்லினும், எதைக்காணினு மங்கெல்லா நமக்கிவ்வழகே தென்படும். கையிலகப்படும் வர்த்தமான பத்திரிகையை நோக்கினும் சமயத்திற்கிட்டும் புத்தகத்தைப் பார்க்கினும் மற்றும் எவ்வகைப் பண்டங்களைக் கண்கொள்ளினு மங்கெல்லாம் சித்திரங்கள் முதலிய வடிவங்களிற் சுந்தரமேதோன்றி நம்மை யெதிர்கொண்ட ழைக்குமன்றோ! இவ்வழியிலுமெழக்கத்துணிவீராயின் நுங்கட்கு வேண்டும் பொழுதெல்லாம் ஜகத்குருவாம் பெருமானிடமிருந் தளவிலாவுத்ஸாஹம் வந்தடையுமென்பதிலையமே யில்லை. உங்களிலொவ்வொருவரையு மம்மகாபுருடன் தனது அன்பையுமழகையு முலகிற்குச் சுமந்துசெல்லுந் தூதனு யாக்கிக்கொள்ளற்கே திருவுளங் கொண்டிருக்கின்றனரென நீவிர் தெளிந்துணருதல் வேண்டும்.

நுங்கட்கு வயதுவருநாளில் இதுவேயுகந்த பெருந்தொழிலாயேற்படும். ஆனால் இதுமிகவுஞ் சுலபமானதொழிலென யான் கூறவரவில்லை. ஏனெனில் இப்பெருமுபகாரத்தை யடையவிரும்பு மானிடரதிக சொற்பமேயாவர். இதுவே நமதுலகை யுற்றுநோக்குவோர் யாவருக்கும் வியசனத்தை விளைவிக்குமம்சமாகின்றது. பசியுடன்வருந்துவோ னொருவனிடம் வந்து "ஐய, விதோவுனக்கன்னமெனக் கூறினவன் களிப்புடன் சட்டெனக் குதித்தெழுந்தலைத்தருகவென கேட்பானன்றோ!"வென நீவிர் நினைந்தியான்மேற் கூறியது ஒருவாறுண்மையாகாதென வாக்ஷேபிக்கத்துணிவீர்கள், ஆயினுமவ்வுதாகரணங் கொண்டே யுலகினரி

னியலை யானுமெடுத்துக் காட்டுவேன் கேண்மின். நீவிர் அவ்வி
தம் பரிந்துதவவென்னாங் கொண்டணுகிய வொருவனுட
னே நுங்கையிலிருக்கு மாகாரத்தைக் கூர்ந்துநோக்கி "ஐய, விது
வன்றி யான் வழக்கமா யெற்றுக்கொள்ளுமுறையு, ஆதலினெனக்
குதவா விவ்வன்னத்தை யுட்கொள்வதினும் யான் பசியுடன்
கிடத்தலே நன்றாகு"மென விடை பகர்ந்து விடலுமுண்டன்றே!
இவ்விதமாய வியற்கையதிகமாய் இவ்வுலகமாக்களினிடம் படி
ந்து விளங்குகின்றமையினாலேதான் உலகிற்குதவுதலு மத்தனை
மிகக்கடினமாகின்றது. ஆதலின் நீங்களெப்பொழுது மிடைவிடா
திவ்வழி முயன்றுவருதலு மிச்சிந்தனையோ பிரதிதினமுங்கொ
ண்டு நுஞ்சகல காரியங்களையு நிறைவேற்றியுழைத்துவரலு மவ
சியமாகும்.

இனி நீங்கள் தக்க வயதுவந்தபின் பிரௌடிமையடைந்த
மானிடராம்பொழுது ஸ்ரீ குருதேவனுக்காய் பெரும்பெருங்காரி
யங்களைச் செய்யப்புகின் அக்காலை நுங்கள் தொழிலுஞ் சுல
பமானதாகுமோ. ஆகாது. ஏனெனி னக்காலத்தில் நுமதுப
காரச்செயல்களி யாவற்றையு முலகினர் தப்பபிப்பிராயங்கொண்
டுங்களை யவதூறுபேசி வேண்டியவளவிடைஞ்சல்களையு முண்
டுபண்ணுவார்கள். நமது பிரமஞான சபையினராகிய நம்போ
லியர் உலகிற்குபகாரஞ்செய்துவருவதை யுலகத்தவர் ஏற்றுக்
கொள்ளாமையும், அதனால் நம்மனோர்க்கு நேர்ந்திருக்குந் துன்
பவிசார முதலியவற்றையு நீங்கள் முன்னரே கேள்வியுற்றிருப்
பீர்களன்றே! ஆதலின் நீங்கள் படும்பாடு எவ்வாறாயினு மவற்
றைப் பாராட்டாது பிறர் துக்கங்களை நீக்குவான்பொருட்டு
நுங்கள் பிராணனையும் விடத் துணிவுகொள்ளலே வேண்டும்.
ஸ்ரீ குருதேவனுக்குண்மையாகி யாட்பட்டு நிற்குங்காலை மரண
ம்வரினுமதையு மனுபவிக்கத்துணிவுறலே, அம்மாபுருடனுக்
கபராதியாய் பிராணனைமட்டுங்காத்து வாழ்வதினும்பன்மடங்
குமேன்மையாகுமென்பதி லையமுண்டோ?

மானிடரிற் பிறர் நுங்கட்கல்லல் விளைவித்தாலும், அல்
லதுங்களை யுயிர் நீக்குவித்தாலும் பாதகமேயில்லை. உண்

மையில் நீங்களியாவரு மான்மாக்களேயாதலின் மரணமென்பதுங்கள் சரீரங்கட்கேயன்றி நுங்கட்கெங்ஙனம் நிகழும்? அன்றியு முங்கட்கு, நேருஞ்சகல வாபத்துக்களையும் எல்லாமறிந்த குருநாதன் அறிந்திருக்கிறானென்பதையு நீவிர் மறந்துவிடல் கூடாது. சீடர்கட்கு நேரவிருக்குமாபத்துக்களை யவருடனே யறிந்துகொள்வரன்றோ! அவர்கள் பசியில் வருந்துவாராயினதையும் குருமூர்த்தி தெரிந்துகொள்வர். அவர்கட்கேதேனு மவசியமான வுதவி தேவையாயினதையு மவரறியுந் திறமுள்ளவர். நமது சகல விருத்தாந்தங்களையு மவரறிவரெனும் திடநம்பிக்கை நுங்களுள்ளத்தில் நிலைபெறல்வேண்டும். அவரிவற்றையெல்லாந் தெரிந்துகொள்வரென்பதை யுணர்ந்தபின் வேறெதையு நீவிர் கருதல்வேண்டுமோ? நுங்கட்குவேண்டு முதவி யுபகாரங்களை யவரே ஈந்தளிப்பர்; அவ்விதமே யொருசமயத்தில் நுங்கட்கு மாணம் நேரினும் நீவிரவ்வித முங்களது ஸ்தூலதேகத்தை விட்டொழித்தல் வேண்டுமெனத் திருவுள்ளங்குவித்திருப்பதனாற்றா னவ்வாறு நிகழுமேயல்லது வேறன்றென்பதையு நீங்களுணர்ந்துகொள்ளல்வேண்டும். நுங்கள் மரணத்தையவர் அங்கீகரிப்பதுங்கூட இந்தருணத்தில் அதனாலுலகத்திற்கு நீங்கள் ஜீவித்திருப்பதைக் காட்டினு மதிகமாய்ப் பயன் விளையுமென்பதாற்றானெனவுமறிக.'

முன்னொருகாலத்தில் மேலேகூறியவண்ணம் ஓர் உத்தமசீடருக்கு இரண்டுதடவைகளில் மரணநேர்ந்ததை யிங்கு விரித்துரைப்பேன். வெகுகாலத்திற்குமுன் அலெக்ஜாந்திரியாவெனுமாநாட்டின்கண் "ஹைப்பேஷியா" வென்ற நாமம்பூண்ட உத்தமப் பெண்மணியாவாள் ஒருவளிருந்தனள். அக்காலத்தில் கிறிஸ்துமதங் கிளம்பி சின்னாட்களேயானதால் அஃதிளமைப் பருவத்தினின்றது. அதைச்சார்ந்தோராய மாந்தர் அறிவின்மைபால் கிரீஸ், எகிப்து முதலிய நாடுகளின் பூர்வகாலத்திய சமயங்களை யவதூறுபேசியவற்றின் கொள்கைகளையெல்லா மூடபக்தியுடைய வியவஹாரங்களென விகழ்ந்துபேசினர். உண்மையில் இப்பழஞ்சமயக் கோட்பாடுகள் பொய்மையுடையன

வன்று, பின்னை அவற்றுட்சிறந்த பல வுண்மைகள் விளங்கின. ஆதலினிவற்றிற்காப்பரிந்து நம் 'ஹைறப்பேஷியா'ப் பெண்மணியுமாங்காங்கு அப்பழஞ்சமயப் புகழ்ச்சியை விளக்குவாளாயினள். எவ்வித வாக்ஷேப விநோதங்களையுங் கவனியாது இம் மாதரணிகலம் துணிவுடனெழுந் தலைசமறியுமாறு "பழஞ்சமயங்களிலுண்மை யுளதென" அறைந்தனள். இவற்றைப்பொருது முடிவில் நங்கிறிஸ்துமதத்தினர் விசேட பலமடைந்து அப்பெண்மணியைக் கொன்றனர். அவ்வம்மணியைக் கொன்றவிதமே கொடியதினுங் கொடியதே. ரதமேறிச் சென்று கொண்டிருந்த வம்மாதினை யிப்பாதகர் கூட்டமாய்ச் சூழ்ந்து திடீரென ரதத்தைவிட்டு சமீபத்திலிருந்த தங்கோவிலுக்குள் வரை யிழுத்து கடற்கிளிஞ்சியால் எலும்புநாளுமட்டுங் கிழித்துச்சுறண்டி யுயிர்போக்கினர். ஆயினுமென்னை! ஹைறப்பேஷியாவும் ஸ்ரீ குருதேவனின் சிஷ்யாவமடைந்தவளன்றோ! அவ்விடருற்ற தருணத்தில் பிராணன் சரீரத்தைவிட்டு நீங்கியவுடன் அவளெங்கு நின்றனளென நினைக்கிறீர்கள்? குருதேவனிடமே சென்றனளென்பதி லையமென்னை! நடந்த சம்பவங்களியாவற்றையு மருகிலிருந்தாற்போ லறிந்துகொண்ட குருமூர்த்தியும் அவள் சரீரத்தைவிட்டு நீங்கினவுடன் அவளை தன் கரத்திலேந்தி தனதாசிரமத்திற்குக் கொண்டேகினர்.

அப்பாற் பின்னொரு ஜன்மத்தில் இச்சீடரே இத்தலி நாட்டில் "கயார்டானோ ப்ரூனோ" வென்பாராய் அவதரித்து விளங்கினர். அந்நாளில் கிறிஸ்துமதம் பழமையடைந்துநிற்க, நூதனமாய் வுத்ஸாஹங்கொண்டு பிரத்தியக்ஷமாய் சகல பதார்த்தங்களையும் பரிசோதிக்கு முணர்ச்சி பெருங்கோலாகலத்துடன் பலருமங்கீகரிக்கும் கோட்பாடாய்த் தோன்றியது. இதைக் கண்ணுற்று பழஞ்சமயமாய கிறிஸ்துமதத்தினர் பொறாமையும் விரோதமுங்கொண்டு தம்மறியாமையால், இந்நூதன வுத்ஸாஹமியாவு முண்மையற்றதெனவும், தேவவிரோதியா மாயையெனத் தகும் பிசாசின் காரியமெனவுங் கூறிவந்தனர். இதைச் சகியாதவராய் நமது 'ப்ரூனோவும்' இந்நூதன வுணர்ச்சியிலுண்மை

விளங்குகின்றதென கோஷித்துவந்தனர். இதற்காக வவரைப் பலவித கொடுமைகட்குள்ளாக்கி சிறைச்சாலையில் கிடத்தி முடிவில் உயிருடன் இரும்புமுளையிற்கட்டி தீயிமூட்டிக் கொன்றனர். இத்தருணத்தில் மரணதண்டனை விதிக்கப்படுமுன் அவரை விசாரணைஸ்தலத்திற் கொண்டுபோய் நிறுத்தியபொழுது தமக்குற்ற கதியை நோக்கி யவரும் பீதியடைந்தனரோ பாருங்கள்? தன்னை விசாரணைசெய்ய வெளிவந்த நியாயாதிபதியாவோரை நோக்கியவரத்தருணத்திற்கூறியதாவது "ஐயன்மீர் மரணமடையவிருக்குமென்னிலும் அந்தகைய தண்டனையை விதிக்கத்துணிந்த நீங்களன்றோ அதிக பயங்கொண்டோராய்க் காணப்படுகின்றீர்" என்பதே. அவர் எனிவ்விதஞ் சற்றும்பயமடையாது நின்றனரென்பதை யுன்னுங்கள். அவரிடம் ஸ்ரீ குருநாதனின் சத்தியத்தருணம் விளங்கிநின்றமையினாற்றானெனவறிக. * இவ்வாறே யுத்தமமாய் பெருநோக்கமெய்தி யுலோகோபகாரமாதி யுயர்காரியத்திற்றலையிட்டு அதற்காக வுயிரிழக்கத்துணியு மெவனுக்கு மிம்மேன்மையே கிட்டுமென்க. ஆதலின் நுங்கட்கு மிவ்விதக் கேடுகளிலெதுவேனும் அல்லது மரணமேவரினும், நீங்களுமுறுதியைக் கைவிடாது வியவஹரித்தலே மேன்மையாகும். ஏனெனில் நீங்களியாவரும் ஸ்ரீ குருநாதனிடம் சீடர்களா யடைக்கலம்புகுந்தவராதலின் உங்களுக்கு நேருஞ்சகல சம்பவங்களையும் அவரறிந்துகொண்ட வக்காலங்களில் நுங்களையும் பாதுகாப்பரன்றோ!

குருநாதர் ஜீவதசையி லிருப்பதெல்லாம் மானிடரின் துன்பங்களை யகற்றுவித்தற்கே யெனப் பன்முறை நுங்கட்கியானியம்பினேனன்றோ! ஆதலின் அவரதியற்கையையே கைக்கொண்டு நீங்களுமொழுகத் துணிதல்வேண்டும். மானிடர் யாவருக்குந் துன்பங்கணேரும் வழியு மிருவகையாகும். முதலாவது ஸ்தூல

* தானவனாந் தன்மையெய்தித் தண்டமென விண்டமெங்கு
ஞானமதயானை நடத்துநா ளெந்நாளோ!

சிற்றறிவு மௌனச் சிதைந்தெம்மான் பேரறிவை
யுற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ! தாயுமானவர்.

வுலகத்தில் சம்பவிக்குந் துன்பங்கள். இவற்றையெல்லாம் தக்க வுழைப்பாளிகளாய மாந்தரை யுத்ஸாகப்படுத்தி நியமித்தலானும், வியாபார கைத்தொழின் முறைகளைச் சீர்திருத்தி யாங்காங்கு நூதனவேற்பாடுகளை ஸ்தாபித்தலானு மகற்றுவிக்கலாகும். இதற்கு ஸ்ரீமனுவானவர் உத்ஸாகமளித்தருளுவர். இனி மானிடர் தம்மனங்களிற் றுன்புற்று வருந்துவதையெல்லாம் அவரவர்க்கு இவ்வகைக் கேடுகளின் காரணங்களை யெடுத்து விளக்குவதாலும், அவற்றை நீக்கிக்கொள்ளு முபாயங்களைக் கற்பிப்பதாலும் அகற்றுவிக்கலாகும். இக்காரியத்தில் ஸ்ரீபோதிசத்வராம் பெருமானு முதவியளித்தருளுவர்.

ஆதலின் ஸ்ரீகுருவின் சீடர்களாய நீங்கள் யாவருந் தீரமுடன் உயர்காரியங்களைச் செய்துவரல்வேண்டும். சகல மானிடர்க்கு நீங்களிரக்ஷகரு முதவியளிப்போரு மாதல்வேண்டும். நீங்களிக்காலத்திற் சிறுவர்களாயிருப்பினு மிப்பொழுதே சாமானிய மாந்தர்க்கெல்லா மூத்தோராகியே விளங்குகின்றீர்கள் என்பதிலையமில்லை. ஆதலின் இவ்வகை மூத்தோராவார் செய்ய வேண்டுங் கடமைகளையே பாவித்து பிறர் யாவருக்கு மவரெவ்வகைக் குற்றம்புரியினு மவ்ஙைக் கொள்ளாதுபகாரமே செய்துவருதலே யுங்களது கடமையாகும். நுங்களை யங்கீகாரஞ்செய்திருக்கும் ஸ்ரீகுருநாதனுக்கு மற்றுமுலகினில் ஞானமூர்த்திகளாய் நிற்குஞ் சகல பெரியோருக்கும் நீவிரனைவரும் தகுந்த கருவிகளல்லது தூதர்களாய் நிற்பதை யிரவிலும்பகலினு மெப்பொழுது மறவாது நிற்றலேவேண்டும்.

குருதேவனுந் தானுங்களுக்கு கருணையால் நீங்கள் பிறர்க்குதவிசெய்து வருதலை நாடினுமெலாழிய நுங்கட்கெவ்வித வருளையுமவனுதவுதற் குடன்படானென யானுங்கட் கியம்பியதை யெக்காலத்திலு நீங்கள் மறந்துவிடல் கூடாது.

ஆதலினிவ் வீரியமாஞ் செயல்களென்பதியாவும் பிறரைச் சம்ரக்ஷிக்குந் தொழிற்களே யெனவும், மானிடரனைவரையுந் தம்முளுளும் பிறருள்ளுமூன்றி நிற்குந் துர்க்குணங்களாஞ் சோர்வு

கோழைத்தனமுங் கொடுமை யவலக்ஷண மிவைகளையற நீக்கிக் கொள்ளச்செய்யு முதவிகளேயெனவு நீங்கள் தெளிந்துணர்ந்து கொள்ளல்வேண்டும்.

ஆதலினிதுகாறுங் கூறிப்போந்தவற்றுளித்தகைய பெருந் தொழிற்கே யாட்பட்ட நீவிரனைவருங் கடைப்பிடியாய் மனத் திற்கொள்ளற்பாலது தானியாதோவெனில் ஸ்ரீ குருநாதனும் பெருமானையே மனத்திலுன்னி "தில்லைபரமாங் குருதேவரே! எமக்கு வாய்த்த தந்தைவடிவான பேருறவே யாங்களனைவரும் நினதருளாலே சகல மானிடர்பொருட்டும் வீரியமுடை செயல் களையேபுரிந்து வரக்கடவோம்" என நும்மனத்துள்ளேயே பிர திக்ஞையொன்றைச் செய்துவரல் வேண்டுமென்பதே.

*　　　*　　　*　　　*

எனதருமைச் சிறுவர்களே யானிதுகாறு நான்குதினங் களாயுங்கட் கியம்பியவை யாவும் ஸ்ரீகுருநாதாது பெருங்காரி யங்கணிறைவேறுதற்கேற்ற கால்வாய்களாய் நீங்களுங்களையே யாக்கிக்கொள்ளற்குற்ற சாதனங்களான மலர்ந்த பார்வைகள், தீரமொழிகள், சந்தோஷநிறைந்த நினைவுகள், வீரியமுடைய செயல்களிவற்றை விளக்கிக் காட்டுகின்றன. இவற்றையெல்லா நீவிர் மறவாது, நெஞ்சிலழுத்திக்கொண்டு மிவற்றை நுங்கள தியற்கையிற் றாபித்துக்கொளற்கு பிரதிதினமுஞ் சிறிதுழைத்து வரலும்வேண்டும். அவ்வித முயன்றுவருவீராயின் நீங்கள் சிறுவ ராயினுமிப்பொழுதே குருதேவருமுங்கண்மீது பிரகாசிப்பதைக் கண்டுகொள்ளுவீர்கள்- தற்காலத்தில் நீங்கள் பெரியவுபநியாசிக ளல்லராயினும், பிரபல நூலாசிரியரல்லராயினும், உங்களது சிறு மைப்பருவத்து மொழிகளிலும், நீங்கள் எழுதுங் கடிதங்களிலும் ஸ்ரீகுருதேவனதருள் விளங்கு மம்சங்கள் சிறிதளவு கலந்தேசெ ல்லுமென்பதிலையமில்லை. ஏனெனில் குருதேவனுக்குப் பிரீதி யைத்தருவது நீங்களுடையும் வித்தியா கௌரவமாகாது. பின் னையிவ்வுலகத்திற் குதவிபுரிய நீங்கள் கொள்ளுமவாவு முங்கள துத்தம நினைவுகளு மன்புநிறைந்த கோரிக்கைகளுமே யாகு மன்றோ!

நுங்கட்கிக்காலத்திலநேகம் சௌக்யங்களும் பாக்கியங்களும் வாய்த்திருக்கின்றனவன்றோ! அவற்றுள் ளிவ்விளமைப் பருவத்திலேயே குருமூர்த்தியை வந்தடைந்திருக்கும் பெருமை யொன்றாகும். இதற்குமுன் பல ஜன்மகாலங்களில் நீங்களிவ் விதங் குருவையடைய விரும்பியே வந்திருக்கிறீர்களென்பதிற் றடையில்லை. இத்தருணத்தில் அவ்வள்ளல் நுங்கோரிக்கையை யளித்தருளி நுங்களைத் தனதருகிற்சேர்த்திருப்பதை யிகழ்ந்து விடாது அந்நன்றியைப் பெரிதுமே பாராட்டி. அவனது தொழிற்குகந்த சகாயஞ்சேவைகளை நீவிர் புரிந்து வரல்வேண்டும்.*
அவ்விதம் நீவிர் இவ்விளமைப்பருவத்தில் குருசேவையை நிறைவேற்றற்கு யானிந்த நான்கு தினங்களாய்க் கூறிப்போந்த நான்கு சாதனங்களைக் காட்டினும் முசிதமானவழி வேறெதுவுங் கிட்டாதென்க.

ஆதலினிவ்வசனங்களை யிதுகாறுஞ் செவிசாய்த்தும் ஸ்ரீ குருமூர்த்தியின் சேவையு முலோகோபகாரமும் புரியத்துணியு முங்கட்கெல்லாம் பெருங்கருணை வள்ளலாங் குருநாதனருள் வாய்க்குக.

---

* நீயெனநானெனை வேறில்லையென்னு நினைவருளத்
தாயெனமோன குருவாகிவந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனையே பரமேசநின் றிருவருளுக்
கேயென்ன செய்யுங்கைம் மாறுளதோசுத்த வேழையனே!

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே!

மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு வாழியருள்
வார்த்தையென்றும் வாழியன்பர் வாழி பராபரமே!

பந்தமெல்லாந்தீர பரஞ்சோதி நீ குருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே! தாயுமானவர்.

# முடிவுரை.

1. யான் பலவீனராமனைவரையு மிரக்ஷிக்குங் கைவாளா வேன். என் குருநாதன் றிருக்கரத்தில் யாதொருபொழுது மழி வடையேன்.

2. யாதொரு கேடயமுமாவேன். எனது* ஆதரவினில் யுத் தஞ்செய்யு மெவனுக்கும் யானோர் நூதன உத்ஸாஹத்தை யளிப்பேன்.

3. யானின்னுமெதற்கு மிபானிருதயம்போலும் விளங்கு வேன். என்னை யண்டிவந்தடைவோர்க் கியானோரடைக்கலமு மாவேன். அன்றியுமவர்க் காதாரவாயுற்ற வறிவையும் புகட்டு வேன்.

4. அப்பாலுமியான் ரோஜாப் புஷ்பமுமாவேன். எனது பரிமளந்தன்னை நுகருவோர்க்கு அன்பெனுந் தேவலோகாமிருத மும் அடங்காச் சாந்தியுங்கிட்டும்.

5. யானின்னு மேலாமசேதன வான்மாவேயாவேன். என துறவுற்ற வென்சோதரர்களுக் குதவும் மேற்கூறிய கத்தியுங் கேடயமு மெனதுடைமைகளேயாகும்.

சுபமஸ்து சாந்தி:

---

* பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல் வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே.

## உதயதிசை நக்ஷத்திர சங்கம்.



# நோட்டீஸ்.

"இவ்வுலகினில் தருமம் குறைந்து அதர்மத்தின் ஏற்றம் நிகழுமாயின் அப்பொழுதெல்லாம் யான் அவதரிப்பேன்" என்ற கண்ணபிரானது திருவாய்மொழியின் பிரகாரம், இக்காலகதியை அறிந்துணரும் அறிஞர்களிற் சிலர் ஒரு மகா குரு, உலகின் காரியாதிகளை சீர்திருத்தவும், அதர்மம் அழிந்து தர்மம் ஓங்குமாறு செய்வதற்காகவும் அதிசமீப காலத்தில் அவதாரமாகி வெளிவரப்போகின்றார் என்று உறுதியாய் யாவரும் அறியக்கூறுகின்றனர். அவர் வருங்காலத்தில் அவர் நல்வரவை ஜனங்கள் அங்கீகரிப்பதற்கு ஆயத்தமாயிருக்கும் வண்ணம், மானிடர் மத்தியில் அன்பும் தயையும் மென்மேற் பரவி வருவதற்கு ஏற்ற பிரயத்தனங்களைச் செய்வதற்காக இச்சங்கம் ஏற்பட்டுள்ளது.

குமரிகுடகம் திருவேங்கடம் ஆகிய எல்லையுள்ளடங்கும் தமிழ்நாட்டில் உதயதிசை நக்ஷத்திர மகாசங்கத்தின் கிளைசங்கத்தினராகிய சகல கனதனவான்களுக்கும், மேற்படி மகாசங்கத்தின் உத்தேசமாகிய ஜகத்குருவாகும் பரமாசாரியனது வருகையில் நம்பிக்கையும் சிரத்தாபக்தி அபிமானமும் கொண்டோராகிய யாவருக்கும் தெரிவிப்பது யாதெனில்:—

இத்தென்னாட்டில் அவனது திருவரவை எதிர்பார்த்துழைக்கும் யாவருக்கும் ஓர்கருவியாய் அப்போதைக்கப்போது இவ்வுயர்ந்ததோர் பெருங்காரியத்திற்கு உதவும் சகலவித விவரங்களையும், செய்திகளையும் நமது தமிழ்நாடுமுழுவதும் பரவிவரச் செய்வதற்கும், பின்னும், இக்கிளைச்சங்கங்கள் மத்தியில் யாவரிடமும் சென்று தூதுபோய் வந்துகொண்டிருப்பதற்காகவும், தனிப்பத்திரிகையொன்று அவசியமாகுமென்பதை யாவரும் அறிவார்கள். உதயதிசை நக்ஷத்திரசங்கத்தின் அடையாறு ஆபீஸிலும் மற்றும் தேசாந்திரங்களிலும் நடக்கும் நடவடிக்கைகளும் வியவகாரங்களும் இங்கிலீஷ்பாஷையிலேயே நடத்தப்படுகின்றபடியால் அவையெல்லாம் தமிழ்மாத்திரம் அறிந்தோர்க்கு எவ்வாறுபயன்படும்? உதயதிசைநக்ஷத்திரசங்கத்தில் முக்கியஸ்தர்களான நமது பெரியோர்கள் பேசும் பேச்சுக்களும், செய்யும் உபந்நியாசங்களும் எவ்விதம் தமிழ் அறிந்

தோர்க்கு உதவும். இவையாவற்றையும் தெரிந்துகொள்ளாவிடில் எப்படிப் பரமனும் நமது தந்தைவருவதற்காக தமிழுலகமாந்தர்கள் உழைப்பதுஞ் சாத்தியமாகும்?

ஆதலின், இவ்வகைக்காரியங்களை நிறைவேற்றுவதற்கு ஒரு சிறு தூண்டுகோலாய் உதவும்படி சிறியதான பத்திரிக்கை ஒன்றை பாடல் பெற்ற க்ஷேத்திரங்களுள் ஒன்றாகிய இத்திருமீயச்சூரெனும் ஊரிலிருந்து வெளிப்படுத்த உத்தேசித்து முடித்திருக்கிறோம். தமிழ்நாடு முழுமைக்கும் மாகாணக் காரியதரிசியின் அதிகாரம் வகிக்கும்படி நியமனம் செய்யப்பட்டிருக்கிறவரான மகாராஜஸ்ரீ அ. ரெங்கசுவாமிஅய்யர் பி. எ. பி. எல். அவர்களும் இந்த உத்தேசத்தை ஆமோதித்து பத்திரிகையைப் பிறப்பிக்கும்படி சம்மதம் அளித்திருக்கிறார்கள். ஜகத்குரு தூதன் எனும் உயர்ந்த நாமதேயத்துடன் இப்பத்திரிகை பிரதிமாதமும் உதயதிசை நக்ஷத்திர மகாசங்கத்தின் புண்ணியதினங்களில் ஒன்றாகிய 28ம் தேதியன்று பிரதிமாதமும் இவ்வூரிலேயே ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் பிரும்மவித்தியா அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்து உலாவும். இதற்குத்தற்காலம் வருஷம் ஒன்றுக்கு சந்தா அணா 12. ஆக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. இச்சந்தாத் தொகையை மட்டுங்கொண்டு பத்திரிகையை சீர்பெற நடத்துவது முடியாதென்பது இவ்விஷயத்தில் அனுபவமுள்ள யாவருக்கும் தெரிந்ததுவாதலின், அதற்கெனத் தனியான பண்டு ஒன்று ஏற்படுவதற்காக பிரயத்தனம் செய்யாவிடின் பத்திரிகை நீடித்து நிலைபெறுதல் சாத்தியமாகாது. அதநிமித்தம் சகல அபிமானிகளும் தம்மாலியன்ற பொருளுதவியைச் செய்து இந்நற்றொண்டை நிலைநிறுத்துவார்களென உறுதியாய் நம்புகிறோம். நன்கொடை எவ்வளவு சுவல்பமேயாயினும், அதையும் அனுப்பி இந்நற்காரியத்திற்குப் பிரயோசனப்படும்படி செய்யவேண்டியது சகல அபிமானிகளின் கடமையாகும்.

இந்நிருபத்தைக் கண்ணுறும் சகல நேயர்களும் இப்பத்திரிகைக்கு சந்தாதாரர்களாகச்சேரும் உத்தேசத்தை ஒரு வாரத்திற்குள் எமக்குத் தெரிவிக்கவேண்டுகிறோம். இவ்வூரிலேயே நிலைபெற்றிருக்கிற பிரும்ம வித்தியா அச்சுக்கூடத்தில் இப்பத்திரிகையை அச்சிடுவித்து காலந்த வறாமல் வெளியேற்றப்படும்.

ஸ்டார் குரூப்,
திருமீயச்சூர்,
பேரளம், S.I.Ry.
தஞ்சாவூர் ஜில்லா.
15—1—1918.

இங்ஙனம் தங்கள் விதேயர்கள்
**A. ரத்தினசபாபதி முதலியார்,**
**R. ஸ்வாமிநாதய்யர்.**
**P. V. இராமச்சந்திர சாஸ்திரி.**

---

* கடிதம் முதலியவை "R. ஸ்வாமிநாதய்யர், சாந்தி ஆச்ரமம், திருமீயச்சூர், பேரளம் போஸ்ட்" என்ற விலாசத்திற் கெழுதிக்கொள்ளலாம்.

இதினால் கிடைக்கும் சகல வருமானமும் இவ்வூர் தர்மக் கல்விச்சாலைக்கே உபயோகமாகிறது.




# Words of Peace.

Vol. II.] சாந்தி வசனம். [No. 3 & 4.

ஸ்ரீமான். ஜினராஜதாஸர் அவர்களால்

இயற்றப்பட்ட

# I PROMISE.

# எனது பிரதிக்ஞை

மூன்றாம் பாகம்.

Published by

A. RATNASABHAPATHI MUDALIAR, F. T. S.,

*Santhi Asramam*, T. S. *Tirumeyachur*,

Peralam Post Tanjore.

September & October, 1917.

திருமீயச்சூர்

பிரம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

 [விலை அணா 6.



இனி முக்தனுங் குருதேவரும் பிரதிதின்முந் தான் வசிக்கு மூலைகையும், தனது வசத்திலுள்ள மானிடரனைவரையும், தனக் கடிமைபூண்ட சீடர்களான தன் சொந்த மனிதரையும், பிரயத் தின பூர்வமாய்த் தனதன்பிற் கிலக்காக்கி வருவர். தன்னாற் சோதனை நிலையிலேற்றப்பட்டிருக்குந் தனது புதுச்சீடர்களின் பரீக்ஷார்த்தம் தனதாசிரமத்தில் சூட்சும பிரகிருதியினாலாக்கி வைக்கப்பட்டிருக்கும் "பிரதிமைகளை" அவர் நாடொறும் பார்த்துவருவரென்பதையு நீங்களறிவீர்கள். ஆயினுமிவ்விதமிப்பிர திமைகளை மிகவுங் கடுமையாய் அவற்றிற்குரியரா வோரிடமுள குற்றங்குறைகளை யாராய்ந்து, நமது பாடசாலையில் பரீக்ஷகர்கள் மாணாக்கர்களைச் சோதித்து குற்றங்களையறிந்து அவரவர்கள் வகுப்புகளிற்குத் தகுதியின்மையைத் தீர்மானிப்பதுபோல், உங்களைத் தள்ளிவிட விச்சியாமல், நீங்கள் நாளடைவில் அபிவிர்த்தி யடைந்து வருவதைக் கண்ணுற் றுங்களிடமுள பலவீனங்களை யெல்லா மகற்றவு முங்கட்குறுதியை யளிக்கவு முயலுவர். இவ் வாறே யுலகில் மானிடரனைவரையுமே யவர் உதவிகளைப் புரியு நோக்கங்களுடனும் ஆனந்த நிறையுள்ளத்துடனு முற்றுநோக்கி வருவர். இவரிவ்வித முலகின்மீது தனது திருஷ்டியைச் செலுத் தும்பொழுதெல்லா மவரிடம் மலர்ந்த பார்வைகளுந் தீரவசனங் களுமே விளங்குமன்றோ! இவ்வாறே தனதன்பிற் கிலக்காகு மானிடரனைவரையுமே பற்றியவர் தியானமுஞ்செய்வர். ஆத லினிவ்வள்ளலை நீங்களும் பின்பற்றியே நிற்பீராகி * நாடொறு மீவிர் அன்புசெலுத்து மாந்தரனைவரையும் பற்றி நினைந்துவரல் வேண்டும்; நீங்கள் அன்புவைக்க விச்சைகொளு மனைவரையு

* ஏறுநெறியே மலத்தை யெரித்தலா
லீரிலுறையா விருளை யறுத்தலான்
மாறிற்பசு பாசம் வாட்டலால் வீடுக
கூறுபரனே குருவா மியம்பிலே.

அத்தனருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தோட சித்தறத் தெளிவித்தச் சீவனை
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னங்கரு மத்திடுந் தன்மையே.

மின்னுறெனக் குறிப்புடன் தீர்மானித்துக்கொண்ட பின்னர் நமது பிரதிதின தியானத்திலவர்களை நினைந்து வரலேவேண்டும்.

மேற்றிசைத் தேயங்களில் நல்வழியிற் பழக்கப்படும் ஒவ்வொரு சிறு குழந்தையும் இரவில் தான் நித்திரையிற் செல்லு முன் தன் மழலைச்சொற்களாற் கடவுளை நோக்கி யிலகுவானதோர் ஜபத்தைக் கூறிமுடிப்பது வழக்கமாயிருக்கின்றது. அஃதடியில் வரும் விதமாய் நிகழும். "கடவுளே கிருபைபுரிவீராக. என் தந்தையாருக்கு மெனது அன்னைக்கும் நின்னருளுண்டாகுக. அப்படியே என்னண்ணன் 'ஜாக்' குக்கும், அத்தையார் 'ஜேன்' அம்மாளுக்கு மப்பால் தாதியாகிய 'நானி'யம்மாளுக்கும் இன் னும் எமது வீட்டுநாய் 'பிங்கோ'வுக்குமே நின் கிருபை வருக." இவ்விதம் மொழிந்தபின் னச்சிறுகுழந்தை தனக்குஞ், சூழநிற்கும் பெரியோ ரொவ்வொருவரிடமுமிருந்து ஆசிர்வாதம் கிடைக்கும்படி வேண்டுதலைச் செய்யும். இவ்வற்பக் குழந்தை விரும்பு வண்ண மதன் பிரார்த்தனைகளையுங் கடவுள்கேட்டு அவ்வாறே தன்னருளைப் பொழியாதொழிவரோ? இங்கு இச்சிறுவனது பிரார்த்தனையின் முடிவில் தனக்கும் அருள்வேண்டுமென தன் பெற்றோர் முதலினோரைக் கேட்டலத்தனை யவசியமாகாது. இவ்வருளாசிர்வாதங்களை யெல்லாம் நாம் பிறர்பொருட்டளிக்கும் பழக்கமே நமக்கவசியமாகும். நாம் நெஞ்சார வன்புசெலுத்துவோர் சிலரை நாமன்புடன் நினைக்கும் பொழுதெல்லாம் உடனே நம்மிடமிருந்து அவருக்கு நமதருளும் செல்லுகின்றது. ஆனதாற்றான் நமது குருதேவரைப்போல நீங்களும் உங்கட்கு வேண்டியவர் யாவரையு நினைந்துவரல் வேண்டுமென யான் கூற லுற்றேன். குருதேவர் தினந்தோறுங் காலையில் உலகின்மீது

---

ஈனப் பிறவியி லிட்டது மீட்டேட்டி
தானத்து ளிட்டுத் தனையூட்டித் தாழ்தலு
ஞானத்தின் மீட்டலு நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலு முத்தன்றன் செய்கையே.

பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலய மெல்லாம்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. திருமந்திரம்.

தன் கருணைமழையைப் பொழிந்தாசீர்வதிக்கிறார். இப்பொழுது குருதேவரைப்போ லத்தனை விஸ்தாரமான மானிட சமுகத்தில் அன்புசெலுத்துங் கடமையும் பொறுப்பு நுங்கட்கில்லை. தற்கால த்திலுங்களன்பிற்கு விஷயமாய்ச் சிற்சிலரே யேற்பட்டிருப்பர். ஆயினுமிவ் வியற்கையில் நீவிர் பழகிவரத் துணிவீராயின், நாளடைவில் அதிகமதிகமாய் உங்கட்கு நண்பர்கள் கிட்டி வருவதையும், நுமதன்பிற் கிலக்காகி நும்மாற் க்ஷேமப்படுத்தப் படுவோராவாரின் றுகைவரவர விஸ்தாரமாய்ப் பெருகி வருவதை யுங் கண்டுகொள்வீர்கள்.

இனியுங்களி லொவ்வொருவருக்கும் வருங்காலத்தில் கிட் டற் பாலதாய பரமானந்த நிலையொன்று கிடக்கின்றது. உங்களி லொருவருக்கு அப்பேறு உளத்துள்ளகமகிழ்ச்சியின் மூலமாகவும், இன்னுமொருவருக்கு ஆங்கு விளங்குங் குணமாய அன்பின் வழி யாயும், மற்றொருவர்க்கு வீரியமாந் தன்மையைப்பற்றிய முடி வில் வந்தடையும். ஸ்ரீகுருதேவனுக் குகந்த சீடர்களாய் நீவிர் நாளடைவிலாகி வரும்பொழுது, நீங்களனுபவிப்பதற் கெனவே அவ்வுயர்நலம் பெருமானந்தநிலை வெகு காலமாய் காப்பாற்றி வைக்கப்பட் டிருக்கின்றதென்பதை நீங்களே கண்டுகொள்வீர் கள். இவ்வாறு அனுபவ முதிர்ச்சியில் உள்ளத்தினுள்ளே அக மெலாங் குழைந்துருக, வீறுசத்தியும் உவட்டாச் சுந்தரமும் விளங்க, விரவிவிரவி மேற்கொளு முணர்ச்சியாகு மவ்வுயர்நிலை யுங்களொவ்வொருவருக்கும் எவ்வெவ்விதமாய் எவ்வெவ்வுருவத் தோடுண்டாகுமென்பதை யானறியேன். இதையுள்ளபடி ஸ்ரீ குருதேவரேயறிவர். * பின்னர் காலம் வரும்பொழு துங்கட்

---

* இருப்பா யிருந்திடப் பேரின்ப வெளிக்கே நமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
வருட்பாய நமக்காக ஆளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயார் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

தாயுமானவர்.

ஊனாயுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனா யமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க் கொன்றைச் சேவகனார். திருவாசகம்.

குத்தானே வெளியாகும். ஆயினுமிப்பொழுதே நீங்களப்போரா னந்தம் பெறற்கு வேண்டிய தகுதியை வருவித்துக்கொள்ளும் பொருட்டு முயற்சியை யாரம்பித்தல் கூடுமன்றோ! அவ்வித முயற்சியை நடததிக்கொள்ளும்வித மியாதென்பதைப் பற்றித் தானிப்பொழு துங்கட்கு விரித்துரைக்க வெழுநதேன் என்க.

ஆதலாலெப்பொழுது மானந்தமே யுங்களுள்ளுறையிற் பிரகாசிதது வருமாறு நீங்கள் கடவுளின் சோதியை யுற்றுநோக் காது, அதற்கு முதுகுகாட்டி யொழுகி யுங்களதம வியற்கையாகு

ஞானக் கரும்பின் றெளியைப் பாகை
நாடற்கரிய நலத்தை, நந்தாத
தேனைப் பழச்சுவை யாயி னானைச்,
சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனைப், பிறப்பறுத் தாண்டு கொண்ட
கூத்தனை, நாததழும் பேற வாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர
பாடிப் பொற்சுண்ண மிடித்து நாமே.

மேற்கண்ட வாயுவுங் கீழ்ப்பட்ட மூலத்து
வெந்தழலைச் சூற்கொண்ட மேகமென வூமை
நின்று சொரிவதை யென்றுற் கண்டதன்று,
மவுனோபதேசி யளிகையை யினிப்
பாற்கண்டு கொண்டனன், மேலேயமிர்தம் பருகுவனே.

கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தெதென நான் சொல்லுவேன்
விற்கண்ட வான்மதிகாண மௌனி மௌனத்தனித்த
தானமதி லூறு மமிர்தம்.

தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தானறிந்து,
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாய்த்
தீனன்றனக் கிரங்கினையே யினிச் சிந்தை தனக்கென்று
மானந்தந் தானல்ல வோபரமே சச்சி தானந்தமே. தாயுமானவர்.

பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவருளாற் சிவ மாகுமே. திருமந்திரம்.

திழலைக் கண்ணுற்றே காலங்கழியா திருத்தல்வேண்டும்.*பின்னைச் சதாகாலமுமவ் வானந்தத்தையே பாவித்துவருதற்கு நுங்களா லியன்றவரை முயன்றே வரல்வேண்டும். வீரியம், அழகு, சாந்தி, யிவையாவுங் குறைவிலாநிறைவாய்ச் சகல மானிடற்குமே வாய்க்கும்படி நினைவால் முயாலுதல்வேண்டும். இதுவே, பல்லூழி காலமாய்ப் பரமன் நுங்கட்காச் சேகரித் திரகசியமாய் வைத்திருக்கும் ஆனந்தமா மமுதினை யடைதற் குங்கட்குற்ற வழியாகும். †

---

* இன்பத் துளேபிறந் தின்பத் துளே வளர்ந்
தின்பத் துனேநினைக் கின்ற திதுமறந்
துன்பத துளேசிலர் சோருறுங் கூறையென்
றுன்பத் துளேநின்று தூங்கு கின்றார்களே. திருமந்திரம்.

ஆராவமுதே யரசே யானந்த வெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே!

போறிவே யின்பப் பெருக்கே பராபரமே!

அருவருவாகி யல்லவாய்ச் சமய
மளவிடா வானந்த வடிவே
வடிவிலா வடிவாய் மனதினை வணுகா
மார்க்கமீாய் நீக்கருஞ் சுகமாய்
முடிவிலா வீட்டின் வாழ்க்கை வேண்டினர்க்குன்
மோன மல்லால் வழியுண்டோ?

படியிரு ளகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை யடக்கி யோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே
யன்ப ரைப் பருகுமா ரமுதே!

அங்கங்குழைந் துள்ளுருகு மன்பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக்கடலே சம்பூரண போதத்தனே! தாயுமானவர்.

முழுக்காதலாகி விழிநீர் பெருக்கிய முத்தரொனுங்
குழுக்காணநின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே!

தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந் தாமரையா
லினையும் பொன்மன்ற முநின்றுடுஞ் சோதி மணிவிளக்கே!

ஆகவே நீங்களியாவரும் பிரதிதினமுங் குருநாதனும் பெருமானை மனத்திலுன்னி, "தீதில் பரமாங் குருதேவரே! எமக்கு வாய்த்த தந்தைவடிவான பேருறவே! யாங்களனைவரும் நினதருளாலே சகலமனித வர்க்கத்திற்கும் க்ஷேமத்தை வருவித் தற்கா வெப்பொழுதுஞ் சந்தோஷநிறைந்த நினைவுகளையே நினைந்து வருவோமாக"வென வுறுதியுடைப் பிரதிக்ஞை யொன்றைச் செய்துவரலே வேண்டும். *

---

* சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்க
லற்புதமே தோன்ற லாகுஞ்சற் சீடனே.

மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவ மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளு மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி யொன்றுண்டு.

சிவனை வழிபட்டா ரெண்ணிலாத் தேவ
ரவனை வழிபட்டாங் காமா றொன்றில்லை
யவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூட லுமாமே.

# வீரியமுடைய செயல்கள்.

---

யானின்று நுங்கட்கு இந்நூலின்ஆரம்பத்திற் குறிப்பிட்ட குணங்களல்லது சாதனங்கள் நான்கனுள்ளும் கடையதான உதாரமான செயல்களைப்பற்றி வசனிப்பேன். இவை பூர்வகாலத்தில் உலகில் வசித்துவந்த வீரர்களின் செய்கைகளாகவே விளங்கிவந்தன வாதலின், அவ்வகையினருள் முக்கியமான சிலரைப்பற்றிய விவரங்களை யிங்கெடுத்துரைப்பதுசிதமாகும். இவ்வகை யுயர்தர காரியங்களைப் புரிந்துவந்த வீரர்களில் நமக்குச் சரிதவாயிலாய் நன்கு தெரிந்தவர்கள் முன்னொருகாலத்தில் இங்கிலாந்தின் அரசனாய் வாழ்ந்துவந்த கீர்த்திமானாகிய 'ஆர்தர்' எனுங்கோமகனது பாதநிழலிலமர்ந்து காலங்கழித்த அவனது சாமந்தர்களே. இவர்களனைவருக்கும் வட்டப்பலகையின் (மீதாசனங்கொள்ளும்) வீரர்கள் * எனுவிருதும் பட்டமும் ஏற்பட்டிருந்தன.

கிறிஸ்துப்பிறந்து ஆறு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் இங்கிலாண்டில் ஆர்தர் எனுமோரரசன் சிம்மாசனமேறி யாண்டுவந்த காலத்தில் தேசமுழுமையும் ஒன்றோடொன்று கலகமிட்டுவந்த பல சின்னாடுகளாய்ப் பிரிந்து பெருங்குழப்ப நிரம்பி நின்றது. இப்பன்மாகாணங்கட்குந் தலைவர்களாய சிற்றரசர்களியாவரும் நீதியற்ற கொடுங்கோன்மையுடையராய் நடித்துவந்தமையின் அவர் கீழமைந்த குடிகளெல்லாம் சந்தோஷமற்றவராகினர். இச்சமயத்தில் அரசபதவியடைந்த ஆர்தர் மன்னன் தன் கோலினிழலிலமர்ந்த குடிகளனைவரும் க்ஷேமமுற்று வாழும்படி, சகல வநீதியையு மொழித்துவிட வெண்ணங்கொண்டவனாய், மேலே கூறிய "வட்ட மேஜையின் வீரர்களெ"னும் 'பெயர்பூண்டதோர் யௌவனசாலிகளான' புகழ்பெற்ற சூரர்

* குறிப்பு நமது மதன்னாட்டில் சங்கப்பலகையின் மீதமரும் புலவர்கள், இருந்ததுபோலென்க.

குழந்தை யுண்டுபண்ணினன். இவர்கள் அரசன தரண்மனைக்கு வரும்பொழுதெல்லாம் ஓர் வட்டமேஜைப் பலகையைச் சூழ வீற்றிருப்பார்கள். அவர்களை யரசனுந்தனது சகோதரர்களென வருமையுடன் வரவழைப்பன். இவ்வீரர்களனைவரும் உலகின ரின் க்ஷேமத்திற்காகச் சூரத்தன்மை பொருந்திய வுழைப்புஞ் சேவையும் புரிவதாய் அரசனிடம் பெருஞ்சபதங்களைச் செய் தனராதலின், அவற்றைப் பற்றி யுங்கட்கிப்பொழுது முதலில் சிறிது கூறுவேன்.

எவரும் பிறருக்குக் கொடுமை புரிவதைக்காணின் உடனே யவரவரைத் தடுத்து நிறுத்தி யடக்கிவிடுதலைத் தங்கடமையாகக் கொள்வதாய் அவ்வீரர்கள் அரசனிடம் சபதஞ்செய்தனர். எவ் விடத்திலாயினும் ஆண், பெண், குழந்தைகளை யவரவர்களது அதிகாரியாவார் கொடுமையாய் நடத்திஞல் அவ்வாபொருட்டு அவ்வவ்வீரன் அங்ஙனே சண்டை புரியத் துணிவன். நற்குணம், நன்மைகளை யெங்கு கண்ணுறினுமதை ரக்ஷிப்பதாய் அரசனுக்கவ் வீரர்கள் வாக்குக்கொடுத்தனர். இவற்றையெல்லா நிறைவேற் றுதற்கெனவே அவர்கள் தேயமெங்கு மலைந்துதிரிவாரா யுத் தத்திற்காயத்தங்கொண்டு சதாகாலமும் கவசமணிந்த மேனி யுடன் மாவேறிச்சென்றுவருவர். ஆயினும் அன்னபானமாதி கள் ஒன்றும் தம்முடன் கொண்டுசெல்லாது தனிமையிலேயே சஞ்சரித்துச் சென்று, ஆங்காங்கு அதிதிகளை யுபசரிக்குஞ்சில மூள்ள ஜனங்களையேயண்டிக் காலங்கழித்துச் செல்லுவர். பல தடவைகளில் கோட்டை கொத்தளங்கள், அன்னபான வசதி களற்ற நாடுகளினூடு மவர் சஞ்சரிக்க நேரும். கொடிய தீயோர், அல்லது ராக்ஷசர்களொடும் எவ்விடத்திலுந் திடீரென அவர் கள் யுத்தஞ்செய்ய நேருவதுஞ் சகஜமாயிருந்தது.

இஃதிங்ஙனமாக, இவ்வட்டமேஜையின் வீரர்களிடம் காணப்பட்ட வதிசயமான குணமாவதியாதெனில், இவர்களனை வர்களும் தமது நற்செய்கைகளியாவற்றையும் கிறிஸ்துநாத ரின்பொருட்டே செய்துவந்தார்களென்பதே. அவர்களது தலை வனும் ஆர்தர் அரசனு மிவ்வுயர் குணத்தை யவர்கணெஞ்சில்

வேரூன்றி வளரச்செய்து, அக்காலத்திலுலகினில் நிகழ்ந்துவந்த சகல தீமைகளையுங் கிறிஸ்துநாதரின் நாமங்கொண்டே யவர்க ளகற்றிவரல் வேண்டுமென்பதைக் கற்பித்தனன்.

இக்குழாத்துள் ளொவ்வொருவருக்கு முதலில் ஆர்தர் அரசனே வீரனெனும் பட்டமளித்தனன். பின்னர் இவ்வீரர்க ளின்கீழ் அந்நாட்டிலுள்ள வுயர்ந்த குடும்பங்களைச்சார்ந்த வாலி பர்கள் அவர்கட்கேவலாளராய்ச் சேவை புரிவதற்கிணங்கியமர்ந் தனர். இவ்வேவலாளரான ஒவ்வொருவரும் தத்தந்தலைவனும் வீரனுடனேயே சஞ்சாரஞ்செய்து பல வருடகால முழைத்த பின்னர், அவ்வீரனும் தன்னிடம் சேவகஞ்செய்த வவ்வாலிபன் ஒழுங்குடனுழைத்து வீரியமான செயல்களியாவையென நன்கு ணர்ந்திருக்கின்றனனென நற்சாக்ஷிபத்திரமொன்றளித்து, அவனை வீரனுக்குவன். இதற்கெனப் பலஜனங்களுமறிய வொரு உத்ஸவ சமாஜமேற்படுத்தி அக்காலத்தில் அவனைத் தன்முன்னர் முழந் தாளிடச்செய்து, அவன் தோளிற்றனது வாளால் பரிசித்து அவன் வீரனுக்னுனென எழுந்துநிற்கச்செய்வது வழக்கம். இப் பழக்கத்தை யிப்பொழுதும் நமது ஜார்ஜ் அரசர் கைவிடாத னுட்டித்து வருகின்றனர்.

நமது அதிர்ஷ்டவசமாய் மேலே கூறினவைபோன்றகொடிய நிலைமைகள் உலகத்தில் தற்காலத்தில் நீங்கியிருக்கின்றன. அக்கி ரமமனீதி படைத்துக் கொள்ளைசெய்யுந் தொழிலே கொண்டோ ராய் ஜனங்களுக் கிடுக்கண் விளைவித்துவந்த முற்காலத்திய பாளையக்காரர் அல்லது சிற்றரசர்கள் தற்காலத்திலில்லையன்றே! நாடுகளெங்கும் நிலைபெற்ற பேரரசாட்சிகளே காணப்படுகின்றன. இவ்வளவு மாறுதல்களாகி மன்பதைகட்கு க்ஷேமமேற்பட்டிருப்பி னும் இன்னும் நமக்குமேற்கூறிய வீரர்கள் போல்வார் அவசியம் தேவையேயாகும்; ஏனென்னில் இன்னுமுலகிலெங்கும் அநீதியே செறிந்து விளங்குகின்றது. முன் காலங்களிற்போல் சதாகாலமு முயுத்தசந்நாகங்கொண்டு தம்மேற்றாங்கிய ஈட்டியுடன் குதிரை யேறிச்செல்லுந் தொழிலிலமர்ந்து கவசம்பூண்ட வீரர்கள் இக் காலத்தி லத்துணை நமக்கவசியமாகாவிடினும், தற்காலத்திலு

மார்ந்தர்படு மெண்ணிறந்த துன்பமிடுக்கண்களையெல்லா, மிகத் தைரியத்துடன் ஆங்காங்குழைத்துஞ், சமயங்கணேர்ந்துழிய வற்றினிமித்தங் கலகஞ்செய்யத் துணிந்து, மவற்றை நீக்குவ தற்கென பல விடங்களிலுஞ் சஞ்சரித்துலாவிவரு மியற்கைய ரான வீரர்களிப்பொழுதுந் தேவையேயாகுமன்றோ!

இவ்வுலகினிலிப்பொழுது மெண்ணிறந்த மாந்தர் துன்ப மனைத்தி, நோய் முதலியவற்றாலல்லற்படுவதியாவரு முங்கட்கு விச தமேயன்றோ! இவ்வனர்த்தங்களத்தனையு நீக்கப்படவேண்டு மென்பதே குருநாதரின் திருக்குறிப்பாதலின், அவ்விதந்துன் புறுந்தஞ் சகோதரர்க்காக வுழைக்கத்துணியு மெவருக்குமவர் கருணையுடனுதவிபுரிவர். தனதயலானுக் குதவிபுரிவதற்காக வொரு சிறு நற்காரியத்தையுஞ்செய்ய வெழுந்தவன் எவனுக் கும் பெரியோர்கள் தம்மிடமிருந் துற்சாகமளிப்பரென்பதிற் றடையேயில்லை. ஆகவே பெரியோனுங்குருநாத னுலகிற்குத்தஞ் சீடர்கண்மூலம் விசேட வுதவிகளைப் புரிதலுங்கூடும். வினை யில் பிறர்க்குபகரிப்பதிற் பழகித் தேர்ச்சியடைந்த சீடராவோர் அனைவரும் முத்தனுங் குருநாதனுக் குகந்த கருவிகளாகி அவனது கையின் விரல்களே போன்றுழைக்குஞ் சீலமுடைய வராதலினென்க. அவர்கண்மூலமாய் குருவும் அவர்களைச்சூழ விருக்கு மாண்பெண்களனைவருக்குந் தக்க வுத்சாஹமாதிகளை யளித்துவரல் கூடுமன்றோ! ஆதலினிவ்விதங் குருதேவனுக்குக் கைவிரல்களே போன்றுதவுமாறு நீங்களியாவருமுங்களைப் பழக் கிக்கொள்ளவேண்டுமாதலின் யானுமின்றிவ் வீரியச் செயல்க ளியாவையெவை நுங்கட்கு விளக்கப்புகுந்தனனென்க.

இனி யிவ்வீரியம்பொருந்திய செயல்களை யெடுத்துரைக் கப்புகுமுன் அவையல்லாதனவாய வீரியமற்ற செயல்கடாணி யாவையோவென வியம்புவேன். ஏனெனில் பிற்கூறிய விவற் றைத் தவிர்த்தபின்னரே முற்கூறியவற்றை நீவிர் சாதித்தலுங் கூடுமென்க. முதலில் உண்மை வீரனுவானொருவன் செயல் வத்தன்மையாகுமென்பதை விளக்குவேன். 'தன்னைப்போலப் பிறரையும் பேணிப்போற்றலே வேண்டும்' எனுங் கிறிஸ்து

நாதரின் பழந்திருவாய்மொழியைப் பின்பற்றுவோன் எவனோ அவனே யோருண்மை வீரனாவான் என்க." ஆதலினிவ்விதம் நுஞ்செயல்களியாவும் பிறரைப்பற்றிய வாலோசனையுடன் அவர்களது க்ஷேமலாபங்களைக் கருதியே நிகழ்ந்துவருமாயின் நீங்கள் உண்மை வீரர்களேயாவீர்களென்பதிற் றடையில்லை. ஆகவே சாமானியரான வுலகினர் எண்ணிறந்த விதங்களிற் புரிந்து வரும் வீரியமற்ற செயல்களிற் சிலவற்றை யிங்கெடுத்துரைப்பேன். இவைகளியாவு மற்பங்களேயாயினும் குருதேவனிட மடைக்கலம்புகுந்த சீடராம் நும்போலியருக்குப் பெருந்தொழிற்களிலெப்படியோ யவ்விதமே யற்பக்காரியங்களிலும் நிலைதவறாத் தன்மையே வாய்த்தல் வேண்டுமன்றோ!

நீவிர் ஸ்வயநலங்கருதி நடிப்பதாலெத்துணையு நுஞ்செயற்களாற் பிறர்க்கு அசௌக்கிய நேரும்படிவிடல் கூடாது. இவ்வகைச் செயற்களியாவையென சிலவுதாகரணங்களாற் காட்டுவேன். சாதாரணமான ஜனங்களின் புகைச்சுருட்டுக் குடிக்கும் பழக்கமொன்றைச் சற்றுக் கவனியுங்கள். ஜனங்களிற் பெரும்பாலார் இவ்விதம் சுருட்டுக்குடிக்கும் பழக்கத்தை யனுட்டிக்கு மேற்றிசைத் தேயங்களிற் இப்பழக்கமுடையோருக்கென ரயில்வண்டித்தொடரில் தனியறைக ளேற்படுத்தப்பட்டிருக்கும். இங்ஙனமாய வேற்பாடிருக்கையில், இப்பழக்கமுடையா னொருவன் அதற்கான வண்டியிற் செல்லாமல், மற்றைய வண்டியிலிப்பழக்கமற்றவரூடே புகுந்து, தனது சுகத்தையே கருதிச் சுருட்டொன்றை வாயில்வைத்துப் புகையை வெளிப்படுத்தித் தன்னைச் சூழவிருப்போருக்கிடைஞ்சலை விளைவிப்பானாயின் அது வேவீரனல்லாதான் செய்கையாகும். இவ்வகையினர்க்கென வைக்கப்பட்டிருக்கு மறையானது ஜனங்கள் நிரம்பி யிடமில்லாதிருப்பினும், அக்காரணங்கொண்டு பிறர்க்கிவனிடுக்கண் விளைவிப்ப துசிதமாகுமோ பாருங்கள்!

இன்னு மிவ்விதமே தம்பாடே பார்க்குங் குணமுடையொருவன் இதர மானிடர்க் களவிலாத் துன்பமளிக்கும் வழிகள் பலவுண்டு. இவ்விந்தியாவிலே வடபால் யான் சென்று

பிரசங்கஞ்செய்த வோர் நகரின்கண் யான்றங்கியிருந்த கிருஹத்தினருகே ஒருவன் பிரதிதினமு மதிகாலையிலெழுந்து தன் கைப் புத்தகத்தினின்று முரத்த சத்தத்துடன் படித்துவந்தான். வைகறையிற்றுயினீக்கி யொருவனிவ்விதம் பிறர் யாவருக்குந் தன்னுரத்த தொனியாற் றுன்பமூட்டுவதும் நியாயமாகுமோ? இஃது பிறருக்கு ஹிம்சையேயன்றி வேறுகாது. இவ்விதமே யிந்நாட்டில் ஜனங்கள் பிறர் தங்களைத் தடுத்துக்கூறுது நிற்பதாலேயே அவரை யலக்ஷியஞ்செய்து அவருக்குப் பலவித விடஞ்சல்களை விளைவிப்பதுஞ் சகஜமாயிருக்கின்றது. இத்தகைய துன்பங்களைப் பொருமையுடையராய நம்போலியர் சகித்துக் கொள்ளல் நியாயமேயாயினும், அவற்றால் எவ்வளவு ஹிம்சை மானிடருக்கு விளைகின்றனவென்பதை யாலோசித்தலு நங்கடைமையே யாகுமன்றோ!

இன்னு மிவ்வகையான வேறொருசம்பவமு மென் ஞாபகத்திற்கு வருகின்றது. அஃது யாதோவெனில் கூறுவேன். இன்னுமொரு ஸ்தலத்திலே யான்றங்கியதற்கயல் கிருஹத்திலுள்ளார் மூட்டிய தீயின் புகை யான் வசித்தவறையினுட் பிரவேசித்தென்னை யல்லற்படுத்தியது: அன்றியுமதைக் கண்ணுற்றோர் யாவருக்கு மஃது சகஜமாகவே தோன்றியது. இவ்விதமயலார்க்குத் தீயின் புகையால் வருத்தமுண்டுபண்ணல் அடாது என்பது பலர்க்குந் தோன்றியிருக்குமாயின், அப்புகையை யவ்வில்லின் மாடியின்மீது ஓர் புகைபோக்கியை நிருமித்து அதன் வழியப்புறப்படுத்த வேற்பாடு செய்திருப்பரன்றோ!

அப்பாலும் 'மோட்டார்' வண்டிகளிலேறி மாந்தர் பிறர்க்கிடுக்கண் விளையுமாறு செல்லுவதைக் கவனியுங்கள். அவர்கட்குத் துரிதமாய்ச் செல்லலில் விருப்பமிருப்பினும் அஃதே வழியிற்செல்லுஞ் சாதாரண நடையுள்ள எருதுவண்டிக்காரர்களின் கதி யென்னவாகின்றதென்பதைக் கவனியுங்கள். இவ்வண்டியிற் செல்லுவோன் கவுரவமுள்ள கனவானுயின் இத்தருணங்களிற்றனது மோட்டார் ரதத்தை நிறுத்தி, சாதாரண வண்டிக்காரர்கள் தங்கள் மாடுகளைத் தடுத்து நிறுத்திக்கொள்வ்தற்

கவகாசங்கொடுத்தப்பாற் செல்லுவன். கால்நடையாற் செல்லுவோர்க்ம்காவெனின் அவர்கட்கு விசேட வாதரவு செய்துபகரிப்பன். இவ்வாறு பிறர் துன்பங்கருதா மோட்டார் வண்டிக்காரர்களனந்தமுண்டன்றே! ஒரு சமயத்தில் யானேறிச்சென்ற வோர் மோட்டார் வண்டியின் பாகன் செய்தயானென்றுங்காணுவனீதமொன்றெனது ஞாபகத்தி லித்தருணந் தோன்றுகின்றது. எனது ரதத்தின்முன்னு லிப்பாகனுக்கெதிரே ரோட்டின் மத்தியிலொரு கால்நடையிற் செல்வோன் காணப்பட்டனன். இவன் பாதையி லோர்புறமிருந்து மற்றோர் புறத்திற்குக் குறுக்கே தாண்டிச்செல்ல வாரம்பித்து, மத்தியில் தன் பின்னுல் மோட்டார் வருஞ்சத்தத்தை கேட்டுப் பதட்டத்தால் திடீரென வப்பாதையின் மத்தியிலேயே நின்றுவிட்டதை, எனது பாகன் கண்டபின்னரும் தன் ரதத்தின் வேகத்தைத் தணியாமலே யதை யொரே யோட்டமாய் யோட்டி, அம்மனிதன் முகத்திற்கு இரண்டங்குலம் வரை சமீபத்திற் செல்லும்படி நடத்தியப்பாற் சென்றுன். இனி யம்மனிதன் மோட்டார்வண்டி தனதருகில் வந்ததையுணர்ந்து பயத்தால்த் திடீரென வப்பாற்றுவிக் குதித்தனன். அவனிதுவரை யப்பாற்செல்லாது நின்றதற்குக காரணம் அவன் குருடனுதலின் மேற்செல்லும் வழியறியூாது மயங்கினின்றனனென யான் பின்னரறிந்துகொண்டேன். ஒரு யோக்கியனுன பாகன் இச்சமயங்களிற் றனது ரதத்தை வேகந்தணிய நடத்திவருவன். தன்னெதிரீல் நின்ற வம்மனிதன் பயத்தால் நடுக்கங்கொண்டனனென்பதை யறிந்தபின்ன ரவனை யச்சந்தீர்த்துச் செல்வனேயன்றி, மேற்கூறியவண்ணம் பயமதிகமாகி மெய்ம்மறந்து போகும்படி யவனைச் செய்துவிடுவனே சொல்லுங்கள்!

இன்னுமிந்நாட்டிலு மிங்கிலாந்து, அமெரிக்கா நாடுகளிலும் பகிரங்கமாய் உபந்யாசங்கணடக்கு மிடங்களிலெல்லாம் காலங்கடந்துவந்து சேருமானிடரின் கொடுஞ்செயலைப் பாருங்கள். குறிப்பிட்ட வுபந்யாசமானது சகலரும் வருவதற்குற்ற பொதுஸ்தலத்தி லேற்பட்டிருப்பதால், அங்கு எவரும் எத்தருணத்திலுஞ் செல்லலா மென்பதாலோ, அல்லது அதன்கண்

பிரதியாசனத்திற்கும் வேதனமளித்தே செல்லவேண்டுமென்றி ருக்குமாயின், தாங்கிரயமளித்து ஆதாவு பெற்றிருக்கும் ஆஸ னத்திற்கு தமதிஷ்டப்படி செல்லலாமென்பதாலோ, பல மாந் தர் உபநியாஸந்துடங்கிய பின்னர் நேரஞ்சென்று அவ்விடம் வருவதால் நேருமிடைஞ்சலைச் சற்றுக் கவனியுங்கள். தாம் போய்ச்சேரவேண்டு மாஸனத்திற்கு வழியிலுட்கார்ந்திருக்கும் பிறர்க்கு முபந்யாஸகர்க்கு மிவர்கள் செய்யு முபத்திரவத்தை யென்சொல்லலாம். இவ்வாறே மேற்றிசையில் பெரிய சங்கீத கச்சேரிகள் நடக்குமிடங்களில், மனிதர் பிறர்க்கும் சங்கீதவித் துவான்களுக்கு மிடைஞ்சல் நேருவதைச் சற்றுங்கவனியாமலே வீண் சத்தஞ்சந்தடிகளைச் செய்துவருதலையுங் காணலாம்.

இன்னும் ரயில்வே முதலியவைகளிற் நாம் சஞ்சாரஞ் செய்யுங்காலை நம்முடன் செல்வோர்க்கு மற்றவர்க்கும் நாமன் புகொண்டொழுகிவரல் நங்கடமையே யாகுமன்றோ! இவ்விந் தியநாட்டில் காணப்படு மொரு விசேஷமியாதெனில், எந்த வூரிலும் ரயில்வரு நேரத்திற்குமுன்னரே ஸ்டேஷன் வந்துசே ருஞ் ஜனங்கள், தாங்கள் நுழையும் ரயில்வண்டியறை நிரம்ப சாமான்களைக் கொணர்ந்து வைத்துக்கொண்டுட்கார்ந்துகொள் வார்கள். இவர்கட்கிவ்வளவு சாமான்களை வைத்துக்கொள்வ தற்கு ரயில்வேயின் சட்டவிதி யிடங்கொடாததை யிவர்களு ணருகிறதில்லை. இதனால் பின்னர் கடைசிநிமிஷத்தில் வந்துசே ரும் பிரயாணிகளின் சாமான்களை வைப்பதற்கிடமில்லாமல்ப் போய்விடுகின்றது. ஒவ்வொரு பிரயாணியும் தன்னுடன் வைத் துக்கொள்ளக்கூடிய சாமான்களுக்களவு இன்னதென்றும், பின் னும் இனமாக கார்டு அதிகாரியின் பாதுகாப்பிலிருக்குமறை யில் வைக்கக்கூடிய வளவின்னதென்றும் வரையறுக்கப்பட்டி ருப்பதை யாலோசித்து, இவ்வகையினர் தத்தம் பண்டங்களை முன்னமே நிறுவைசெய்து ஒழுங்குடன் வைத்துக்கொள்ளாமல், மேலேகூறியபடி தமது அறை முழுவதும் நிரப்பிக்கொள்கிறார் கள். இஃது முற்றிலும் வீரத்தன்மையற்றதோர் செய்கையே யென்பதில் சந்தேகமில்லை,

அப்பாலும் நீவிர் தவிர்க்கவேண்டியதாய் வர்த்தமொன் றுண்டு. அஃதியாதெனில், நீங்கள் பிறர் எவரையுஞ் சந்திப் பதாய் ஏற்பாடு செய்திருப்பதை எக்காரணத்தானும் தவறு திருத்தலேயென்க. குறிப்பிட்டகாலத்தில் வருவதாய் நீங்கள் எவரிடமாவது ஒப்புக்கொண்டிருந்தால் அவ்வாறே நீங்கள் குறிப் பிட்ட ஸ்தலத்திற்குச் சென்றே தீரல்வேண்டும். யாதுவரினும் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவோர்களாதலே வேண்டும்.

நீவிர் நுமதுலக வாழ்க்கையை நடாத்திவரும்பொழுதெ திர்ப்படு மெவரிடமுங் கௌரவம்பாராட்டி நிற்றல்வேண்டும். கௌரவமல்லது மரியாதையென்பது அரசனது மாளிகையில் வசிப்போராகும் பிரபுக்களின் சுபாவகுணமேயாகும். நீங்களியா வரு மிப்பகிருலகில் வாழ்வோராயினும், உண்மையில் ஸ்ரீ குருநாத னது சீடர்களேயாதலின், அவனுலகமா மேநிலையில் வாழ்வுடை யரும், அரசனு மவனதருகிற் சூழவிருக்கும் பரிவாரங்களாம் பிரபுக்களுமேயாவீர்களன்றோ! ஆதலின் நீங்களு மெதிர்ப்படுமி யாவருக்கு மரியாதையே காட்டிவரல் வேண்டும். இதுவும் வெளிக்குமட்டும் உலகினர் ஒருவருக்கொருவர் காட்டிவரும் தலைதாழ்த்தல் முதலிய வெறுவேடமாய் நிற்றல் கூடாது; பின்னை எவரையுங்காணுமிடத்து அவருங் கடவுளும்மைக்கா ணுதற்கு நிருமித்திருக்குமோர் ஜன்னலே யாவரென மதித் துப்போற்றும் அந்தரங்கத்தின்கண்ணிலைபெறு முபசாரமேயா தல் வேண்டுமென்க.

இதுகாறும் வீரியமற்ற கிருத்தியங்களின்னவை யெனக் கூறிப்போந்தன னாகவினி வீரியமுள்ளவை யாவையென விளக் கப்புகுவேன். வீரியமாஞ்செயற்களின் உயிர்நிலை யாதோவெ னில் அவை யாவும் பிறரை ரக்ஷிக்குந் தன்மையுடையனவை களேயாகுமென வுணர்ந்தறிக. நீவிர் குருதேவனது சீடர்களா தலின் உங்களிடமுள வீரியத்தினுதவியால் நீங்கள் பிறர் யாவ ரையும் பாதுகாத்துவரல் வேண்டுமேயன்றி, பிறர் நுங்கட்குத் தீங்கிழைப்பினதனின்று முங்களையே காத்தற் கவ்வீரியத்தை யுபயோகித்தல் கூடாது. குருதேவனது பெருங்கொண்டியானை

வீரியமெனுந் தனத்தை பிறருக்குச் சேவைபுரிதற்கே யாக்கி வரல்வேண்டும்.

முற்காலங்களில் ஆர்தர் அரசனைச்சேர்ந்த வீரர்களியா வரும் நாட்டிலுள்ள குடிகளுக்கு நேர்ந்த இடுக்கண்களைத் தீர்த்துவந்தார்கள். அக்காலத்தில் போலீஸ் ராணுவங்கிடை யாது தேசமெங்கும் கொள்ளை புரிவோர்களனேகரிருந்தனர். ஆதலின் மேற்கூறியபடி யக்காலத்திய வீரர்களிருந்தனராக, விந்நாட்களில் போலீஸ் முதலினோரின் உதவிகளிருப்பதால் ஜனங்கட்கு நும்போலியர் செய்யு முதவியும் வேறுவிதமாய் நிகழலே வேண்டும். இக்காலத்தில் ஜனங்களுக்கு அவர்களுண் ணின்றே யுயிரழிக்குஞ் சத்துருவினின்று மவர்களை ரக்ஷித்தலே நுங்கடமையாகுமெனச. அந்நாளிற்போலவே யிந்நாளிலும் ஜனங்களுக்கு விசேட ஆதரவும் பாதுகாப்பு மவசியமாகின் றதூ. எவ்விதமெனில் அறிவெனுஞ்சோதியை யறியாமலே அறி வின்மையா மந்தகாரத்தினுட் கிடத்தலேயே சாமானியரான மன்பதைகளுடிக் காலங்கழித்துவருதலின், இவ்வித வறிவின் மையா மந்தரங்க சத்துருவின் மாயையினின்றுமவர்களை விடு வித்தற்குழைத்தலே நுங்கள் பெருங்கடமையாகுமன்றோ!

இத்தகைய வுயர்தரமான வீரியச் செயற்களை நீங்கள் வயதுவந்து பக்குவமடைந்தபின்னரே பூரணமாய்ச் செய்து முடிக்கத் தகுதியடைவீர்கள். பின்னை இச்சிறுபிராயத்திலிருக் கும்பொழுது நீங்கள் மேலேகூறி முடித்த வீரியமற்ற செயல் களைமட்டுந் தவிர்த்து நிற்கத் துணிந்து ஜயமடைவீராயின் இதுவே ஸ்ரீ குருதேவனுக்குத் திருப்தியைத் தருமென்பதிலை யமில்லை. இஃதுங்கட்கு முதற்படியாகும். இவ்வழி யொழுகி யப்பால், பருவம் வந்தபின், பிற்காலத்தில் சகல மானிடர்க்கும் அறிவின்மையை யகற்று மடுத்தபடியாகும் பெருங்காரியங்க ளைச் செய்துமுடித்தற்கு வல்லமையைப் பெறுவீர்கள்.

இனியிம்மேதினியின் க்ஷேமார்த்தம் நீவிர் செய்யவேண்டிய வுதாரச் செயல்களி யாவற்றையு மிரண்டு விபாகங்களாய்ப் பிரித்துக்கொள்வோம்.

ஜீவன்முத்தராங் குருமூர்த்திகளால் நிருவஹிக்கப்படும் உலகரக்ஷண மகாகாரியத்தில் * இரண்டு பெரும் விபாகங்கள் (Departments) அல்லது டிபார்ட்டுமெண்டுகளுளவென யான் முன்னொருதடவையிற் றுங்கட்குக் கூறியுள்ளேன். மூன்று மனுக்களின் வழியும், மற்றொன்று 'போதிசத்வா' என பௌத்த தேசங்களிலழைக்கப் பெறும் ஜகத்குருமூர்த்திகளின் † வழியுமாமென்க. இங்கு முதலில் மனுக்களாம் பிரபுக்கள் ஆக்ஞாபிக்கும் லோகோபகாரச் செயல்களியாவையென விளக்குவாம்.

ஸ்ரீ மனுமூர்த்தியானவர் தனது வர்க்கத்தைச் சார்ந்த சகல மானிடரும், சோர்வு, கோழைத்தனமாகிய விவ்விரண்டு குற்றங்களையுந் தவிர்த்துநிற்றல் வேண்டுமெனக் கோறுகின்றனர். தனது வம்ச மானிடர்களனைவரும் தகுதியுற்ற தொழிலாளிகளாயும் பேருழைப்பு முதலாற்றலுடையோராயும் விளங்க வேண்டுமென்பது அவர் சங்கல்பம். பெருந்தன்மையும் வீரசூர சுபாவமும் படைத்து உலகந்தழைக்குமோர் நற்காரியம் வரினதற்காகத்தமதெனு மெல்லாவற்றையும் அர்ப்பணஞ்செய்யுமியற்கைபூண்டோராதல் வேண்டுமென்பதே யவர் கோரிக்கையாகும். இவ்விதம் ஜனங்கள் பீதி, சோம்பலாந் துர்க்குணங்களைநீங்கி க்ஷேமப்படவேண்டுமாயின், அதற்கு நீங்கள் பலவிதங்களிலுழைக்கவேண்டும். இவற்றுட் சிலவற்றை யிங்கு ஸ்ரீ மனுவாம் குருமூர்த்தியினது வழியிற் செல்ல விரும்புவோர்க்குபயோகமாம்படி யெடுத்துக்காட்டுவேன்.

---

* என்றுங்கருணைபெற்ற யின்பத்தபோதனர்சொல்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லுமபராபரமே! தாயுமானவர்.

† குறிப்பு:—மகர்ஷிகளுள் வியாஸபதவியிலுள்ளோரே ஜகத்குருவெனப்படுவர். இவர்களதாதரவின் கீழேயே உலகிலவ்வக்காலத்திற்றோன்றுஞ் சகல கல்வி கேள்விமுதல் தத்வவாரய்ச்சிமயமான சமயங்களின் பிரகாசங்களும் நிகழுகின்றன.

மேலும் முதன்முதலாய் சகல ஜனங்களுக்குந் தற்காலத்திலேற்பட்டிருக்கும் சரீரங்கள் இப்பொழுதைவிட அதிக சிலாக்கியமானதாகவேண்டும். இக்காலத்தவரின் தேகங்கள் வியாதிநிரம்பியதானமையின் அநேகமா யுபயோகமற்றவைகளாகவேயிருக்கின்றன. ஆதலின் உலகினருக்கு சௌக்கியத்திற்காதாரமான விதிகளைப்பற்றிய வறிவைப் புகட்டல் வேண்டும். ஆகவே மனிதர் வாசஞ்செய்யுங் கிராம நகரங்கள் யாவும் அசுத்தமற்று சௌக்கியத்திற்கேதுவாய் விளங்கும்படி செய்யவேண்டியது நுங்கள் கடமையாகும். இஃதத்தனை சுலபமான காரியமன்று ஏனெனில் ஜனங்களிலொவ்வொருவரு மிவ்விதஞ் சௌக்கியமடைந்து வாழ்வதற்கு சிற்சில திரவியமுதலியவற்றை தியாகஞ் செய்யவேண்டியிருத்தலி னவர்களை யவ்விதந் துணியும்படி தூண்டுதலெளிதன்று. ஆயினும் இவ்வழியிற் பல பெருமேற்பாடுகளை வகுத்து நாடு நகரவாசிகள் யாவரு நோயற்ற சுகமடையும்படி நீவிர் செய்தற் குழைக்கவேண்டும். ஜனங்கள் வசிக்குமிடங்களிலெல்லாம் அவரவரிஷ்டப்படி ஸ்நானமுதலியன முடித்துக்கொள்ளற்குத் தக்களவுள்ள வேரானமான ஜலங்கிட்டும்படி தகுந்த வேற்பாடுகளை நிருமித்தற் பொருட்டு நீவிர் விசேடமாய் பிரயத்தினங்கள் செய்தல் வேண்டும். எவ்விடத்திலும் அசுத்தமான கசுமாலங்கள் வெளியேறிச் சென்றுவிடும்படியான ஜலதாரைப் போக்குகளுஞ் செவ்வையான ரோட்டுகளும் நிர்மாணிக்கப்பட்டு சகல ஜனங்களுக்கும் நாட்செல்லச் செல்ல விசேட சௌகரியங்களுண்டாம்படி செய்தலுமிகவு மவசியமேயாகும்.

அப்பாலும் ஸ்ரீமனுமூர்த்தியினது பிரபஞ்சோபகார மகா காரியத்திற்கு நீவிர் அநுகூலமாயுழைக்க வுடன்படுவீராயின், நீவிர் செய்யத்தக்கத் தொழிற்க ளியாவையெனப் பின்னுங்கூறுவேன்: விசேடத் தொழிற்கணிறைவேறும் ஸ்தலங்களான பண்டகசாலைகளிலெல்லா மாங்குழைக்கு மாந்தருக்கதிக சௌகரியமுண்டாம்படி அவற்றின் தற்காலத்திய நிலைமைகள் மாற்றப்படவேண்டும். பண்டங்கள் உருவாக்கப்படுஞ் சாலையான இவ்விடங்க

ளியாவற்றிலும் ஆங்குபயோகப்படும் கருவிகளான மேஜைகள் வாசற்கதவுகள், வஸ்திரங்கள் முதலிய சகலங்களும் சிலாக்கியமானதாயும் மிகவு நவீனமானவைகளாகவுஞ் சமைக்கப்படல் வேண்டும். ஏனெனில் அப்பொழுதுதான் இக்கருவிகளைக்கொண்டு அதிகமான பண்டங்கள் குறைந்த நேரத்திலும் மிகவுயர்தரமான வுருப்படிகளாயும் உருவாக்கப்படலமையும். முற்காலத்தைக்காட்டிலு மதிகமாய் இக்காலத்தில் மனுவானவர் உலகத்திற் களித்திருக்கும் இருப்புப்பாதை முதலிய பிரயாணத்திற்குகந்த விசேட சௌகரியங்களால் வியாபாரத்திற்கு நேர்ந்திருக்கு வசதிகளைச் சகலமாந்தரு மறிந்துணரும்படி நீவிர் எடுத்துக்காட்டல் வேண்டும்.

இன்னுமனுவின் மார்க்கத்தி லுழைப்போருக்குலகில் சகல மானிடரும் க்ஷேமமாய் வாழ்ந்துவருமாறு செங்கோனீதியின் ஒழுங்கும் நிகழும்படி செய்துவருவதுந் தொழிலாகும். அக்கிரமம் மானிடர்க்கு எவ்விதமாவது நிகழுமாயினுடனே யங்கு நீவிர் சென்று அஃது நீங்குமாறுழைத்து மற்றவர்களையும் நுங்களொடொத்துமைப்பட்டு வருமாறு செய்துஞ் ஜனங்களுக்கு எக்காலத்திலும் அவசியமான சீர்திருத்தங்கள் வாய்க்கும்படி யத்தனித்தல் வேண்டும்.

இதுகாறு மியம்பியவற்றால் மேற்கூறிய வத்தனை காரியங்களையு முங்களிலொவ்வொருவரும் செய்துவரல் வேண்டுமென்பது எனது கருத்தன்று. உண்மையில் அவ்விதமுடிக்கற் குங்களாலியலாது. அதற்கவசியமான காலமுஞ் சக்தியுமுங்கட் கில்லையன்றே! ஆனாலிவ்விதம் பேசியவெனது இதயந்தானியாதோவெனின் மற்றவர்க்கெல்லா மிவ்வகை யுண்மைகளை யெடுத்துக்காட்டி யாங்காங்கு இத்தன்மைய காரியங்கணடந்தேறும்படி ஏற்பாடுகளைச் செய்யத் துணிதல் நுங்கள் கடமையாகுமென்பதே. இதுதான் ஞானமூர்த்திகளாங் குருநாதர்களுக்குச் சீடராயமைந்தோரது தொழிலாகும். குருதேவனிட மடைக்கலம் புகுந்த சீடருக்கு அவரவர் கைக்கொண்ட தொழிலுக் கேற்ப கருத்துக்கள் அவர் மனங்களிற்றோன்றும். அவ்வாறே ஸ்ரீமனு

தேவருக்குகந்த சகாயஞ்சேவையை நீவிர்புரிய விரும்புவீராயின் அவ்வள்ளலு நும்மனங்களில் நீங்கள்கொண்ட காரியங்கட்குகந்த வறிவை விளங்கச் செய்வரென்பதிற் றடையுமுண்டோ?

இனியிரண்டாம் விபாகமானபோதிசத்வரெனும் ஜகத்குருவாம் பெருமானது டிபார்ட்டுமெண்டைப் பற்றிப் பேசுவாம். ஜகத்குருவான நாதனு மாணிடரிரண்டு குற்றங்களைந்து நிற்றல் வேண்டுமெனவே விரும்புகின்றனர். அவை யாவையோவெனின், குரூரமுமழுகின்மையுமேயென்க. இவ்வழுகின்மையிலனந்த விதங்களு மப்படியே குரூரத்திலுமநேக பிரகாரங்களுமுளவே யன்றே! அவைகளனைத்தையுந் தாரணியின் மாந்தருக்கு அன்பு அழகைப்பற்றிய வுபதேசங்களைப் புகட்டுவதால் நீவிர் தவிர்க்கச்செய்து வரல்வேண்டும். இதையுமெவ்விதஞ் செய்வதெனிலதற்குஞ் சிலவழிகளைக் குறிப்பிடுவேன், பின்னர் நீங்களு மனுபவத்தில் முதிர்ச்சியடையும்பொழுது புதுவழிகளைத்தானே கண்டுகொள்ளுந் திறனடைவீர்கள்.

பிரதமத்தில் பாடசாலைகளைப் பற்றிப் பேசுவாம். ஒவ்வொரு தேசத்திலும் சிறுவர் சிறுமிகளுள் ளொவ்வொருவரும் நற்கல்வியைப் பெறுமாறு பாடசாலை இப்பொழுதிருப்பனவற்றைக் காட்டிலும் அதிகமாயிரமாய் ஏற்படுத்தப்படல் வேண்டும். இரண்டாவது இப்பாடசாலைக ளத்தனையும் மிகவு மேம்பட்டதாகவு மேற்படல்வேண்டும். பாடசாலைகளின் உபாத்தியாயங்களையும் சிறுவர்களின் பெற்றோரையுஞ் சந்தித்துப் பேசியவர்களையெல்லாம் பள்ளிக்கூடங்களை செவ்வையாக்கிக் கொள்ளும்படி நீவிர் செய்துவரல் வேண்டும். இப்பாடசாலைகள் விஸ்தாரமான ஸ்தலம், அதிககாற்று, பிரகாசம் அதிகமான விளையாடுமிடங்கள், அதிகமான உபாத்தியாயர்களிவை விளங்குமாறு ஏற்படுத்தப்படல்வேண்டும். அப்பால் இப்பாடசாலைகளில் கற்பிக்கப்படுங் கல்வியுஞ் சீர்திருத்தப்படலும் வேண்டும். இவற்றைப் பற்றிய விவரங்களை யெல்லா நீங்கள் வயதுவந்தபின் நன்கறிந்து கொள்ளீர்கள். அக்காலத்தில் நீங்கள் படித்த பாடசாலைகளில் நிகழ்ந்தனவாய குறைகளையெல்லா நினைந்து அவையாவற்றையு மாற்றி,

கல்வி முன்னிலும திகப் பிரயோசனப்படுமாறு முத்ஸாஹநிறைந்து விளங்கும் வண்ணமும் செய்யவேண்டிய வழிகளியாவை யென நீங்களே வுணர்ந்துகொள்வீர்கள்.

இன்னுமுலகில் நிகழுமனந்த சமயபேதங்களி லிக்காலத்தில் நிரம்பிநிற்கும் மூடபக்தியெனுந் துரபிப்பிராயங்களையு நீக்குதற்கு நீவிர் முயலுதலும் வேண்டும். போதிசத்வர் காட்டும் வழிச் செல்லுஞ் சீடராவோர் உலகினர் நற்பழக்கங் கைக்கொள்ளுமாறுழைப்பதிலேயே தம்முழுப் பிரயத்தினத்தையுஞ் செலுத்தி வருவர். ஜனங்கள் யாவருக்கும் உயர்நோக்கம் படிபுமார்க்கங்களை வகுப்பது மிவ்வகையினரின் தொழிலாகும். ஆதலினீவிர் கடவுள், அவனதடியராம் பெரியோர் அவர்களது வீரியமன்புமயமாஞ்சக்தி யித்தகைய உயர்தத்துவங்களின் யதார்த்தமான ரஹசியங்களைப்பற்றி யுலகினருக்கு விளக்கிக்காட்டல் வேண்டும். உண்மையற்ற பழைய வழக்கங்களையவர்கள் தவிர்த்து மிகச்சுந்தரமுமன்பு நிறைந்த நவமாய பழக்கங்களைக் கைக்கொள்ளுமாறு தூண்டிவிட்டல் வேண்டும்.

இம்மார்க்கத்தி லுழைக்க விரும்புவீராய நீங்கள் குறிப்பாய் மனத்திற் கொள்ளற்பாலதாய விஷயமொன்றுண்டு. அதாவது யாதக்காணினும் எப்புறஞ்செல்லினும் அங்கெல்லாம் அதிகமுதிகமாய் சுந்தரகுண மேற்படுமாறு செய்தல் வேண்டுமென்பதே. * கீழ்மேல் தேயங்களில் எங்குநோக்கினும் அவலக்ஷணமில்லாத நாடுநகரங்கள் தற்காலத்திற் கிடைப்ப தரிதேயாகும். அவலக்ஷணமான கிருஹங்கள், அவலக்ஷணமான பலகணிகள், அவலக்ஷணமான சித்திரங்களிவைகளே பார்ப்போர்க்குத் தென்படுகின்றன. இவையாவு முற்றிலுமாற்றமுறல்வேண்டும். ஒவ்வொரு நகரமும் வனப்புமிகச் செறிந்து விளங்குவதாகி சாக்ஷாத் ஜகத்குருவானவர் அங்கு செல்லுவாராயின் இதுவே தனது நகரமென வியந்து கூறும்வண்ண மாக்கப்படல்வேண்டும். இவ்விதமே ஜனங்கண் மத்தியிலுலாவிவரும் வர்த்தமான பத்திரிகை

---

* அந்தமுட் ஜோதி யளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே!

களிலும், புத்தகங்களிலும், அவ்விதமே நாடகசாலைகளிலும் மிக வருவருப்புக்குரிய வவலக்ஷணம் நிறைந்து விளங்குவதைக் காணலாகுமன்றோ!

கடல்சூழ்ந்த விவ்வையகத்திலித்தருணம் எங்குநோக்கினும் மென்மேலு மழகுமானந்தமும் பிரகாசிக்க வேண்டுமாயின் அளவிலாச் சீர்திருத்தங்கள் நடைபெறவேண்டியதா யிருக்கின்றன. சுந்தரத்தன்மையாகுஞ் செல்வத்தை மானிடர்போற்றி யபிமானிக்கும்படி நீவிர் அவர்க்குபதேசித்தல் வேண்டும். இவ்வழகை ஜனங்களும் தந்தம் பிரதிதின வாழ்க்கையில் காட்டிவரும் பழக்கமடைவாராயின் நாம் எங்குசெல்லினும், எதைக்காணினு மங்கெல்லா நமக்கிவ்வழகே தென்படும். கையிலகப்படும் வர்த்தமான பத்திரிகையை நோக்கினும் சமயத்திற்கிட்டும் புத்தகத்தைப் பார்க்கினும் மற்றும் எவ்வகைப் பண்டங்களைக் கண்கொள்ளினு மங்கெல்லாம் சித்திரங்கள் முதலிய வடிவங்களிற் சுந்தரமேதோன்றி நம்மை யெதிர்கொண்டழைக்குமன்றோ! இவ்வழியிலுழைக்கத்துணிவீராயின் நுங்கட்கு வேண்டும் பொழுதெல்லாம் ஜகத்குருவாம் பெருமானிடமிருந் தளவிலாவுத்ஸாஹம் வந்தடையுமென்பதிலையமே யில்லை. உங்களிலொவ்வொருவரையு மம்மகாபுருடன் தனது அன்பையுமழகையு முலகிற்குச் சுமந்துசெல்லுந் தூதனு யாக்கிக்கொள்ளற்கே திருவுளங் கொண்டிருக்கின்றன ரென நீவிர் தெளிந்துணருதல் வேண்டும்.

நுங்கட்கு வயதுவருநாளில் இதுவேயுகந்த பெருந்தொழிலாயேற்படும். ஆனுல் இதுமிகவுஞ் சுலபமானதொழிலென யான் கூறவரவில்லை. ஏனெனில் இப்பெருமுபகாரத்தை யடையவிரும்பு மானிடரதிக சொற்பமேயாவர். இதுவே நமதுலகை யுற்றுநோக்குவோர் யாவருக்கும் வியசனத்தை விளைவிக்குமம்சமாகின்றது. பசியுடன்வருந்துவோ னொருவனிடம் வந்து "ஐய, விதோவுனக் கன்னமெனக் கூறினவன் களிப்புடன் சட்டெனக் குதித்தெழுந்தலைத்தருகவென கேட்பானன்றோ!" வென நீவிர் நினைந்தியான்மேற் கூறியது ஒருவாறுண்மையாகாதென வாக்ஷேபிக்கத்துணிவீர்கள். ஆயினுமவ்வுதாகரணங் கொண்டே யுலகினரி

ளியலே யானுமெடுத்துக் காட்டுவேன் கேண்மின். நீவிர் அவ்வி தம் பரிந்துதவவெண்ணங் கொண்டனுகிய வொருவனுட னே நுங்கையிலிருக்கு மாகாரத்தைக் கூர்ந்துநோக்கி "ஐய, விது வன்றி யான் வழக்கமா யேற்றுக்கொள்ளுமுணவு, ஆதலினெனக் குதவா விவ்வன்னத்தை யுட்கொள்வதினும் யான் பசியுடன் இடத்தலே நன்ருகு"மென விடையளித்து விடலுமுண்டன்றே! இவ்விதமாய வியற்கையதிகமாய் இவ்வுலகமாக்களினிடம் படி ந்து விளங்குகின்றமையினுலேதான் உலகிற்குதவுதலு மத்தனை மிகக்கடினமாகின்றது. ஆதலின் நீங்களெப்பொழுது மிடைவிடா திவ்வழி முயன்றுவருதலு மிச்சிந்தனையே பிரதிதினமுங்கொ ண்டு நுஞ்சகல காரியங்களையு நிறைவேற்றியுமைழத்துவாலு மவ சியமாகும்.

இனி நீங்கள் தக்க வயதுவந்தபின் பிரௌடிமையடைந்த மானிடாம்பொழுது ஸ்ரீ குருதேவனுக்காப் பெரும்பெருங்காரி யங்களைச் செய்யப்புகின் அக்காலே நுங்கள் தொழிலுஞ் சுல பமானதாகுமோ. ஆகாது. ஏனெனி னக்காலத்தில் நுமதுப காரச்செயல்களி யாவற்றையு முலகினர் தப்பபிப்பிராயங்கொண் டுங்களை யவதூறுபேசி வேண்டியவளவிடைஞ்சல்களையே யுண் டுபண்ணுவார்கள். நமது பிர்மஞான சபையினராகிய நம்போ லியர் உலகிற்குபகாரஞ்செய்துவருவதை யுலகத்தவர் ஏற்றுக் கொள்ளாமையும், அதனுல் நம்மனோர்க்கு நேர்ந்திருக்குந் துன் பவிசார முதலியவற்றையு நீங்கள் முன்னரே கேள்வியுற்றிருப் பீர்களன்றே! ஆதலின் நீங்கள் படும்பாடு எவ்வாறுயினு மவற் றைப் பாராட்டாது பிறர் துக்கங்களை நீக்குவான்பொருட்டு நுங்கள் பிராணனையும் விடத் துணிவுகொள்ளலே வேண்டும். ஸ்ரீ குருதேவனுக்குண்மையாகி யாட்பட்டு நிற்குங்காலே மரண ம்வரினுமதையு மனுபவிக்கத்துணிவுறலே, அம்மாபுருடனுக் கபராதியாய் பிராணனைமட்டுங்காத்து வாழ்வதினும்பன்மடங் குமேன்மையாகுமென்பதி லையமுண்டோ?

மானிடரிற் பிறர் நுங்கட்கல்லல் விளைவித்தாலும், அல் லதுங்களை யுயிர் நீக்குவித்தாலும் பாதகமேயில்லை. உண்

மையில் நீங்களியாவரு மான்மாக்களேயாதலின் மரணமென்ப தூங்கள் சரீரங்கட்கேயன்றி நுங்கட்கெங்ஙனம் நிகழும்? அன்றியு முங்கட்கு, நேருஞ்சகல வாபத்துக்களேயும் எல்லாமறிந்த குருநாதன் அறிந்திருக்கிறுனென்பதையு நீவிர் மறந்துவிடல் கூடாது. சீடர்கட்கு நேரவிருக்குமாபத்துக்களே யவருடனே யறிந்துகொள்வானன்றே! அவர்கள் பசியில் வருந்துவாராயின தையும் குருமூர்த்தி தெரிந்துகொள்வர். அவர்கட்கேதேனு மவசியமான வுதவி தேவையாயினஃதையு மவரறியுந் திறமுள்ளவர். நமது சகல விருத்தாந்தங்களேயு மவரறிவரெனும் திருடநம்பிக்கை நுங்களுள்ளத்தில் நிலைபெறல்வேண்டும். அவரிவற்றையெல்லாந் தெரிந்துகொள்வரென்பதை யுணர்ந்தபின் வேறெதையு நீவிர் கருதல்வேண்டுமோ? நுங்கட்குவேண்டு முதவியுபகாரங்களே யவரே ஈந்தளிப்பர்; அவ்விதமே யொருசமயத்தில் நுங்கட்கு மரணம் நேரினும் நீவிரவ்வித முங்களது ஸ்தூலதேகத்தை விட்டொழித்தல் வேண்டுமெனத் திருவுள்ளங்கொண்டிருப்பதனுற்ற னவ்வாறு நிகழுமேயல்லது வேறன்றென்பதையு நீங்களுணர்ந்துகொள்ளல்வேண்டும். நுங்கள் மரணத்தையவர் அங்கீகரிப்பதுங்கூட இத்தருணத்தில் அதனுலுலகத்திற்கு நீங்கள் ஜீவித்திருப்பதைக் காட்டினு மதிகமாய்ப் பயன் விளேயுமென்பதாற்ற னெனவுமறிக.

முன்னெருகாலத்தில் மேலேகூறியவண்ணம் ஓர் உத்தம சீடருக்கு இரண்டுதடவைகளில் மரணநேர்ந்ததை யிங்கு விரித்துரைப்பேன். வெகுகாலத்திற்குமுன் அலெக்ஸாந்திரியாவெனுமாநாட்டின்கண் "ஹைபேஷியா" வென்ற நாமம்பூண்ட உத்தமப் பெண்மணியாவாள் ஒருவளிருந்தனள். அக்காலத்தில் கிறிஸ்துமதங் கிளம்பி சின்னுட்களேயானதால் அஃதிளமைப் பருவத்தினின்றது. அதைச்சார்ந்தோராய மாந்தர் அறிவின்மைபால் கிரீஸ், எகிப்து முதலிய நாடுகளின் பூர்வகாலத்திய சமயங்களே யவதூறுபேசியவற்றின் கொள்கைகளேயெல்லா மூடபக்தியுடைய வியவஹாரங்களென விகழ்ந்துபேசினர். உண்மையில் இப்பழஞ்சமயக் கோட்பாடுகள் பொய்மையுடையன

வன்று, பின்னை அவற்றுட்சிறந்த பல வுண்மைகள் விளங்கின. ஆதலினிவற்றிற்காப்பரிந்து நம் 'ஹைறப்பேஷியா'ப் பெண்மணியுமாங்காங்கு அப்பழஞ்சமயப் புகழ்ச்சியை விளக்குவாளாயினள். எவ்வித வாக்ஷேப விரோதங்களையுங் கவனியாது இம்மாதரசிகலம் துணிவுடனெழுந் தலைமறியுமாறு "பழஞ்சமயங்களிலுண்மை யுளதென" அறைந்தனள். இவற்றைப்பொருது முடிவில் நங்கிறிஸ்துமதத்தினர் விசேட பலமடைந்து அப்பெண்மணியைக் கொன்றனர். அவ்வம்மணியைக் கொன்றவிதமே கொடியதினுங் கொடியதே. ரதமேறிச் சென்று சொண்டிருந்த வம்மாதினை யிப்பாதகர் கூட்டமாய்ச் சூழ்ந்து திடீரென ரதத்தைவிட்டு சமீபத்திலிருந்த தங்கோவிலுக்குள் வரை யிழுத்து கடற்கிளிஞ்சியால் எலும்புகாணுமட்டுங் கிழித்துச்சுறண்டி யுயிர்போக்கினர். ஆயினுமென்னை! ஹைறப்பேஷியாவும் ஸ்ரீ குருதேவனின் சீடபாவமடைந்தவளன்றோ! அவ்விடருற்ற தருணத்தில் பிராணன் சரீரத்தைவிட்டு நீங்கியவுடன் அவளெங்கு நின்றனளென நினைக்கிறீர்கள்? குருதேவனிடமே சென்றனளென்பதி லையமென்னை! நடந்த சம்பவங்களியாவற்றையு மருகிலிருந்தாற்போ லறிந்துகொண்ட குருமூர்த்தியும் அவள் சரீரத்தைவிட்டு நீங்கினவுடன் அவளை தன் கரத்திலேந்தி தனதாசிரமத்திற்குக் கொண்டேகினர்.

அப்பாற் பின்னொரு ஜன்மத்தில் இச்சீடரே இத்தலி நாட்டில் "கயார்டானோ ப்ரூனோ" வென்பாராய் அவதரித்து விளங்கினர். அந்நாளில் கிறிஸ்துமதம் பழமையடைந்துநிற்க, நூதனமாய் வுத்ஸாஹங்கொண்டு பிரத்தியக்ஷமாய் சகல பதார்த்தங்களையும் பரிசோதிக்கு முணர்ச்சி பெருங்கோலாகலத்துடன் பலருமங்கீகரிக்கும் கோட்பாடாய்த் தோன்றியது. இதைக் கண்ணுற்று பழஞ்சமயமாய கிறிஸ்துமதத்தினர் பொறாமையும் விரோதமுங்கொண்டு தம்மறியாமையால், இந்நூதன வுத்ஸாஹமியாவு முண்மையற்றதெனவும், தேவவிரோதியா மாயையெனத்தகும் பிசாசின் காரியமெனவுங் கூறிவந்தனர். இதைச் சகியாதவராய் நமது 'ப்ரூனோவும்' இந்நூதன வுணர்ச்சியிலுண்மை

விளங்குகின்றதென் கோஷித்துவந்தனர். இதற்காக வவரைப் புலவித கொடுமைகட்குள்ளாக்கி சிறைச்சாலையில் கிடத்தி முடிவில் உயிருடன் இரும்புமுளையிற்கட்டி தீயிமூட்டிக் கொன்றனர். இத்தருணத்தில் மரணதண்டனை விதிக்கப்படுமுன் அவரை விசாரணைஸ்தலத்திற் கொண்டுபோய் நிறுத்தியபொழுது தமக்குற்ற கதியை நோக்கி யாவரும் பீதியடைந்தனரோ பாருங்கள்? தன்னை விசாரணைசெய்ய வெளிவந்த நியாயாதிபதியாவோரை நோக்கியவரத்தருணத்திற்கூறியதாவது "ஐயன்மீர் மரணமடையவிருக்குமென்னினும் அந்தவகைய தண்டனையை விதிக்கத்துணிந்த நீங்களன்றோ அதிக பயங்கொண்டோராய்க் காணப்படுகின்றீர்" என்பதே. அவர் எனிவ்விதஞ் சற்றும்பயமடையாது நின்றனரென்பதை யுன்னுங்கள். அவரிடம் ஸ்ரீ குருநாதனின் சத்தியத்தருணம் விளங்கிநின்றமையினாற்றாமெனவறிக. * இவ்வாறே யுத்தமமாய் பெருநோக்கமெய்தி யுலோகோபகாரமாதி யுயர்காரியத்திற்றலையிட்டு அதற்காக வுயிரிழக்கத்துணியுமெவனுக்குமிம்மேன்மையே கிட்டுமென்க. ஆதலின் நுங்கட்கு மிவ்விதக் கேடுகளிலெதுவேனும் அல்லது மரணமேவரினும், நீங்களுமுறுதியைக் கைவிடாது வியவஹரித்தலே மேன்மையாகும். ஏனெனில் நீங்களியாவரும் ஸ்ரீ குருநாதனிடம் சீடர்களா யடைக்கலம்புகுந்தவராதலின் உங்களுக்கு நேருஞ்சகல சம்பவங்களையும் அவரறிந்துகொண்ட வக்காலங்களில் நுங்களையும் பாதுகாப்பரன்றோ!

குருநாதர் ஜீவதசையி லிருப்பதெல்லாம் மானிடரின் துன்பங்களை யகற்றுவித்தற்கே யெனப் பன்முறை நுங்கட்கியானியம்பினேனன்றோ! ஆதலின் அவரதியற்கையையே கைக்கொண்டு நீங்களுமொழுகத் துணிதல்வேண்டும். மானிடர் யாவருக்குந் துன்பங்களேறும் வழியு மிருவகையுாகும். முதலாவது ஸ்தூல

* தானவனுந் தன்மையெய்தித் தண்டமென விண்டமெங்கு
ஞானமதயானை நடத்துநா ளெந்நாளோ!

சிற்றறிவு மௌனச் சிதைந்தெம்மான் பேரறிவை
யுற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ! தாயுமானவர்.

தர்மம் (Law of Causation). இது சாசுவதம். இதுவே ஸ்வ பாவ தர்மங்கள் (Natural Laws). குடிசைக்கு நெருப்பு வைக்கின் வேகுவது எவ்விதம் ஸ்வாபாவிக தர்மமோ, அவ் விதமே வேகும் அதன்பேரில் தண்ணீர் ஊற்றின் அணைவ துங்கூட கடவுளுடைய ஏற்பாடு, தர்மம். அதாவது ஒரு காரணத்தால் ஒரு பலன் தப்பாமல் உண்டாகினா, நாம் வேறொரு காரணத்தை ஏற்படுத்தி அப்பலனை மாற்றக் கூடும்; கெட்ட காரியத்தால் கெட்ட பலனும், நல்ல காரி யத்தால் நல்ல பலனும் உண்டாகும். கடவுளால் ஏற்படுத் தப்பட்ட இவ்வித சாசுவத தர்மங்களைத் தெரிந்துகொண்டு, கெட்ட பலன்களை அளிக்கும் வேலைகளை விட்டு, நல்ல பலன் களை அளிக்கும் வேலைகளையே செய்யவேண்டும். எரியும் நெருப்பைத் தண்ணீரால் அவிக்கும் புத்திமானைப்போல் நாம் கெட்ட கிருத்தியங்களாலுண்டாகும் தீமைகளைப் போக்க டிக்கும் நல்ல கிருத்தியங்களின் ஸ்வரூபத்தை அறிந்து, அவற் றாலேயே தீயகிருத்தியங்களை போக்கடித்துக்கொள்ளலாம். இதுவும் கடவுளுடைய ஏற்பாடே. இந்த தர்மங்களைத் தெரிந் துகொள்ளுதலே ஞானம். இதற்காகவே நமது அறிவை விருத்திசெய்துகொள்ளல் வேண்டும். கார்யகாரண ஸம்பந்த தர்மம் சாசுவதமானது. ஆனால் பலன்களை நாம் மாற்றக் கூடும். ஏனெனில், பலன் சாசுவதமன்று. மனிதன் நீராவி சக்தியின் ஸ்வரூபதர்மத்தை தெரிந்துகொண்டு அதை அனு சரித்து வர்த்தித்து புகைவண்டியை நிர்மாணஞ்செய்தானல் லவா? அப்படியே மின்சார சக்தி தர்மங்களையும் தெரிந்து கொண்டு, பிரயோஜனகரமான அனேக யந்திரங்களை ஏற்ப டுத்தவில்லையா? வஸ்து சோதனை செய்பவர்களான சாஸ்தி ரக்ஞர்கள் (Scientists) கெட்ட காற்று நிறைந்த வீட்டிலி ருப்பதால் நமது இரத்தத்திற்குக் கேடுண்டாகும் என்பதா கவும், விஷப்பூச்சிகள் உள்ள ஜலத்தைக் குடிக்கின் காலரா முதலான ஜாட்டியங்களுண்டாகுமென்பதாகவும் பரீக்ஷித்துக் கண்டுபிடித்து, இப்படிப்பட்டவைகளை விட்டொழித்தல் அவ சியமென்பதாக எல்லோருக்கும் அறிவித்திருக்கிறார்கள். நாம்

ஸ்தூலப் பிரபஞ்ச தர்மங்களின் ஞானத்தை விருத்திசெய்து கொள்ளவேண்டும். இந்த ஞான விருத்தியால் புதிய விஷயங்களைத் தெரிந்துகொண்டு அப்பிரகாரம் நடக்கவேண்டும். இவ்வித முயற்சியால் நாம் மிகவும் மேன்மையடைவோம். வியவசாய விஷயத்திலும், யந்திரங்கள், கைவேலைகள், சரீர சௌக்கியம் முதலான இதர விஷயங்களிலும் புதிய விஷயங்களைத் தெரிந்துகொண்டு, சரீர சௌக்கியத்தையும் தன தான்ய விருத்தியையும் செய்துகொள்ளக்கடவோம்.

இன்னொரு திருஷ்டாந்தம் கூறுவோம்: ஆயுர்வேதத்தையும் சரீர தர்மங்களையும் பரீக்ஷித்தறிந்த டாக்டர்கள், பாலிகைகளுக்குச் சிறுவயதில் சாந்திமுகூர்த்தம் செய்யக்கூடாதென்றும், பாலிகைகளுக்கு கர்ப்பதாரணைக்கு அப்போது சக்தியில்லையென்றும், பால்யாவஸ்தையில் கர்ப்பம் தரிக்கின் தாயினிடத்துள்ள உபாய இரத்தம் தாய்க்கும் தாயினிடம் வளரும் பிண்டத்திற்கும் போதாமல், ஒருவருக்குக் கூடப் போதாத அன்னத்தை இருவர் தினந்தினம் கொஞ்சங் கொஞ்சமாக அரைவயிற்றுக்கு மாத்திரம் சாப்பிடும்படி நிர்ப்பந்தப்படுத்தின மாத்திரத்தில் இருவர்களும் க்ஷீணித்துக் கெடுவார்களென்பதாகவும் போதிக்கிறார்கள். அவ்விதமே ஐரோப்பியர் தங்களுடைய பாலிகைகளின் நிஷேகத்தை நிறுத்திவைத்திருக்கிறார்கள். நாம் அத்தர்மங்களை அனுஷ்டிக்காதபடியால் நம்மில் பாலிகைகளுக்குப் பிரசவிக்கும் சக்தியில்லாமல் அநேகர் நசித்தலும், பலவீனர்களாய் ரோகிகள் ஆவதும், குடும்பங்கள் நாசமாவதும் சம்பவிக்கின்றன. நமது தேசத்தில் ஆயிரக்கணக்கான பாலிகைகள் பிரஸவிக்கமுடியாமல் பிரதிவருஷமும் மரணமடைவதைப் பார்க்கிறோமல்லவா? இவ்விஷயங்களை நாம் டாக்டர்கள் மூலமாயும் கிரந்தங்கள் மூலமாயும் மாத்திரமே தெரிந்துகொள்ள வேண்டுமா? இத் தர்மங்கள் பாலிகைகளின் சரீரத்திலேயே எழுதியிருப்பது போல் புலப்படவில்லையா? பாலிகைகளின் சரீரங்களே இத் தர்மங்களைப் போதிப்பதற்கு கடவுளால் ஏற்பாடு செய்யப்

பட்ட கிரந்தங்களாக இருந்துவருகின்றன. இவற்றாலும் நமது அனுபவத்தாலும் இத்தர்மங்கள் நமக்குக் கோசரமாகின்றன. நமது அறிவை விருத்திசெய்யவே புதிய தர்மங்களைத் தெரிந்துகொண்டு, ஞானத்தால் கெட்டபலன்களை நசிக்கச்செய்து மேன்மையை அடையக்கடவோம். ஞானாக்னி கெட்ட பலன்களையும் கர்மத்தையும் நாசஞ்செய்யும். (கீதை அத். 4. சுலோ. 37, 38.) பூர்வஜன்மத்தில் செய்த பாபங்களை நாம் ஞானத்தாலும் ஸத்காரியங்களாலும் நிவர்த்தி செய்துகொள்ளக்கூடும். ஜீவன் தனது அறிவையும் ஸாமர்த்தியத்தையும் விர்த்திசெய்துகொண்டு தக்க பிரயத்தனங்களாலே பூர்வ கர்மபலன்களை நாசஞ்செய்துகொள்ளக் கூடியவனாயவன். மார்க்கண்டேயர், ஸாவித்ரீதேவி இவர்கள் மரணத்தைக்கூட மாற்றிக்கொள்ளவில்லையா? இவ்விதம் கர்மத்தை நாசஞ்செய்வதற்கு ஜீவன் ஸ்வதந்தரனாக இருக்கிறான். ஈசுவரன் ஸ்வதந்தரனானபடியால் ஈசுவராம்சனான ஜீவனுக்குங்கூட ஸ்வதந்திரமுண்டு கர்மநாசத்தைச் செய்துகொள்ளக்கூடியவன். ஜீவனுக்கு கெட்ட காரியங்கள் (பாபங்கள்) செய்யாதிருப்பதினாலே இனிவரும் காலத்தில் கஷ்டங்களில்லாது போகும். இவ்விதம் பக்திஞான நிஷ்டைகளால் ஆகாம்யகர்மம் இல்லாதுபோகும். ஸத்குரு போதானுசாரமான நிஷ்டையால் காரண குருவினுடையவும் ஈசுவரனுடையவும் தேஜஸை அடைந்து நாம் இதற்குமுந்தி செய்த பாபபலத்தை, அதாவது இனிவரப்போகும் கஷ்டங்களையும் ஸூக்ஷ்மாதி சரீரங்களிடத்துள்ள துர்வாஸனைகளையும் நாசஞ்செய்துகொள்வோம். அதாவது, சஞ்சிதகர்மம் காரண குருவின் தயையால் நசிக்கும்.

ஸ்தூலப் பிரபஞ்சத்திற்கும் ஸ்தூலசரீரத்திற்கும் ஸ்வாபாவிக தர்மம் எப்படியுண்டோ, அப்படியே ஸூக்ஷ்மலோகங்களுக்கும், ஸூக்ஷ்மகாரண சரீரங்களுக்கும், மனதிற்கும், ஆன்மாவுக்கும் ஸம்பந்தப்பட்ட ஸ்வாபாவிக தர்மங்களுண்டு. இத்தர்மங்களைக்கூட நாம் தெரிந்துக்கொள்ளல்வேண்டும். அத்தர்மங்களின்படி நடக்கின் பெரிய மேன்மைகளை அடைவோம்.

விரோதமாக நடக்கின் பெருங்கேடுண்டாகும். நமக்கு இந்த தர்மங்கள் தெரியாதுபோனாலும் இவைகளுக்கு விரோதமாக நடக்கின் கேடு தப்பாது. குருடன் தெரியாமல் நெருப்பில் கால்வைத்தாலும் சுடாதிருக்குமா? ஆகையால் நாம் சூக்ஷ்ம லோகங்களுடையவும், சூக்ஷ்ம காரண சரீரங்களுடையவும், மனதினுடையவும், ஆன்மாவினுடையவும் தர்மங்களைத் தெரிந்துகொள்ளல் முக்கியம். பிரம்மஞானஸபையில் திவ்யதிருஷ்டியுள்ளவர்கள் சொல்லும் இத்தர்மங்களை யோஜிப்போம். இவை நமது ஹிந்துசாஸ்திர ஸம்மதமானவை. பானகத்தில் நனைத்த துணியில் ஜலமும், ஜலத்தில் சர்க்கரையும், அத்துணி முழுமையும் வியாபித்திருக்குமாபோல், பூலோகத்தில் புவர்லோகமும் புவர்லோகத்தில் சுவர்லோகமுதலான லோகங்களும் ஒன்றைவிட ஒன்று சூக்ஷ்ம தத்வங்களை உடைத்தானவைகளாகி, ஒன்றில் ஒன்று வியாபித்து இவ்விடமே, அதாவது பூலோகத்தினிடமே இருக்கின்றன. அப்படியே ஈரத்துணியிலுள்ள ஜலத்தைப்போல் ஸ்தூல சரீரத்தில் சூக்ஷ்மசரீரமும் இவ்விரண்டில், ஜலத்தில் சர்க்கரையைப்போல் காரணசரீரமும் வியாபித்திருக்கிறது. ஸ்தூலசரீரம் பூலோக தத்துவத்தாலும், சூக்ஷ்மசரீரம் புவர்லோகசுவர்லோக தத்துவங்களாலும், காரணசரீரம் உத்தமலோக தத்துவங்களாலும் ஏற்பட்டிருக்கின்றன. இந்த சூக்ஷ்மலோகங்களும் சூக்ஷ்மாதி சரீரங்களும் திவ்ய திருஷ்டிக்குப் புலப்படும். கத்தியால் குத்திய பிரதி குத்துக்கும் ஸ்தூலசரீரத்தில் காயம் ஏற்பட்டுப் பலஹீனப்பட்டுக் கெடும்வண்ணம், பிரதிதுஷ்ட சங்கற்பமும் சூக்ஷ்ம சரீரத்தைக் கெடுத்து அதனிடம்கெட்ட அலைகளை உண்டாக்கி, துஷ்டதேஜஸை நிரப்பும்; இந்த துஷ்டதேஜஸ், ஸ்தூல சரீரத்திற்கு விஷம் எப்படியோ, அப்படியே சூக்ஷ்மசரீரத்தில் சூக்ஷ்ம சம்பந்தமான விஷத்தை உண்டாக்கும். ஒருவனுக்குத் திருடவேண்டுமென்ற சங்கற்பம் ஜனித்த அக்கணமே புதிய துஷ்டதேஜஸ் சூக்ஷ்மசரீரத்தில் ஏற்படும். இவ்விதமே பிரதி நிமிஷத்திற்கும், குரோதம், லோபம், நிந்தை, கர்வம் இவைகளுக்குச் சம்பந்தப்பட்ட பிரதிசங்கற்ப இச்சையும் கொஞ்சம்

கொஞ்சமாக விஷத்தையும் துஷ்டதேஜஸையும் சூக்ஷ்ம காயங்களையும் சூக்ஷ்ம சரீரத்தில் உண்டுபண்ணிக்கொண்டிருக்கும். காயங்கள் அதிகரிக்கவே சூக்ஷ்மசரீரம் விசேஷமாய்க் கெடும் வண்ணம் துஷ்ட சங்கற்பங்களாலே சூக்ஷ்மசரீரமும் மனதும் கெட்டு ஜீவனுக்கு துர்ப்புத்தி அதிகமாகும். மனோசாஞ்சல்யம் அதிகரிக்கும். இப்படிப்பட்டவ னிறந்தபின்னர், ஸ்தூல சரீரத்தைவிட்டு சூக்ஷ்மகாரண சரீரங்களோடு புவர்லோகத்தில் பிரவேசிப்பானுகையால், சூக்ஷ்ம சரீரத்தில் இதுகாறும் பூலோகத்தில் தைத்த விஷகாயங்கள் புண்களைப்போலொத்தவைகளாகி தாபத்தை உண்டாக்கி, அங்கு நானாவிதங்களான மனோகஷ்டங்களை இவனுக்கு உண்டுபண்ணும். நமது சரீரத்தில் புண்கள் உண்டாகுமாகில் கெட்டநீரும் இரத்தமும் வெளிப்பட்டு புண் ஆறும்வரையில் நாம் உபத்திரவப்படுவதுபோல், நமக்கு பூலோகத்தில் துஷ்டகோரிக்கைகளும் சங்கற்பங்களும் உண்டாகின், புவர்லோகத்தில், அதாவது நரகத்தில், இச்சங்கற்ப விஷகாயங்களாலே ஏற்பட்ட புண்களின் உபத்திரவத்தை நரகத்தில் அனுபவிக்க வேண்டிவரும். இவன் இந்தத் தாபம் நசிக்குமளவும் நரகவாதனைப்படுவான். ஆனால் எத்தனை புண்கள் ஏற்படுமோ அவ்வளவு உபத்திரவமாத்திரம் இவனுக்கு உண்டாகுமேயொழிய ஜாஸ்தியுமில்லை கம்மியுமில்லை. யமதர்மராஜா நரகத்தில், நாம் எவ்வளவு பாபம் செய்திருக்கிறோமோ அவ்வளவு உபத்திரவத்தையே கொடுப்பாரேயொழிய ஊசி நுணி அளவுகூட ஜாஸ்தியாகவாவது கம்மியாகவாவது கஷ்டத்தை உண்டாக்கார்.

இவ்வாறு ஸ்தூலசரீரம் ஆஹாராதிகளாலும் சூக்ஷ்ம சரீரம் இச்சைகள் சங்கற்பங்களாலும் மாறிக்கொண்டிருக்கும். இவ்விதம் மாறுவது இச்சரீரங்களின் ஸ்வபாவம். ஒரு குளத்தில் 10 பீப்பாக்கள் மிதந்துகொண்டிருக்க, ஒரு பீப்பாயை அசைக்கின் இதரபீப்பாக்களும் அசையுமாகையால், ஒருவன் திருடவேண்டுமென்று சங்கற்பஞ்செய்தால் இச்சங்கற்ப அலை புவர்லோகத்துவாரா வியாபித்து, இதரர்களின் சூக்ஷ்ம சரீரங்

களுக்குக்கூட வியாபித்து அவர்களைக்கெடுத்து இவ்வித கெட்ட சங்கற்பங்களை உண்டாக்கும். இவ்விதம் அனேகரைக் கெடுத்த பாபம் அப்படிப்பட்டவனுக்கு உண்டாகும். மேலும் சூக்ஷ்மசரீரங் கெடுவதால் இந்த சூக்ஷ்மசரீரம் இதரர்களுடைய துஷ்டதேஜஸையும் துஷ்ட அலைகளையும் (ஒரு திருடன் இதரதிருடர்களைத் தன்னிடம் இழுக்கும் வண்ணம்) ஆகர்ஷித்துக்கொண்டு மீளவும் விசேஷமாகக்கெடும். புண்களில் ஈக்கள் மொய்ப்பதுபோல், இவ்வித சூக்ஷ்ம சரீரத்தினிடத்திற்கு சூக்ஷ்மலோகத்தில் திரிந்துக்கொண்டிருக்கும் துஷ்டபூதப் பிசாசகணங்கள், நீசகணங்கள் ஆகர்ஷிக்கப்பட்டு இவனது துஷ்டபுத்தியையும் துஷ்ட தேஜஸையும் மீளவும் விர்த்திசெய்து, இவனிடம் துஷ்டதேஜஸ் நிறைந்து இதரர்களுக்கும் உள்ளே துஷ்டபுத்தியை உண்டாக்கிக் கெடுக்கும். பிளேக்கினால் பீடிக்கப்பட்டவனைப்போல் அவன் தொடும் வஸ்துக்களிடத்தும் செல்லும் ஸ்தலங்களிடத்தும் அவனுடைய துஷ்ட தேஜஸ் வியாபிக்கும். இப்படிப்பட்டவன் பிரபஞ்சத்தில் அநேகருக்கு துஷ்டதேஜஸை வியாபிக்கச்செய்து பலபேர்களைக் கெடுத்த தோஷங்களையும் கஷ்டங்களையும் அடைவான். இதுவுமன்றி அனேகவிதங்களான துஷ்டஸ்வபாவம் இனிவரும் ஜன்மங்களுக்குங்கூட வியாபித்து, அஜ்ஜன்மங்களிலும் மேற்சொன்னபிரகாரம் அனேகம் மனிதர்களைக் கெடுத்துக்கொண்டு மட்டில்லாத பாபத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்கவேண்டிவரும். இவ்விதம் உள்ளேயுள்ள ஆன்மதேஜஸ் கெடுதலாகமாற, ஸ்தூல சரீரத்தில் பிரவேசித்து ஸ்தூல சரீரத்தையும் கெடுப்பதினால், ஜாட்டியங்கள் விர்த்தியாகும். இவ்விதம் ஸ்தூல சூக்ஷ்மங்கள் இரண்டும் கெட்டுக் காமக்குரோதங்கள், கெட்ட புத்திகள் விர்த்தியாகி, தேஹாரோக்கியம் சித்த ஸ்தைரியம் இல்லாமை பற்றி வித்தையை அப்பியஸிக்க முடியாமல், பூததயையில்லாததால் தேசாபிமானமில்லாமல், நமது தேசத்தில் வித்தியவிர்த்தி, நிஷ்டை, பூததயை இவைஹீனமாகி தேசமெல்லாம் கெடும்.

ஜீவாத்மா ஈசுவராம்சன். ஈசுவரன் பிரதி ஜீவனுடைய ஹிருதய கமலத்திலும் வசித்துக்கொண்டு பிரதி நிமிஷமும் தனது சக்தியை ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களில் வியாபிக்கச் செய்துகொண்டிருப்பார். இந்த ஆத்மசாமார்த்தியத்தினுலேயே ஜீவன் சங்கற்பித்தல், இச்சித்தல், காரியங்களைச் செய்தல் முதலிய தொழில்களைச் செய்யக்கூடியவன். ஜீவன் தன்னிடமுள்ள ஆத்ம சாமார்த்தியத்தை தன் சங்கற்பங்கள், இச்சைகள், காரியங்கள் இவைகளால் சதா செலவு செய்துகொண்டிருப்பான். இச்சங்கற்பாதிகளாலே ஜீவன் பஹிர பிரபஞ்சத்தோடு சம்பந்தம் ஏற்படுத்திக்கொள்வான். எவ்விதமெனின், ஒருவன் மற்றொருவனை அடிப்பானாகில், இக்கார்யத்தால் அவனுக்கு உபத்திரவத்தைச்செய்து, அப்படி உபத்திரவத்தைச் செய்த ருணம (காமம) இவனுக்கு ஏற்படும். அவ்விதமே கெட்ட சங்கற்பங்கள் இச்சைகள் இவைகளால் அனேகர்களுக்கு உபத்திரவத்தைச் செய்து கெடுக்குமாகையால இந்த உபத்திரவம் நீங்குமளவும் காமம என்ற கடனை விர்த்தி செய்துகொள்வான். இவ்விதம பஹிர பிரபஞ்சத்தில் கார்யாதிகளாலே ஆத்ம சக்தி பஹிர்கதப்பட்டு விரயமடைந்து ஜீவனுக்கும் பஹிர் பிரபஞ்சத்திற்கும் சம்பந்தமுண்டாகி அச்சம்பந்தம் வளர்ந்து பலப்படும். இவ்விதம காமம் விர்த்தியாகும். ஜீவன் சங்கற்பம, இச்சை, கார்யம என்ற மூன்று ஏதுக்களாலே பிரபஞ்ச சம்பந்தத்தையும் காம பந்தத்தையும் விர்த்தி செய்துகொள்வான். இவ்வித ஆத்ம சக்தியை கெடுதலாகவும் அனுவசியமாகவும் பஹிர பிரபஞ்சத்திற்குச் செல்லவிடாமல் உள்ளேயே நிறுத்திக்கொள்ளுதலே யோகம். சரீரத்தினுடையவும, இந்திரியங்களுடையவும், மனதினுடையவும் வியவஹாரங்களை உள்ளில் நிறுத்தல்வேண்டும் இவைகளின் துவாரா பஹிர்கதமான சக்தியை உள்ளேயே நிரப்பவேண்டும். அனுவசியமான கார்யங்கள், இச்சைகள், சங்கற்பங்கள் இவைகளைக் கட்டோடே ஒழித்து, மனதை புத்தியுடன் சேர்த்து ஒரே பூதமாகச் செய்யின், புத்தி தேஜஸ்ஸும் சாமர்த்தியமும் அதிகமாகும். ஆத்ம சக்தியும் அதிகரிக்கும்.

இந்த நிச்சல ஸ்திதியைத் தெரியச்செய்பவரே சிவன்; ஸ்தாணு, ஸ்திதப்பிரக்ஞன். (கீதை அத். 2. சுலோகம் 54, 61) தயாஸ்வரூபனான ஈசுவரன் சதா எல்லாருடைய க்ஷேமத்திற்கும் பரிசுத்தத்திற்கும் அனுப்பும் திவ்ய தேஜஸையும் சக்தியையும் துர்வினியோகஞ் செய்யின் அதிக கஷ்டங்கள் படுவோமாகையால், நாம் கெட்ட கோரிக்கைகளையும் கெட்ட சங்கற்பங்களையும் விட்டொழிக்கவேண்டும். இனிமேல் சூக்ஷ்ம சரீரம் நல்ல ஸ்திதிக்கு வரவேண்டுமாயின், அதற்குத் தகுந்த சாத்விக ஆஹாரங்கள், தகுந்த நல்ல கோரிக்கைகள், நல்ல சங்கற்பங்கள் முதலியவைகளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். மேலும் தகுந்த ராஜ யோகாப்பியாசமும் ஸத்சங்கத்வமும் உண்டாகி இருக்கவேண்டும். மனதை ஸ்திமிதத்திற்குக் கொண்டுவரவேண்டும்.

## மனதை ஸ்திமிதத்திற்குக் கொண்டுவரும் மார்க்கங்கள்.

இவ்வழிகள் அனேகமுள. அவைகளில் சிலவற்றை இங்கு வரைவோம். நாம் பிரபஞ்சத்தில் எத்தொழிலைச் செய்வோமோ அத்தொழிலில் பூரண திருஷ்டிவைத்து, இதர விஷயங்களிடத்து மனதைச் செல்லவிடாதிருத்தல் முக்கியமான அப்பியாசமாகும். அவ்விதம் அப்பியசித்து வர வர, கொஞ்சகாலத்தில், ஒரே விஷயத்தினிடத்தில் ஏககாலத்தில் கவனத்தை நிறுத்தும் அப்பியாசம் பலப்படும். அப்பொழுது அவ்வித மனதை ஆன்மாவிடம் நிறுத்தக்கூடியவர்களாவோம். முதலில் இந்த அப்பியாசம் பலப்படுவதற்கு, நமக்கு எந்த வஸ்துவினிடம் பிரிய மிருக்கிறதோ அதை தியானித்தால் வரவர ஏகாக்கிரம் பலப்படும்.

கெட்ட ஆகாரங்களையும், பங்கி, சாராயம் முதலான போதை வஸ்துக்களையும், விசேஷ உப்பு, காரம், புளிப்பு, முதலான ராஜஸ தாமஸ ஆஹாரங்களையும் வர்ஜிக்கவேண்டும். ஹிம்ஸை, ஜீவ ஜெந்துக்களின் சரீரத்தைச் சோதித்தல் முத

லிய காரியங்களையும் விட்டொழிக்கவேண்டும். திட்டுதல் முதலிய கெட்ட பேச்சுக்களையும், இதராளுடைய லோபங்களை எண்ணுதல், நினைத்தல், இதராளை தூஷித்தல், அவமதித்தல், தன்னைப் புகழ்தல், தன்னைப் பெரியவனென்று நினைத்தல் இவைகளையும் முற்றிலும் விட்டொழித்தல் வேண்டும். பிரயோஜனமில்லாத இத்தகைய காரியங்களால் காலம் வியர்த்தமாகுவதுமன்றி, அனுஷ்டான காலத்தில் இக்கெட்ட காரிக்கைகள் சங்கற்பங்கள் ஜனித்து, சூக்ஷ்ம சரீரம் கெட்டு, மனது பலவிதங்களாகச் சலித்து நிச்சலத்துவம் அமையாது. கெட்ட சங்கற்பம் மனதில் ஜனித்த க்ஷணமே அவற்றைப் போக்கடிக்கும் நல்ல சங்கற்பத்தை மனதிற்குக் கொண்டுவரவேண்டும். ஒருவன் திருடனென்பதாக நம மனதில் பட்டால் நாம் அவனை தூஷிக்காமல் அவனிடம் அனுதாபத்தை யுடையவர்களாகி, அவனுடைய துஷ்ட புத்தியும் துர்விர்த்தியும் தொலைய வேண்டுமென்பதாகச் சங்கற்பித்து ஈசுவரனைப் பிரார்த்திக்கவேண்டும். இவ்விதமே இதரர்களுடைய மற்ற தோஷங்களும் நமக்குப் பட்டவுடன் நாம் அவ்விதம் சங்கற்பித்துக் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும.

தேனீ மண்டல நடுவிலுள்ள புஷ்பத்தினிடமே திருஷ்டியை வைத்து அதனிடத்திற்கே போகும்வண்ணம், இதராளிடமுள்ள லோபங்களுக்கு மனதைச் செல்லவிடாமல் அவர்களுடைய ஸத்குணங்களிடத்தே மனதைச் செல்லவிடல் வேண்டும். இவ்விதம செய்வதால் உண்டாகும் பிரயோஜனங்களை யோஜிப்போம். இப்படிப்பட்டவனுடைய மனதும் சூக்ஷ்ம சரீரமும் அநதந்த சத்குண ஸ்வரூபமாக மாறி "யத் பாவம் தத்பவதி" என்றபடி சூக்ஷ்ம சரீரத்தில் பரிசுத்த அலைகளும் தேஜஸ்ஸும் ஜனித்து விர்த்தியாகும். A. என்பவன் B. என்பவனை சாந்தனாக எண்ணின மாத்திரத்தில், A. என்பவனுக்குச் சாந்தமுண்டாகும். மேலும், A. என்பவனின் சாந்த சங்கற்ப அலை, B. என்பவனின் சூக்ஷ்ம சரீரத்தில் பிரவேசித்து B. என்பவனுக்கு தண்ணீர் ஊத்திய செடி விர்த்தி

யாகும் வண்ணம், சாந்தகுணத்தை விர்த்திசெய்யும். இப்புண்ணியம் A. என்பவனுக்கு உண்டாகும். இவ்விதம் சதா இதரர்களுடைய சத்குணங்களையே ஸ்மரிக்கின் எல்லோருடைய பரிசுத்தமும் அதிகரிக்கும். மேலும் தியானகாலத்தில் ஒரு வேளை மனது சலிக்கினும் இதரர்களுடைய பரிசுத்த குணங்களே மனதிற்கு ஞாபகத்திற்குவரும். பிரதி ஸத்குணமும் ஈசுவரனை சூசிப்பிக்கும். எப்படியெனின், பிரதி பரிசுத்தகுணமும் அனந்த கல்யாணகுண ஸ்வரூபனான ஈசுவரனுடைய குணமன்றோ! ஆகையால் ஒருவனுடைய சாந்தம மனதிற்கு வரவே அச்சாந்தகுணம ஈசுவர குணமென்பதாக ஞாபகத்திற்குக் கொண்டுவந்து சாந்த ஸ்வரூபரான ஈசுவரனை தியானிக்கவேண்டும. இவ்விதம் இதரர்களுடைய பிரதி சத்குணத்தாலும் ஈசுவரன் மனதிற்கு வரும்வண்ணம் செய்துகொள்ளக்கூடும். இந்த சத்குணத்தியானம, ஜலம் அழுக்கை நீக்குவதுபோலும், வெளிச்சம இருளைப் போக்குவதுபோலும் அப்படிப்பட்டவனிடத்துள்ள துர்க்குணங்களைப் போக்கடிக்கும். இவ்விதம் பிரதி வஸ்துவினிடத்துமுள்ள நல்ல குணத்தால் ஈசுவரன் அவைகளிடத்திருக்கின்றாரென்பதாகப் பாவிக்கவேண்டும். எல்லாம் ஈசுவரமய மென்பதாக எண்ணவேண்டும். இவ்விதம் செய்யின் தியான மூர்த்தியிடம் மனதை நிறுத்தல் அதிக சுலபமாகும்; ஆகையால் சதா இதரரிடமுள்ள ஸத்குணங்களையே மனதிற்குக் கொண்டுவரின் ஈசுவர தியானபரராவோம்; சத்குணங்களுள்ளவர்களாவோம்.

காலை மாலைகளிலும் நித்திரைக்கு முன்னும் கொஞ்சகாலம் தியானத்தை அப்பியசிக்கவேண்டும். சத்கார்யங்களையே செய்தல், சத் சங்கத்வம், நல்ல சங்கற்ப முடையவர்களாயிருத்தல், அவகாசமும் சக்தியும் ஏற்பட்ட காலத்தில் இதரர்களுக்குத் தப்பாது மேன்மையைச் செய்தல், சத்போதனைகளைச் செய்தல் இவைகளெல்லாம் மனோ ஸ்தைர்யத்திற்கு அத்யாவசியமானவை.

## 13

## உத்தேசத்தின் முக்கியம்.

நற்காரியத்தைச் செய்யினும் உத்தேசம் பரிசுத்தமாக இருக்கவேண்டும். பத்மாஸுரன் தபஸைச்செய்து சிவனால் வரத்தைப்பெற்றும் தன்னைத்தானே பஸ்மம் செய்துகொண்டு கெட்டுப்போகவில்லையா? அவனது தபஸ் நல்லதென்றாலும் இதரர்களைக் கெடுக்கவேண்டுமென்ற கெட்ட உத்தேசத்தோடு தபஸைச்செய்தானாகையால் அவன் கெட்டுப்போனான். நமது காரியங்கள், பேச்சுக்கள், ஸங்கற்பங்கள் இவைகளெல்லாம் நல்லதாக இருக்கவேண்டுமேயொழிய, ஸ்வலாபத்திற்காகட்டும், சத்துரு நாசத்திற்காகட்டும், அஹங்கார மமகாராதிகளால் ஆகட்டும் செய்யவொண்ணாது. கர்வம், ஸ்வயாநயம், பேதபாவம் இவைகளை விட்டொழிக்கவேண்டும். பிரதிக்கிரியையும், இச்சையும், ஸங்கற்பமும் ஓர் உத்தேசத்தை அனுசரித்திருக்குமாகையால், அவ்வுத்தேசம் கெடுதலாயிருக்கின், ஸ்தூலசரீரத்தில் க்ஷயரோகம் நிமிஷ நிமிஷத்திற்கும் கெடுக்கும் வண்ணம், அக்கெட்ட உத்தேசம் ஸூக்ஷ்ம சரீரத்தை பிரதி நிமிஷமும் கெடுத்துக்கொண்டேயிருக்கும். ஸங்கீதம் சுருதியுடனும், வஸ்திரம் சாயத்தோடும் சேர்ந்திருக்கும் வண்ணம், பிரதிதொழிலும் ஸங்கற்பமும் ஓர் உத்தேசத்தோடு கூடியிருக்குமாகையால், நாம் செய்யும் தொழில்கள் எதற்காகச் செய்கிறோம்? எந்த நன்மையை உத்தேசித்துச் செய்கிறோம்? எப்படிச் செய்தல்வேண்டும்? என்பதாக நன்றாய் ஆலோசிக்கவேண்டும். ஸ்வலாபத்திற்கும் சத்துரு நாசத்திற்கும் தியானிக்கின், விஷ ஜலத்தால் பாகம்செய்த அன்னத்தைப்போல், கெட்ட உத்தேசம் அப்படிப்பட்டவனை நாசஞ்செய்யும்.

வாஸுதேவர் எல்லோருடைய ஹிருதயத்திலுமிருந்து கிரமமாக எல்லோரையும் நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவருகிறார். (கீதை அத். 18. சு. 60.) ஈசுவரன் கல்லைச் செடியாகவும், செடியை ஜந்துவாகவும், ஜந்துவை மனுஷ்யனாகவும் செய்து, மனிதர்களை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்து கிரமமாகப் பூரணர்களாகச்செய்கிறார். இவ்விதம் எல்லாப் பூதங்களும் ஜீவர்

களும் பூரணுளாக வேண்டுமென்பதாக ஈசுவர சங்கற்பம்; இதற்காக ஜன்மங்கள், லோகங்கள், நரகம், ஸ்வர்க்கம் சுருதி ஸ்மிருதிகள், தர்ம சாஸ்திரங்கள், அனுஷ்டானக் கிரமங்கள் இவைகளை ஈசுவரன் ஏற்படுத்தி யிருக்கிறான். தேவர்கள், ரிஷிகள், இவர்களது சிஷ்யர்கள் இவ்விதம் எல்லோரையும் பரிசுத்தர்களாகச் செய்து பூரணுளாகப் பண்ணுவதற்காகவே சதா பாடுபடுகிறார்கள். இவ்விதம் பூரணர்களாக வேண்டுமென்பதாக ஈசுவரனுடைய சங்கற்பம், ஏற்பாடு. (Divine Plan.) ஈசுவர சங்கற்பத்திற் கனுகுணமாக நாம் சகல கார்யங்களையும் செய்தல்வேண்டும். ஈசுவர சங்கற்பம் நிறைவேற வேண்டுமென்றும் எல்லோரும் பரிசுத்தர்களாகி பூரணுளாக வேண்டுமென்றும் உத்தேசம் நமக்கு சதா இருக்கவேண்டும். இவ்விதம் செய்தலே யக்ஞார்த்த மெனப்படும். (கீதை அத். 3. சு. 9.) அதாவது, சக்தியானுசாரம் எல்லோருடைய நன்மைக்காகப் பாடுபட்டு தியாணிக்கவேண்டும். அஹங்கார மமகாரங்களைவிட்டுப் பலத்தைக்கோராது எக்காலத்தும் தான் செய்யும் எல்லா நற்காரியங்களையும் ஈசுவர கைங்கர்யமாகச் செய்தல்வேண்டும். காலத்தை வீண்கழிக்காமல் சத்கோஷ்டியுள்ளவர்களாகி ஈசுவரனுடைய உபகரணமாகக் கார்யங்களையெல்லாம் செய்யவேண்டும். நானே பிர்ம்மமென்ற மஹா வாக்கியானுஷ்டானபராள்கூட எல்லோருடைய மேன்மைக்கு சக்தியானுசாரம் காலத்தை வீண்கழிக்காமல் பாடுபடல்வேண்டும். இதரர்களுக்கு சத்போதனையைச் செய்துகொண்டும், எல்லோருடைய நன்மைக்காக தியாணித்துக்கொண்டும் இருக்கவேண்டும். இவ்விதம் செய்யாவிடின் அவர்கள் உண்மையான ஆத்மானுபவத்தை அடைய சாத்தியப்படமாட்டாது. ஞானியானவன் தான் எல்லாரிடமும் இருப்பதாகப் பாவித்து வியவஹரித்துக் கொண்டிருக்கிறான்; ஆகையால் வேறொருவன் கெட்ட கார்யங்களைச் செய்யின் தானே அப்படிப்பட்டவனிடமிருந்து அக்கெட்ட கார்யத்தைச் செய்ததாகப் பாவித்து, ஸ்வயமாகக் கெட்ட கார்யங்களைச் செய்த தன்னைத்தான் எவ்விதம் திருத்திக்கொண்டு நல்லஸ்திதிக்குச் செல்வாஞே, அவ்விதமே

கெட்ட கார்யத்தைச் செய்யும் இதர மனிதனை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவருவதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும். இவ்விதம் பூததயை ஞானியிடம் பூரணமாகப் பலப்படல்வேண்டும். சர்வமும் பிர்ம்மமென்ற ஞானியும் இந்த சர்வபூததயாசஹிதமான உத்தேசத்தோடு கூடினவனா யிருக்கவேண்டும். எல்லோருடைய நன்மைக்கும் பலவிதங்களில் பாடுபடல் வேண்டும். இவ்வித பரம உத்கிருஷ்டமான உத்தேசத்தோடு கிர்ஹஸ்தன் தான் செய்யும் சகல சத்காரியங்களையும் ஈசுவர கைங்கர்யமாகவும் பூஜையாகவும் செய்துகொண்டு வரவேண்டும் இது அத்யாவசியம். அனுஷ்டாதா கர்வத்தை விட்டுத் தன்னை ஈசுவரனுடைய உபகரணமாகப் பாவித்து ஸ்வப் பிரயோஜனகரத்வத்தைவிட்டு சர்வ பூதங்களிடத்தும ததையுடையவனுகிப் பேதபாவத்தைத் தொலைத்துத் தனது புத்தியை ஈசுவரனிடம் லயிக்கச்செய்யவேண்டும். இதுவே ராஜயோகம். இதுவே ரிஷி சம்பிரதாயம். இவ்வித அனுஷ்டானத்தாலே பிரஹ்லாதன், விபீஷணர், ஜனகர் முதலியவர்கள் பூரணுளாஞர்கள்.

இவ்வித ராஜயோகியிடம் ஆத்மதேஜஸ் புத்தி துவாரா மனதிற்கும், சூக்ஷ்ம சரீரத்திற்கும், நிறைந்த ஏரியின் ஜலம் மூடியைத் திறந்துவிடவே, பூமிக்குப் பாயும்வண்ணம், நிறைந்த ஏரிஜலம் என்ற ஆத்மதேஜஸ் காரணசரீரமென்ற மூடியின் வழியாய் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களுக்கு வியாபித்து அவைகளிடமுள்ள துர்வாசனைகளை நாசஞ்செய்யும். இவ்விதராஜயோகி, ரிஷிகளின் தேஜஸை விசேஷமாய் அடைவான். இவ்வித ராஜயோகியின் மூலமாய் தேவர்கள், ரிஷிகள், ரிஷி சிஷ்யர்கள் அவர்களுடைய திவ்ய தேஜஸை ஜீவகோடிகளுக்கு வியாபிக்கச்செய்வார்கள்; ஏனெனின், நமக்குத் தெரியாமலே இவர்கள் நமக்கு நன்மையைச் செய்துவருகிருர்கள். இவர்களே தோன்ரு உபகாரிகள்.

## தோன்ரு உபகாரிகள்.

## (Invisible Helpers).

இவர்கள் இருவகுப்பினர். ரிஷிகளும் அவர்களின் சிப்பந்திகளும் முதல்தரகதி. தேவர்களும் அவர்களது சிப்பந்திகளும் இரண்டாவது தரகதி. இவ்விஷயத்தைக் கொஞ்சம் ஆலோசிப்போம். நாராயணமூர்த்தியின் ஆக்ஞைக்கு உள்பட்டுத் தேவகணங்கள் அநேகம் தொழில்களையும் உபகாரங்களையும்புரிந்து வருகிறார்கள்.

### ரிஷிகள்.

ரிஷிகள் பரிபூரணுள். ஈசுவரஸ்வரூபர்களாகி நமது நன்மைக்காக ஹிமாசலப் பிராந்தியங்களில் வசித்துக்கொண்டு சூக்ஷ்ம சரீரத்தோடு எங்கும் உலாவிக்கொண்டிருப்பார்கள். இவர்கள்ஸதா தங்கள் திவ்யதேஜஸை மனிதர்களுடைய அந்தராத்மாவுக்கும் காரண சரீரத்திற்கும் (விக்ஞானமய கோசத்திற்கும்) வியாபிக்கச் செய்துகொண்டிருப்பார்கள் இது அவர்கள் இடைவிடாது செய்யும் தொழில். இவர்கள் பூலோகத்திலுள்ள நமக்கும், இறந்துபோய் புவர் ஸ்வர்க்கம்முதலிய லோகங்களிலிருக்கும ஜீவர்களுக்கும், ஸதா ஹிருதயத்தினிடமாகப் பிரவேசித்து நமக்குத் தோன்ருமலே தங்கள் தேஜஸை நிரப்பிக்கொண்டு எல்லோரையும் பரிசுத்தர்களாகச் செய்வார்கள். ஸத்புத்தியையும் பூததயையையும் பிரேரேபித்துக்கொண்டு ஞானத்தையும் ஆத்மானந்தத்தையும் விர்த்திசெய்வித்துக்கொண்டிருப்பார்கள். இவர்கள் நம்மைத் தங்களைப்போல ஸொத்தவர்களாகச் செய்வதற்கு சகலவிதப் பிரயத்தனங்களையும் செய்துகொண்டிருப்பார்கள். ஜீவகோடிகளை அந்தந்த தேசத்திலும் அந்தந்த மதத்திலும் ஜன்மிக்கும்படி செய்து, கிரமமாக நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவருகிருர்கள். இவர்கள் சதா நமக்கு அனுப்பும் தேஜஸைப்பூர்த்தியாக அடைந்து மேன்மையடைவதற்கு நாம் ராஜயோகாப்பியாசிகளாக வேண்டும். அப்பொழுது அவர்கள் தேஜஸ் நமது காரணசரீரத்தில் பிரவே

சித்து இவற்றின் துவாரா சூட்சுமத்திற்கு வியாபித்துஸ்தூலம் கூட பரிசுத்தமாகும். ஆகையால் நாம் சதா ராஜயோக நிஷ்டையுடையவர்களாகி ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களைப் பரிசுத்த ஸ்திதியில் வைத்துக்கொள்ளவேண்டும். இதற்கு வேண்டிய யுக்த ஆஹாரம், சித்தஸ்தைரியம், பூததயை ஸஹிதமான பக்தி இவை உண்டாகி, நமது சங்கற்பங்கள் தொழில்களெல்லாம் ஈசுவரனுடைய ஏற்பாட்டிற் கனுகூலமாக இருக்கவேண்டுமென்ற உத்தேசம் உண்டாகியிருக்கவேண்டும். கர்வமில்லாது சமத்வமுடையவனாகி ஈசுவரனுடைய உபகரணமாக எல்லாத் தொழில்களையும் நடத்திக்கொண்டு, தனது சங்கற்பத்தை ஈசுவரனிடம் ஒற்றுமைப்படுத்தப் பிரயத்தனம் செய்யவேண்டும். இவ்விதம் ஸதா வர்த்திக்கின் காரணகுருவான ரிஷிகளின் தேஜஸ் இவ்வித பக்தர்களிடம் சூக்ஷ்ம சரீரங்களுக்கு வியாபித்து, ஜீவகோடிகளுக்கும் வியாபித்து அநேகர்கள் நல்லவர்களாவார்கள். இவ்வித மட்டுக்கடங்காத புண்ணியம் இவனுக்கேற்பட்டுப் பரிசுத்தனாவன். இந்த ராஜயோகி கிரமமாக ரிஷி சிஷ்யனாகிப் பின்னர் ரிஷியாவான். இல்லாவிடின், சாத்தியமாகாது.

இது ஈசுவரனுடைய ஏற்பாடு (Divine Law). இவ்விதம் பூலோகத்தில் நாம் வர்த்திக்கின் நித்திரைகாலத்திலும் மரணத்திற்குப் பின்னும் சூக்ஷ்ம லோகங்களிற்கூட இதே நிஷ்டையோடு வர்த்திப்போமாகையால், அந்த லோகங்களிடத்தும் ரிஷிகளின் தேஜஸை இன்னும் விசேஷமாக அடைந்து, நமது பரிசுத்தத்வம், பக்திஞானம் இவை அதிகரிக்கும். மேலும் விசேஷ நன்மையைச் செய்யக் கூடியவர்களாவோம். இனி வரப்போகும் ஜன்மத்தில் மஹா பரிசுத்தர்களாவோம்.

ஒருவீடு கட்டுபவன் வீட்டின் கீழுள்ள ஆபாசங்களை எடுத்துவிட்டு, கீழ்பூமியை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்து, பலமான அஸ்திவாரம்போட்டு, அதற்கு வேண்டிய சாமான்களெல்லாவற்றையும் சித்தப்படுத்தி, அந்தச் சாமான்களில் கெட்டவைகளைத் தள்ளி நல்லவைகளைமாத்திரம் உபயோகப்

படுத்தி, கட்டடத்தைக் கிரமக்கிரமமாக விர்த்திப்படுத்தி முடித்து சித்தப்படுத்தும் விதமாக, ஜீவன் மோக்ஷமென்ற வீட்டை அடையவேண்டின், ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களென்ற பூமியை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவரல்வேண்டும். துஷ்ட ஆஹாராதிகள், காமக்குரோதாதிகள் இவைகளைத் தொலைக்கவேண்டும். ஆசை, சிந்தை, துக்கம், பயம், கர்வம் முதலான கெட்ட வஸ்துக்களை நீக்கி அதற்குப் பிரதியாக வைராக்கியம், நிச்சிந்தை, சாந்தம், தைரியம், தன்னடக்கம் முதலான ஸத்குணங்களை விர்த்திசெய்து, தான்செய்யும் ஸகல நல்ல காரியங்களையும் பரோபகாரத்திற்கே செய்துகொண்டு ஈசுவரனுடைய ஏற்பாட்டிற்கு அனுகுணமான உத்தேசமென்ற அஸ்திவாரத்தை நன்றாய்ப்போட்டு, இடைவிடாது சத்கர்மங்கள், சத்சங்கற்பங்களென்ற சட்டிம் வஸ்துக்களாலே பக்திஞானங்களை அப்பியசிக்கின் மோக்ஷமென்ற வீடு அமையும். இல்லாவிடின் சாத்தியமில்லை.

இந்த ஸ்திதி உண்டாவதற்காக ரிஷிகள் நமக்குத் தோன்றாமலே நமது நலத்திற்காக மிகவும் பொறுமையோடும், ஜாகரூகத்தோடும், தயையோடும் அநேக யுகங்களாகப் பாடுபடுகிறார்கள். நாமிந்த ஸ்திதியை அடையும்வரைக்கும் இனியும்கூட பாடுபடுவார்கள். இவர்கள் மஹோபகாரத்தைச் செய்யும் தோன்றா உபகாரிகள். நாம் இவர்களின் தேஜஸை அடைவதற்குத் தகுந்த யோக்கியதையை விர்த்திப்படுத்திக்கொள்ளவேண்டும்.

## ரிஷி சிஷ்யர்கள்.

ரிஷி சிஷ்யர்கள் குருவின் ஆக்ஞையை அனுசரித்து ஜீவகோடிகளுக்கு சதா பலவிதங்களான நன்மையை அளித்துக்கொண்டிருப்பார்கள். இவர்கள் பூலோகத்திலிருந்துகொண்டு ஸ்தூல சரீரத்தைவிட்டு சூக்ஷ்ம சரீரத்தோடு புவர்லோகத்தில் சஞ்சரிப்பார்கள் சிலரும், புவர்லோக சுவர்லோக உத்தமலோகங்களில் சஞ்சரிப்பவர்கள் சிலரும் உளர். இவர்கள் செய்யும் உப

காரங்கள் சிலவற்றைத் தெரிந்துகொள்வோம். ஜாட்டியமாகட்டும் துக்கமாகட்டும் நமக்கு ஏற்பட்டபொழுது சங்கற்ப சக்தியால் தங்கள் தேஜஸை அனுப்பி மனதிற்கு நிம்மதி உண்டாகச்செய்தல், கலகங்கள் மதத்வேஷங்கள் வியவஹார த்வேஷங்கள் உள்ளவர்களின் மனங்களில் பிரவேசித்து இவைகளை மாற்றுதல், யுத்தங்கள் சம்பவிக்கும் சமயங்களில் அவைகளை நிறுத்துதல், அபாய ஸ்தலத்திற்குச் செல்பவர்களுக்கு அவ்விதம் போகாவண்ணம் புத்தியை உண்டாக்கி அபாயத்தைத் தோற்றுவித்தல், நிறுத்துதல், துஷ்கார்யம் செய்யச்செல்பவனைத் தடுத்தல், அவர்கள் மனதில் அவ்வித கார்யங்களின் குரூரத்வத்தைக் காட்டல், எச்சரிக்கை பண்ணுதல், அவ்வித அகிருத்யங்களினின்று திருப்புதல், அவ்வித அவகாசங்களில்லாது செய்தல், பூகம்பங்கள், கப்பல் முழுகுதல், வீடுகள் வேகுதல் இவ்வித பெரிய அபாயங்கள் சம்பவிக்கும்பொழுது அங்கு சூக்ஷ்ம சரீரத்தோடு வந்து அபாயத்தை நிவர்த்தித்தல், சிலரைக் காப்பாற்றல், அவ்வித ஸ்திதியால் மரணமடைபவர்களின் மனதிற்கு நிர்பயத்தையும் சாந்தத்தையும் உண்டாக்கி பக்தியைப் பிரேரேபித்து தியானபரர்களாகச்செய்தல், இதரர்களுக்கும் மரணகாலத்தில் சாந்தம் பக்தியை உண்டாக்கி விர்த்தி செய்தல், நிஷ்டையிலுள்ள ஸ்திரீ புருஷர்களுக்கு சத்புத்தியை பலப்படுத்தல், பாலர் பாலிகைகளுக்கு அபாயங்கள் உண்டாகும்பொழுது தங்கள் யோகசக்தியால் அவைகளை நிவர்த்தித்தல், மேலேயிருந்து கீழே விழுபவர்களை அடிபடாவண்ணம் யோகசக்தியால் செய்தல், வஸ்து தத்வத்தைப் பரிசீலிப்பவர்களுக்கு (Scientists) அந்தந்த வஸ்து தத்வஸ்வரூப தர்மங்கள் மனதில் ஸ்புரிக்கும்படி செய்தல், பக்தி விஷயங்கள் ஆத்ம விஷயங்கள் போதிப்பவர்களுக்கும், உபன்னியாசம் செய்பவர்களுக்கும் சரியான விஷயங்கள், சித்தாந்தங்கள் மனதில் ஸ்புரிக்கும்படிசெய்தல், அவ்வித ஸ்தலங்களுக்கு சூக்ஷ்ம சரீரத்தோடு வந்து தங்கள் திவ்ய தேஜஸை வியாபிக்கும்படி செய்து, அங்கு கூட்டம்கூடி அவர்களுக்கு பக்தியைப் பிரேரேபித்தல், எங்கெங்கு பக்தர்கள் கூட்டம் கூடுவார்களோ

அங்கெல்லாம் பக்தி ஞானங்களை விர்த்திசெய்யும் தேஜஸை நிரப்புதல், பெரிய தேவாலயங்கள் க்ஷேத்திரங்கள் முதலான பக்தர்கள் கூட்டம் கூடும் ஸ்தலங்களில் திவ்ய தேஜஸை வியாபிக்கச்செய்தல், பதிவிருதைகளையும் பிர்ம்ம நிஷ்டர்களையும் காப்பாற்றுதல், அவர்கள் நிஷ்டையை விர்த்திசெய்தல், சத் கார்யங்கள் சத்காலக்ஷேபங்கள் செய்யும் மனிதர்களுக்கும் சபைகளுக்கும் அவர்களின் உத்தேசங்கள் நிறைவேறக்கூடிய அவகாசங்களை உண்டாக்குவித்தல், இத்யாதி அனேக உபகாரங்கள் ரிஷிகளின் சிஷ்யர்கள் தோன்றா உபகாரிகளாக, நமக்குத் தென்படாமலே செய்துகொண்டிருப்பார்கள். நாம் தக்க நிஷ்டையி லிருப்போமாகின் இந்நலத்தைத் தப்பாது அடைவோம். நாம் நித்திரை செய்யும் சமயத்தில் நமது ஸ்தூல சரீரத்தைவிட்டுப் புவர்லோகத்தில் சூக்ஷமாதி சரீரங்களோடு சஞ்சரித்துக்கொண்டிருப்போம். நித்திரைக்குமுன் எந்த புத்தியோடு உறங்குவோமோ அதே சங்கற்பத்தோடு நித்திரைகாலத்தில் புவர்லோகத்தில் திரிந்து கொண்டிருப்போம். பக்தியோடு நித்திரை செய்யின் பக்தியோடு திரிந்து கொண்டிருப்போம். நாம் நித்திரை செய்யுங்காலத்தில் ரிஷி சிஷ்யர்கள் பலவித உபகாரங்களைச் செய்யக்கூடியவர்களாவார்கள். ஆனால் நாம் நல்ல புத்தியோடு நித்திரை செய்தல்வேண்டும். அப்போது நமக்கு நல்ல விஷயங்களைத் தெரிவிப்பார்கள். நமது சமுசயங்களை நீக்குவார்கள். நமது தேஜஸ் பக்தியை விர்த்திசெய்வார்கள். தூங்கும் பக்தர்களை ஒன்றுகூட்டி இவர்களுக்கு சத்போதனைகளைச் செய்வார்கள். அப்படிப்பட்டவர்கள் விழித்த உடனே இவ்விஷயங்கள் கொஞ்சம் ஸ்வப்னமாக அகப்படும். அல்லது அனுஷ்டான சமயத்தில் அந்தரஸ்மரணை உண்டாகும். இறந்துபோய் பிசாசங்களாக இருப்பவர்களுக்கும் துக்கத்திலிருப்பவர்களுக்கும் நரகபாதை படுபவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்த போதனையைச் செய்து அவர்களுடைய பாப விர்த்திகளையும் கஷ்டங்களையும் நீக்குவதற்குப் பிரயத்தனஞ் செய்வார்கள்.

இவ்விதம் ரிஷி சிஷ்யர்கள் மறைவாயிருந்து பல விதங்களான நன்மையை ஜீவகோடிகளுக்குச் செய்வார்கள். ரிஷிகள்கூட அவ்வித நன்மையைச் செய்வார்கள். இவ்விதம் தோன்ரு உபகாரிகள் நமக்கு நன்மைகளைச் செய்வதற்கு சதா பாடுபட்டுக் கொண்டிருக்கிருர்கள். ஜீவன் தகுந்த நிஷ்டையால் வர்த்திக்கின் இவர்களுடைய மஹோபகாரத்திற்கு பாத்திரனுகி பரிசுத்தனுவன். ஜீவன் அவ்வித தோன்ரு உபகாரிகளாலே மேன்மை அடைந்து பரிசுத்தனுகித் தான் கூட பரோபகாரி யாவதற்கு யத்தனிக்கவேண்டும்.

இப்பொழுது கலியுகம் பிறந்து 5000 வருடங்களாகி, இரண்டாவது ஐயாயிர வருடங்களின் காலச்சக்கரம் ஆரம்பித்திருக்கிறது. இது சந்தியாகாலமாகையால், ரிஷிகள் திவ்ய தேஜஸை விசேஷமாகப் பூலோக வாசிகளுக்கு அனுப்புகிருர்களென்பதாகவும், சீக்கிர காலத்தில் ஜகத்குருவான மஹரிஷி பூலோகத்திற்கு வந்து, தனது தேஜஸை இன்னும் விசேஷமாக வியாபிக்கச்செய்து ஜீவர்களை நல்ல ஸ்திதிக்குக் கொண்டு வருவாரென்பதாகவும், அவர் சீக்கிர காலத்தில் வருவதற்கு வேண்டிய ராஜயோக நிஷ்டையை விர்த்திசெய்தல், அத்யாவசிய மென்பதாகவும் ரிஷிகளின் தரிசனத்தைப் பெற்ற பெரியோர்கள் சொல்லுகிருர்கள். ஆகையால் நாம் நிஷ்டையால் அவர் சீக்கிரமாகத் தோன்றும் வண்ணஞ் செய்யவேண்டும். தோன்ரு உபகாரிகளின் தயவிற்குப் பாத்திரர்களாகவேண்டும்.

இதற்கு வேண்டிய ஞானம், சிரத்தை, ஸ்தைரியம், சகல கார்யங்களையும் ஈசுவரனுடைய ஏற்பாட்டிற்கு (Plan) அனுகுணமாகச் செய்யும் உத்தேசம், திருடசக்தி, பூதயை, இவைகளை ஜகதீசுவரன் நமக்களிப்பாராக!

தேடத்தேட அகப்படுவன் வேதாந்த வேத்யன்
தேடுபவனைத்தான் தேடிக்கொண்டிருப்பான்
தேடத்தெரிந்த சாமார்த்தியவான் உண்டாகானு...
விசுவதாபி ராமா கேளாய் வேமாவை.

Vol. III. *October, 1918.* No. 4.





# * என் குருநாதன் என்னை ஏன் ஏற்றுக்கொள்ளக் கூடாது?

மனிதர்கள் பிரஹ்மஞான சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேர்வதற்குக் காரணங்கள் பல. சிலர் அச்சங்கத்தின் கொள்கைகளில் அநுதாபம் கொள்வதாலும், மற்றுஞ்சிலர் அதிற் சில விஷயங்களைத் தெரிந்துகொள்ளக் கூடுமென்று நினைப்பதாலும், வேறு சிலர் அச்சங்கத்தார் செய்துவரும் வேலைகளில் தாமும் சேர்ந்து உதவிபுரிய விரும்புவதாலும் சேர்கின்றனர். அவர்களின் எண்ணம் பலவிதமாக இருந்தபோதிலும் அவர்கள் விகாஸமுறையின் ஒழுங்குகளைத் தெரிந்துகொண்டபொழுது, அவர்களுக்குத் தானாகவே அதில் ஓர் உற்சாகமுண்டாகின்றது. அபிவிருத்திக் கிரமத்தின் சாம்யத்தையும், அது மனதுக்கியைந்ததாயிருக்கும் தன்மையையும் பார்த்து, அதை அடையக் கவலை கொள்கின்றனர். உலகம் எவ்வாறு வருத்தத்துடன் ஒத்தாசையை விரும்புகிறதென்பதைக் கேள்வியுற்று, உலக ரக்ஷணார்த்தமான கைங்கர்யங்களுக்குத் தங்களுடலையும் தத்தம் செய்து, அதற்காகப் பிரதிஷ்டிக்குக்

---

* இஃது ஸ்ரீமான் C. W. லெட்பீடர் அவர்களால் ஆங்கிலத் முதலில் இயற்றப்பெற்று, பிறகு விராலூர் பிரம்மஸ்ரீ வாமிநாதய்யர் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

கொண்டு, உலகத்தாரால் நன்றி பாராட்டப்படாததும், மிகவும் பெரிதானதுமான வேலைகளைச் செய்துவரும் மகான்களின் கூட்டத்தில் தாமும் சேர்ந்துகொள்வதற்கு விரும்புகின்றனர். நன்றிபாராட்டப்படாதது என்று ஏன் சொல்லவேண்டும் எனில், உலகத்தில் ரிக்ஷரிசிகள் அவதாரம் செய்து உலகத்திற்கு நன்மையைச் செய்யும்போது அவர்களைக் கல்லால் அடித்துத் துன்பப்படுத்துவதும், அவர்கள் இவ்வுலகத்தைவிட்டுப் போனபிறகு அவர்களுக்குக் கோவில் கட்டிவைத்து அவர்களைத் தெய்வங்களாகத் தொழுவதும் உலகத்தாருக்கு வழக்கமாகவிருக்கிறது. அவர்கள் உயிருடனிருக்கும்போது படும் கஷ்டம், இனிவரும் காலங்களில் தமக்குக் கோயிலும் சமாதியும ஏற்படப்போகிறதென்னும் முன் நோக்கத்தால், குறைவுபடுகிறதில்லை.

இவ்விதம் பிரஹ்மக்ஞானசபையில் அங்கத்தினர்களாகச் சேர்ந்தவர்கள் தங்களுடைய விகாஸமுறையைத் துரிதப்படுத்த நிச்சயித்துக்கொண்டபோது, அதைச்செய்யும் வழியையும் அவ்வழியைப் போதிப்பவர்களையும், அதற்கு ஒத்தாசை செய்பவர்களையும்பற்றி விசாரிக்கிறார்கள். அப்படி விசாரிக்கையில், சித்தர்களாயுள்ள மகான்களின் கூட்டமொன்று இருக்கிறதென்பதையும், அம்மகான்களிற் சிலர், சில சமயங்களில் அப்பியாசிகளை (apprentices) ஏற்றுக்கொண்டு மேற்செய்யப்படவேண்டிய வேலைகளுக்காக அவர்களைப் பழக்குகிறார்களென்பதையும், தமக்கு முன்னமேயே அச்சங்கத்தில் அங்கத்தினராகச் சேர்ந்திருப்பவர்களிடமிருந்து தெரிந்துகொள்ளுகிறார்கள். இவ்விஷயங்களை அவர்கள் சொல்லும்பொழுது, ஒருவன் அதுதான் தான்விரும்புவதெனவுணர்ந்து, உடனே தன்னையும் ஒரு அப்யாசியாகச் சேர்த்துக்கொள்ளும்படி அர்ப்பணம் செய்கிறான். அப்போது அவர்கள் அவனை ஏற்றுக்கொள்வதற்கான உத்தரவு அம்மஹான்களிடமிருந்து பிறக்கவேண்டுமென்றும், ஆனால் அவர்களிடமிருந்து அவ்வித உத்தரவு பிறக்கும்வரை அவன் செய்யவேண்டிய

தென்னவெனில், அந்நிலையை யடைவதற்குத் தன்னைப் பாத்திரனாகச் செய்துகொள்வதே என்றும் சொல்லுகிறார்கள்.

மேலும் அவர்கள் (குருநாதர்கள்) தன்னைத் தேர்ந்தெடுப்பதற்காகத் தன்னைத்தான் சீர்திருத்திக்கொள்ளும் மார்க்கத்தைப்பற்றி விசாரிக்கும்பொழுது அதைப்பற்றி இரகசியமொன்றுமில்லை யென்றும், அச்சாதனங்களெல்லாம் முன்னோர்களுடைய சாஸ்திரங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவென்றும் தெரிவிக்கப்படுகிறான். அவைகளைத் தெரிந்துகொள்வது சுலபம்; ஆனால் அச்சாதனங்களை அடைவது கஷ்டம். தற்கால வாழ்நாட்களில் ஏற்பட்டிருக்கும் பழக்கங்களில் அவைகள் அநுஷ்டானத்திலிருப்பனவாகக் காணப்படவில்லை. ஆயினும் அவைகளெல்லாம் கையாளப்பட்டுவந்த சரித்திரங்கள் நமக்கு உறுதி கூறுகின்றன. உற்று நோக்குமிடத்து இப்போதுள்ள நிலைமையைப்போன்ற காலங்களில் அவைகள் ஒருபோதும் பகிரங்கமாக அநுஷ்டிக்கப்படவில்லையென்று தெரிகிறது. பண்டைக்காலங்களில் ஞான மார்க்கத்தில் உறுதியாக நடக்க நிர்மாணித்த ஒருவன் மனித சஞ்சாரமில்லாத இடங்களிலும் குகைகளிலும் சென்று அதைப் பழகுவது வழக்கம். தன்னைப்போன்ற மனிதர்களின் மத்தியில் அவன் இருக்கும்வரை யோக்கியமான வழியில் நடப்பவனாகவும் பிரவிர்த்தி மார்க்கத்தில் உள்ளவனாகவும் இல்லறத்தானெனவும் ஆனால் ஞானமார்க்கத்தைக் கைக்கொண்டொழுகுபவன் அல்லனெனவும் கருதப்பட்டான். மற்றவர்களுக்கும் இதைச் சாத்தியமாகச் செய்யவும், முற்றிலும் அம்மார்க்கத்திலேயே நடப்பவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரியவும் அவன் இம்மேலான மார்க்கத்தை ஆதரித்துவந்தான்.

குகையில் வசிக்கும் தபஸ்வியும், நிலவறையில் சஞ்சரிக்கும் துறவியும் (monk) உலகவின்பங்களை விட்டவர்கள் என்பதிற் சந்தேகமில்லை; ஆனால் அவர்கள் செய்யப் புகுந்திருக்கும் காரியத்திற்கு மிகவும் உசிதமானதாயும் வியக்கத்

தக்கதாயுமிருக்கும் நிலைமைகளைத் தங்களுக் கேற்படுத்திக் கொள்ளுகின்றனர். தம் உடனொத்த சிருஷ்டி வருக்கத்தவராகிய வேறு மனிதரைப் பார்ப்பதில்லை; தமக்கேற்பட்ட பொறுப்புகளை யெல்லாம் விட்டொழித்தவர்கள்; தமக்குக் கோபத்தையாவது, கிலேசத்தையாவது உண்டுபண்ணுவதற்கு யாதொன்றுமில்லை. அவ்வித நிலைமை ஒருவித சுபாவமுள்ள சிலருக்குத்தான் சாத்தியமானது; அதனால் உண்டாகும் பந்த நிவர்த்தியைக் குறித்து அது அவர்கள் நோக்கத்திற்கு ஒத்ததாகவிருக்கிறது. பிரஹ்மஞான சங்கத்தைச் சேர்ந்த ஒருவன் தன்னை அபிவிருத்தி செய்துகொள்ள அம் மார்க்கத்தை ஆசரிக்கும்படி சொல்லப்படுவதில்லை. உலகத்திலுள்ள மனிதர்களுடன் சேர்ந்து வசித்து அவர்களுக்கு ஒத்தாசை செய்யப் பழகும்போதே அவன் அச்சாதனங்களைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டும். வாழ்நாட்குரிய ஜீவனோபாயங்களை அவனடையவேண்டும்; அந்நிலைமையில் அவன் பல மனிதர்களை அடிக்கடி சந்திப்பதால் அவர்களிற் சிலர் சந்தோஷமுள்ளவர்களாகவும் சிலர் கோபமுள்ளவர்களாகவுமிருக்கின்றனர். அவர்களுடைய சலன சக்திகள் அவனுக்கு விரோதமாயும் மிகுந்த தடையை உண்டுபண்ணுபவைகளாயுமிருக்கின்றன. இந்நிலைமையில் பற்றுக்களை முற்றிலும் விட்டவனைப்போல் ஞானமார்க்கத்தில் அவன் அதிகமான தேர்ச்சியை அடையமுடியாது. ஆனால் இந்நிலைமையிலிருந்து கொண்டே சிற்சில விஷயங்களில் துறவியையும் விட அதிகமான நன்மைகளைச் செய்யக்கூடும். உலக வாழ்க்கையிலிருந்துகொண்டே உலக விஷயங்களிற் பற்றில்லாமலிருக்கலாமென்பதை தன் வாழ்நாட்களில் தானே நடந்து காட்டக்கூடும்.

தன்னையும் குருநாதன் ஒரு அப்பியாஸியாக ஏற்றுக்கொண்டு தனக்கும் ஞானத்தைப் போதிக்கவேண்டுமென்று இச்சிக்கும் ஒவ்வொருவனும் குருநாதனுடைய விருப்பமின்னதென்றும், ஒருவனை அப்பியாஸியாக அவர் ஏற்றுக்கொள்வதற்கு அவ்விஷயம் எவ்விதமாய் அவருக்குத் தானாகவே உணர்த்தப்

படவேண்டுமென்பதையும் நன்ருகத் தெரிந்துகொள்ள முயற்சிக்கவேண்டும். தேகபலத்தின் அளவைப்போலவே ஒவ்வொருவருக்கு மேற்பட்டிருக்கும் ஆத்ம சக்திக்கும் ஓரளவுண்டு. அநேகருக்கு அவ்வித சக்தி தம்மிடமிருக்கிறதென்பதே தெரியாமல் அதை மலினமடையும்படிக்கும், சேதமடையும் படிக்கும் விட்டிருக்கிருர்கள். குருநாதன் தன்னுடைய ஆத்மசக்தி இவ்வளவென்பதை நன்ருயறிவார். அன்றியும் அச்சக்தியினுடைய சிறு பாகத்தையும் உலகத்தாருக்கு மிகுந்த நன்மையைப் பயக்கும் காரியங்களிற் செலவழிப்பதே தன் கடமையெனக் கொண்டிருக்கிருர். ஒருவனை அப்பியாஸியாக ஏற்றுக்கொள்வாரா மாட்டாரா வென்பதைத் தீர்மானிப்பதற்கு முகாந்திரம இது (சக்தியை வீணுக்காமல் நல்ல வழியிற் செலவழித்தல்) ஒன்றேதான். அவ்விஷயத்தில் ஏற்றுக் கொள்ளும் விஷயத்தில்) பயவென்பதொன்றுமில்லை. சிபார்சுக்கர்வது அல்லது முன் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறவனுக்கு மகனுயிருத்தலினுலாவது அவர் ஒருவனை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. ஆனுல் சிலர் "நான் குறைகளையுடையவனென்பது எனக்கு நன்ருகத் தெரியும், அப்படியிருந்தபோதிலும் நான் போதிக்கப்படவும் ஒத்தாசை செய்யப்படவும் வேண்டுமென விரும்புகிறேன்". "ஏன் குருநாதன் எங்களை (என்னைப் போன்றவர்களை) யெல்லா மேற்றுக்கொண்டு எங்களுக்குக் கற்பிக்கக் கூடாது?" என நினைக்கிருர்கள். இவ்விதம் நினைப்பது நியாயமன்று, ஏனெனில், இவ்விதமுள்ள ஒருவனை அப்பியாஸியாக வேற்றுக்கொண்டு அவனைச் சீர்திருத்தும விஷயத்தில் தன் சக்திகளைச் செலவழிப்பதைக் குருநாதன் இலாபகரமாக வெண்ணமாட்டார். புதிதாகச் சேர்ந்திருக்கும் அப்படிப்பட்ட வொருவனுக்கு முன்னமேயே அங்கத்தினராகச் சேர்ந்து பழகிவரும யாராவதொருவர் இவ்விஷயங்களைக் கற்பித்தல் கூடும.

குருநாதனை இதைச் செய்யும்படி விரும்புவது ஒரு கல்லூரி (காலேஜி) யின் தலைவரையாவது, ஒரு தேசத்துக் கல்வி

யிலாகாவின் தலைவரையாவது, அரிச்சுவடி படிக்கும் பைய னுக்குப் பாடஞ் சொல்லிக்கொடுக்க விரும்புவதை யொக்கும். குருநாதன் ஏக காலத்தில் ஆயிரக்கணக்காகச் சேர்ந்துள்ள மனிதர்களின் கூட்டத்தைப்பற்றிய விஷயங்களில் நம் அறிவுக் கெட்டாத விதமாகப் பிரவிர்த்தித்துக் கொண்டிருக்கிறார்; ஆகையால் நம்மெல்லோருக்கும் மொத்தத்தில் நன்மை பயப் பதைக் கவனிக்கவேண்டுமே யொழிய நம்முடைய சுயநல த்தைமட்டும் கருதக்கூடாது. ஒரு பெரிய தேசத்தின் கல்வி இலாகாவுக்குத் தலைமையாயிருந்து நடத்தும் உத்தியோகஸ்த னொருவன் தன்னுடைய காலத்தை, ஒரு சிறு பையனுக்கா வது அல்லது இருபது முப்பது சிறு பையன்களுக்காவது பாடஞ் சொல்லிக்கொடுப்பதில் செலவழித்தல் முற்றிலும் மதியீனமாகும். குருநாதன் முன்னேற்றத்திற்கு வரக்கூடிய ஒருவனைப் பார்த்தால் அவனைப்பற்றித் தன் மனதில் ஒருவித மாகக் கணக்கிடுவாரென்று நாம் எண்ணலாம். குருநாதன் தன் மனதில் அவனைப்பற்றி அடியிற்கண்ட விதமாகத் தனக்குள் தானே சொல்லிக்கொள்வாரென்று அவரிடம் மரியாதையு டன் நினைப்போம். "நான் அவனை ஏற்றுக்கொண்டால் அவன் விஷயத்தில் இவ்வளவு நேரத்தைச் செலவழிக்கவேண்டும். அந்தக் காலத்திற்குள் நான் இவ்வளவு வேலையை உலகத்திற்கு விஸ்தாரமாகச் செய்யலாம்; ஆனால் குறிப்பிட்ட இன்ன நிலை மைக்கு அவனைக் கொண்டுவந்தால் நான் அவன் விஷயத்திற் செலவழித்த காலத்திற் செய்திருக்கக்கூடிய வேலையையும் விட, நாளடைவில், அதிகமான வேலைகளைச்செய்ய அவன் சக்தியுடையவனா யிருப்பான். ஆகையால் அவன் ஒரு நல்ல முதல் (வட்டியைக் கொடுக்கக்கூடிய ஊதியம்)."

ஏற்றுக் கொள்ளப்படுதலானது அபேக்ஷகள் அடைந் திருக்கும் பக்குவத்தை முற்றிலும் பொறுத்ததாக விருக்கி றது. பின்னால் அவன் எவ்வளவு வேலையைச்செய்ய சக்தி யுள்ளவனா யிருப்பானென்பது மட்டுமல்ல; ஆனால் இப்போது இவ்விடத்தில் அவனை எவ்வளவுதூரம் உபயோகிக்க முடியும்

என்கிற கேள்வியும் கூட உண்டாகிறது. இங்கு இதற்கோர் உதாரணத்தை யெடுத்துக்கொள்வோம். குருநாதன் அவருடைய வேலைகளில் இத்தூலப் பிரபஞ்சத்தில் வெளிப்படையான ஓர் காரியசித்தியை விளைவிக்க எண்ணுகிறார். அதாவது, ஒரு பட்டணத்திற்குத் தன் சூக்ஷ்ம சக்திகளை அனுப்ப நினைக்கிறதாக வைத்துக்கொள்வோம். அரூப அல்லது பிரக்ஞான பூமிகளில் அவர் வேலை செய்துகொண்டிருக்கிறார். எப்படி ஸ்தூல உலகத்தில் இவ்வேலையைச் செய்து முடிப்பது? இதற்கு அநேக வழிகளிருக்கின்றன. அவர் பிரக்ஞான பூமியிலிருந்துகொண்டே தன் சக்திகளைக் குறித்த இடத்திற்கு நேரே, அவ்வரூப உலகத்திற் செலுத்தி அங்கிருந்து இடையேயுள்ள சூக்ஷ்ம உலகங்களின் வழியாக ஸ்தூல உலகத்திற் சேரும்படி பலமாக அழுத்தி அச்சக்தியை அனுப்பலாம். இவ்விதம் செய்வதில் குருநாதன் சக்திகள் அதிகமாகச் செலவழியும். அல்லது தாரத்திலுள்ள ஒரு சிஷ்யனைத் தானிருக்கும் பிரக்ஞான பூமியில் கருவித்து அவனுக்குச் சக்திகளைக் கொடுத்து குறிப்பிட்ட இடத்திற்கு அவனைச் சூக்ஷ்ம சரீரத்திற் போகச்செய்து அவ்விடத்தில் அச்சக்திகளை ஸ்தூல சக்திகளாக மாற்றிக்கொள்ளும்படி செய்யலாம். இதில் குருநாதன் சக்திகள் அதிகமாகச் செலவழியா. ஆனால் சிஷ்யனுடைய சக்திகள் வேண்டிய அளவுக்கு அதிகமாகச் செலவழிய நேரிடும். இதையெல்லாம் விட்டு மற்றொன்றை யோசிப்போம். அதாவது அந்தப் பட்டணத்தில் குருநாதனுக்கு, இப்படிப்பட்ட பெரிய வேலைகளைச் செய்வதற்குப் பொருத்தமாயுள்ள ஒரு வித்யார்த்தி (Student) இருப்பதாக வைத்துக்கொள்வோம்; அப்போது குருநாதன் என்ன செய்வாரெனில், மேற்சொன்ன பிரக்ஞான பூமியிலிருந்துகொண்டே அவனை யொரு கால்வாயாக (மார்க்கமாக)க்கொண்டு அவனுடைய சூக்ஷ்ம சரீரத்தில் தன்னுடைய சக்திகளைச் செலுத்தி, அச்சூக்ஷ்ம சக்திகளைத் தூலசக்திகளாக மாற்றிக்கொள்ளும்படி செய்து அக்காரியத்தை நிறைவேற்றச்செய்வார். வித்யார்த்தியாயிருப்பவனுடைய ஜீவன் குருநாதன் தனக்களித்திருக்கும் கண்

ணியத்தை அறிகிறபடியால் அவன் உடனே அவர் எண்ணப் படி அக்காரியத்தை முடிப்பான். ஆனால் குருநாதன் ஜீவனுக் குக் கொடுத்திருக்கும் கௌரவம் அஜ்ஜீவனுடைய ஸ்தூலதே கத்தின் மூளை சம்பந்தப்பட்ட அறிவுக்குத் தோற்றியிராது. அப்படி யிருந்தபோதிலும், தான் எப்படியோ மேன்மையை யும், எதிர் பார்த்திராவண்ணம் சந்தோஷத்தையும் அடைந்தி ருப்பதாக அவ்வறிவுக்குப் புலப்படும். அவ்வித உணர்ச்சி கள் வித்தியார்த்தி யொருவனுக் குண்டாகும்போது அவன் தன் மூலமாக உலகத்துக்குச் சிறிது அருள் அனுப்பப்படுகிற தென்று உறுதி கொள்ளலாம். ஒரு வித்யார்த்தி காலையிலெ ழுந்திருக்கும்பொழுது அதிக மனச்சமாதானத்தோடும் ஆனந் தத்தோடு மெழுந்திருப்பானுபின் அவன் தன் மூலமாகச் சில நன்மைகள் செய்யப் பட்டிருக்கின்றனவென்று அறிந்துகொள் ளலாம்.

இவ்விதமாக அடிக்கடி உபயோகப் படுத்தக்கூடிய ஒரு வனைக் குருநாதன் கவனிக்கிறார் என்றும், அவன் அவரால் ஏற் றுக்கொள்ளப் படக்கூடுமென்றும் தெரிந்துகொள்ளலாம். மனி தர்கள் துரதிருஷ்டகரமாக, குருநாதன் தங்களை உபயோகிக்க முடியாத நிலைமைகளிற் செய்துகொள்ளுகிறார்கள். அவ்வித மனிதர்க ளிருக்குமிடத்திற்குச் சமீபத்திற் செய்யப்படவேண் டிய வேலைகளுக்காக குருநாதன் அவர்களை நோக்கும்போது அவர்கள் பிரயோஜனப் படுகிறதில்லை. ஆகையால் அப்பாக்கி யத்தைப்பெற வேறு யாரையாவது அவர் தேடவேண்டி யிரு க்கிறது. குருநாதனுடைய காரியங்களுக்கு ஒரு வித்தியார்த் தியை உதவாமற் செய்யும் காரணங்கள் யாவை யென்பதைப் பற்றி கவனிப்பதுடன், ஏன் சில சமயங்களில் அவ்வித நிலைமை கள் உண்டாகின்றன வென்பதையும் அவைகளைச் சீர்திருத் திக்கொள்ளும்பொருட்டுக் கவனிப்போம்.

முதலில் நமக்குள்ள பலவித சரீரங்களும் அவைகள் ஒன் றிற்கொன்று எவ்விதத்தில் சம்பந்தமுடையனவா யிருக்கின் றன வென்பதை ஆராய்வோம். நாம் அவைகள் ஒவ்வொன்

றையும் பிரத்தியேகமான உலகங்களிற் தொழில் செய்துகொண்டிருக்கும் தனித்தனி சரீரங்களென்று நினைப்பிலும் செய்கையிலும் கொண்டு நடப்பதுமன்றி அவைகளெல்லாம் ஒன்ருகக் கலந்திருக்கின்றன வென்பதை முற்றிலும் மறந்துவிடுகிறேம். பிரகிருதிக ளெல்லாவற்றையும் உற்றுப் பார்க்குமிடத்து அவைகளுக்கெல்லாம் மூலம் ஒன்ருகவே யிருக்கிறது. ஸ்தூல உலகத்தில் தோற்றப்படும் வஸ்துக்களெல்லாம் ஒரேவிதமான ஸ்தூல அணுக்களால் உண்டாக்கப்பட்டவை; ஆனால் அவைகள் ஒன்றற்கொன்று வித்யாசமாகத் தோற்றப்படுவதற்குக் காரணம் அவ்வணுக்களை அமைத்த ஒழுங்காகவே யிருக்கிறது. அதுபோல பூலோக முதல் சத்யலோக பர்யந்தமுள்ள எல்லா பிரகிருதிகளும் ஒரேவிதமான அணுக்களால் அமைக்கப்பட்டுள்ளன. ஒரு உலகத்தின் பிரகிருதிக்கும் மற்ருருலகத்தின் பிரகிருதிக்கும் வித்யாசம் அணுக்களமைக்கப்பட்டிருக்கும் ஒழுங்கின் மாறுபாட்டைத்தவிர வேறென்றுமில்லை. ஆகையால் நம்முடைய பலவித சரீரங்களும் (மேற்சொன்னபடி அணுக்களின் அமைப்பில்) ஒன்றுக்கொன்று ஊடுருவிக் கலந்துள்ள ஒரே சரீரமெனவும், அவைகளின் பாகங்களெல்லாம் ஒன்றுக்கொன்று நெருங்கிக் கலந்திருக்கின்றனவென்றும் சொல்வது உண்மையில் சரியானதாக விருக்கிறது.

நம்முடைய ஸ்தூல சரீரத்திலிருந்து இதற்கொரு திருஷ்டாந்தத்தை யெடுத்துக்கொள்வோம் நாம் பார்க்கிற இத்தூல சரீரமானது மாமிசத்தாலாகிய ஓருருவமாயினும், அது நம் பார்வைக்கு முற்றிலும் ஒரு கடின பதார்த்தத்தாற் செய்யப்பட்டிருப்பதுபோற் ருேன்றுகிறது. அதன் எந்தப்பாகத்திலாவது சொற்ப காயம் ஏற்பட்டாலும்கூட உடனே இரத்தத்தைச் சிந்தும்படி இவ்வுடல் முழுமையும் திரவபதார்த்தமும் ஊடுருவிப் பரவியிருக்கிறதென்பதை நாமறிவோம். அவ்விதம் பரவியிருக்கும் இரத்தத்தை அவ்வவ் விடங்களிலேயே அப்படியே வைத்துவிட்டு மாமிசத்தைமட்டும் தேகத்திலிரு

ந்து எடுத்துவிடக் கூடுமாயின் (கூடாதகாரியம்) முற்றிலும் இரத்தத்தாலாகிய ஒரு சரீரத்தையும், அவ்விரத்த சரீரத்தில் ஊடுருவிப் பரவியிருக்கும் காற்றைமட்டும் அப்படியே யிருக்கச்செய்து இரத்தத்தைமட்டும் எடுத்துவிட்டால் காற்றுலாகிய ஓர் சரீரத்தையும், அக்காற்றுலாகிய சரீரத்தில் வியாபித்திருக்கும் ஆவியைமட்டும் வைத்துவிட்டு காற்றை எடுத்துவிட்டால் ஆவியாலாகிய ஓர் சரீரத்தையும் நாம் அடையக்கூடியதாக, இவ்வுடல் முழுவதும் மாமிசம், இரத்தம், காற்று, ஆவி ஆகிய இவைகள் ஓதப் புரோதமாகக் கலந்திருக்கின்றன. இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்துதான் ஒரு ஸ்தூல உடலாகிறது. இவ்வுடலிற் கலந்திருக்கும் எந்தப் பதார்த்தத்திற்காவது ஒரு கெடுதியைச் செய்யவேண்டுமானுல் மற்றவைகளுக்கும் கெடுதி யுண்டாக்காமற் செய்யமுடியாது. அதுபோலவே ஸ்தூலதேகம், சூக்ஷ்மதேகம், காரணதேகம் என்று நாம் சொல்லுகிற இக்கோசங்களெல்லாம் ஒன்றற்கொன்று ஊடுருவிக் கலந்திருக்கிறபடியால் அவைகளிலேதாவதொன்றைமட்டும் மற்றவைகளுக்குச் சம்பந்தமன்றியில் இயங்கச் செய்ய முடியாது.

ஆகையால் குருநாதனுடைய அருள் சக்திகள் பாய்வதற்குத் தானொரு வாய்க்காலாக அமைய வேண்டுமென்று நினைக்கும் மனிதன், தன்னுடைய எல்லாச் சரீரங்களையும் ஒருமிக்கச் சாந்தமாயும் பொருத்தமாயுமுள்ள நிலைமைகளில் வைத்துக்கொள்ளவேண்டும். அவ்வித நிலைமையைத் தடுக்கும் எதுவும் இச்சரீரங்களேதாவதொன்றி லுண்டாளுலும் அது குருநாதனுடைய வேலைகளைத் தடைப்படுத்தும்.

மிகவும் சாதாரணமாயுள்ள தடை தொல்லை; அதாவது மனச்சஞ்சலம். தொல்லைக்காவது கவலைக்காவது இடங்கொடுக்கும் மனிதன், தனது மனோசரீரத்துக்கு ஒரு அமைதியற்ற நிலைமையை யுண்டுபண்ணுகிறுன். சூக்ஷ்ம திருஷ்டியால் நோக்குமிடத்து அச்சரீரமானது புயல்காற்றால் அலைக்கப்பட்ட ஓர் சமுத்திரத்தை ஒத்ததாக விருக்கிறது. குருநா

தன் இவ்வித சரீரத்தை உபயோகிக்க வேண்டுமானால், உப யோகிப்பதற்குமுன் அதை ஒரு சாந்தமான நிலைமைக்குக் கொண்டுவரவேண்டும். அவ்விதம் செய்ய மேற்சொன்ன விதமாயுள்ள சமுத்திரத்தை அமைதியாகச் செய்வதற்கு எவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அவ்வளவு சிரமத்தை எடுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் சிரமத்தை எடுத்துக்கொண்டு தன் சக்திகளைச் செலவிட்டு ஒருவனைத் தயார் செய்வதைக்காட்டிலும் முதலிற் கூறியபடி அவர் தன் சக்திகளைச் செலவழித்துத் தானே நேரில் அக்காரியத்தை முடித்துவிடலாம். ஆகையினாலேயே அவர் இவர்களை விட்டுவிட்டு வேறு வழியைத் தேடுகிறார்.

மிகவும் சாதாரணமாயுள்ள மற்றொரு தடை சுயநயம் கருதல். எவனொருவனுடைய எண்ணமானது தன்னைப்பற்றி நினைப்பதிலேயே செலுத்தப்படுகிறதோ அவனிடத்தில் சக்திகளெல்லாம் வெளிப்பரவாமல் உள்நோக்கியே செல்கின்றன. அப்படிப்பட்ட மனிதனை குருநாதன் உபயோகிக்க வேண்டுமானால், நீண்டகாலமாக அவனிடம் உள்நோக்கியே சென்றுகொண்டிருக்கும் சக்திகளைத் தடுத்து அச்சக்திகள் வெளிநோக்கிச் செல்லும் வழக்கத்தை முதலில் அவனிடமுண்டாக்க வேண்டும். ஆகையா லிம்மனிதனையு முபயோகிக்க முடியாதென்று நன்கு விளங்குகிறது. எவனொருவனிடமிருந்து எல்லாச் சக்திகளும் மற்றவர்களைநோக்கி வெளிப்பரவுகின்றனவோ அவனைத்தான் குருநாதன் விரும்புவார். ஏனெனில் அவனிடமிருந்து சக்திகளெல்லாம் வெளிப்பரவிக் கொண்டிருப்பதால், குருநாதன் தன்னுடைய சக்திகளை அவனிடம் செலவிட்டு அம்மனிதனிடமிருந்து வெளிக்கிளம்பிப் பரவிக்கொண்டிருக்கும் சக்திகளுக்கு அதிக பலத்தைக்கொடுக்கச் சுலபமாக விருக்கும்,

மற்றோரம்சம் என்னவெனில், ஒரு மனிதன் விகாச முறையில் சிறிதளவும் தேர்ச்சியடையாமல் ஆதி நிலைமையிலிருந்தாலொழிய சுயநயம் கருதும் நிலைமையில் எப்போதும்

தடைகள் ஏற்படக் காரணங்க ளுண்டாகுமென்பதே ஜீவாத்மா (Ego) வானது விகாசமுறையின் கிரமத்தைச் சிறிது அறிந்திருப்பதால் அதன் எண்ணம் அம்முறைக்கு ஒத்ததாக விருக்கிறது. மேலும் தன்னுடைய சாயை அல்லது பகுதியாகிய ஸ்தூல பிரபஞ்சத்திலுள்ள ஜீவனை (Personality) தன்னால் கூடியமட்டும் விகாஸமுறைக்கு ஒத்தவழியில் நடத்துகிறது. ஆனால் ஸ்தூல தேகத்தில் வியவகரிக்கும் ஜீவன் கட்டுக்கடங்காமற் செல்லும்போழ்து அச்செய்கை ஜீவாத்மாவின் எண்ணத்துக்கு மாறாக விருக்கிறது. அஜ்ஜீவாத்மா அதை (Personality) நடத்துதற் கமைந்துள்ள கடிவாளங்கள் இன்னம் உறுதியடையாம விருப்பதால் அக்கடிவாளத்தை அதிகமாக இழுத்துப்பிடிக்க முடிகிறதில்லை. அவ்விதம் செய்தாற் கடிவாளம் அறுந்துபோகுமென்று ஆத்மாவுக்கு நன்றாகத் தெரியும்.

அப்படி அறுந்துபோய்விட்டால் ஜீவனுடைய நிலைமை மிகவும் கஷ்டமானதாகிவிடும். இவ்விதம் சிற்சில சமயங்களிற் சம்பவிப்பதுமுண்டு. பலனைத் தரக்கூடிய தேர்ச்சியை ஜீவன் அடையவேண்டுமானால் ஜீவாத்மா அதைப் பலமுள்ளதாகச் செய்யவேண்டும். அது அவ்விதம் பலமுள்ளதாகச் செய்யப்படும்போது தனக் கேற்பட்டிருக்கும் பலத்தால் ஜீவாத்மாவுக்குச் சம்பந்தமில்லாத மார்க்கங்களிற் செல்லுகிறது. எங்கே சுயநலம் கருதுதல் இருக்கிறதோ அவ்விடங்களிலெல்லாம் அந்தரங்கத்தில் ஜீவாத்மாவுக்கும் ஜீவனுக்கும் முரண் ஏற்படுவதால் இத்தன்மைய மனிதர்களை உபயோகிக்கக் குருநாதனுக்கு சாத்தியப் படுகிறதில்லை.

கர்வம் அகந்தை ஆகிய இவைகளும் சுயநயத்தைச் சார்ந்தவைகளே. அவைகளும் சக்திகளை வெளிப் பரவவிடாமல் உள்நோக்கியே செல்லும்படி செய்கின்றன. அகந்தையுள்ள மனிதன் பிறர்க் குதவிபுரியச் சந்தர்ப்பங்களைக் கவனிப்பதில்லை யாதலால், அக்கொள்கைக் கெதிரிடையானதும், உதவி புரிவதற்கும் கைங்கர்யங்கள் புரிவதற்கும் குருநாதனால் அனுப்

பப்படுகிறதுமான உணர்ச்சிகள் தன்னைவந்தடையாமல் தடுத்துவிடுகிறான்.

நாம் அடிக்கடி காண்பதாகிய முன்கோபம், அதாவது சீக்கிரத்தில் கோபங்கொள்ளுந் தன்மை, மற்றொரு தடை. மனச்சஞ்சலமுள்ள மனிதனுடைய மனோமய கோசம் இடைவிடாது அலைக்கப்படுவதுபோல, இம்முன்கோபமுள்ள மனிதன் சூக்ஷ்ம சரீரமும் கலக்கத்தை யடைந்துகொண்டிருக்கும். சாந்தம், சுவஸ்தம் ஆகிய நிலைமைகளி லுள்ளவனுடைய சூக்ஷ்ம சரீரமும் சாதாரணமாக, மேலான மநச்சலனத்துக்குப் பொருத்தமா யுள்ளதும் பிரத்தியேகமானதுமான ஐந்தாறுவித இயக்கங்களை மட்டும்தான் காண்பிக்கவேண்டும். அன்றியும் ஸ்தூல சரீரத்தின் முக்கிய பாகங்களாயுள்ள சிலவற்றிற்கு (ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுக்கு)ச் சம்பந்தப்பட்ட சுழல்கள் (சக்கரங்கள்) மட்டும்தான் இதில் காணப்படவேண்டும். ஆனால் இக்கோபமுள்ள ஒரு மனிதனுடைய சூக்ஷ்ம சரீரத்தில் ஐம்பது அறுபது அல்லது நூறு சிறிய சுழல்கள் காணப்படும். அவைகளொவ்வொன்றும் பார்வைக்கு இரணங்கள் போலவும், அவைகளைச் சுற்றிலும் வெறுப்பைக் கொடுக்கக்கூடியதும், விரும்பத் தகாததுமான பலவித வர்ணங்கள் நிறைந்த இடங்களுடன் காணப்படும். இச்சுழல்களொவ்வொன்றின் வழியாகவும் அம்மனிதனுடைய சக்திகளெல்லாம் வெளியே போய்விடுவதால் அவன்தான் பலக்குறைவையும் களைப்பையும் அடைவதுமல்லாமல் தன்னைச் சுற்றிலும் ஆரோக்கிய மற்றதும் கலக்கத்தை கொடுப்பதுமான சக்திகளையே பரவச்செய்கிறான்.

அவ்வித மனிதனிடம், குருநாதன் வேலையைச் செய்வதற்குச் சக்திகள் ஒன்றுமில்லாமற் போய்விடுகிறது. அவனடைந்திருக்கும் சீர்குலைந்த நிலைமையை தன் சக்தியால் குருநாதன் திருத்தினாலும்கூட அவன் துவாராக அனுப்பப்படும் சக்திகளில் அவனிடமுள்ள கோபகுணம் கலந்து அதைக் கெடுத்துவிடும். மூர்க்கமான அவசரமே மிகுந்திருக்கும் இந்நூற்று

ண்டில் ஜீவிப்பவர்களாகிய நமக்குச் சீக்கிரத்தில் கோபங்கொள்ளுதலாகிய இத்தன்மையை நீக்குவது கஷ்டமென்று நான் நன்றாயறிவேன். தற்கால வாழ்நாட்களி லுண்டாகும் அவசரமும் பொறுப்பும் சரீரத்துக்குத் தளர்ச்சியை யுண்டாக்கி விடுகின்றன. அத்தளர்ச்சியானது இவ்விதக் கெட்டகுணமாகிய கோபமாக வெளிப்படுகிறது. ஜனங்கள் அதிகமான சிரமத்தை யடைவதால், உண்மையில் பிரயோஜனமற்ற அற்ப விஷயங்களிலும்கூட அடிக்கடி ரோசத்தை யடைகின்றனர். அவ்விதம் கலக்கத்துக்கு இடம் கொடுக்கக்கூடாது. இவ்வித உணர்ச்சியாயுள்ள ஒருவன் அவனைப் பிறர் பேசும் வார்த்தைகளினாலாவது பத்திரிகைகளில் அவனைப்பற்றி எழுதப்படும் பொய்க் கட்டுப்பாடான விஷயங்களினாலாவது அதிக சஞ்சலத்தை யடைகிறான். மனச்சமாதானமும் விவேகமுமுள்ள ஒருவனுக்கு இவ்விஷயங்கள் கணப்போதிய மனவருத்தத்தையும்கூட உண்டுபண்ணமாட்டா.

மேலும் அடிக்கடி மனத்தளர்ச்சி யடையும் ஒரு மனிதன் அந்நிலைமையிலிருக்கும்போது ஒரு காரியத்திற்கும் உபயோகப்படமாட்டான். "திருஷ்டிக்குக் கோசரமாகும் மனிதன் கோசரமாகாத மனிதன்"(Man: Visible and Invisible) என்னும் புத்தகத்தில் வரையப்பட்டிருக்கும், மனச்சோர்வை யடைந்த ஒரு மனிதனுடைய சூக்ஷ்ம சரீர படத்தைப்பார்த்தால் அவன் தன்னை முற்றிலும் ஒரு கூட்டால் (கவசத்தால்) மூடிக்கொண்டிருப்பதைக் காணலாம். நன்மையைப் பயக்கத்தக்க உணர்ச்சிகள் அவனை வந்தடையாமல் இக்கவசம் தடைசெய்யும். இவ்வுணர்ச்சிகள் அக்கூட்டைத் தகர்க்கும் வலிமையுள்ளதாயினும் அதைப் பிளப்பதால் அக்கூட்டிலுள்ள அசுத்தங்கள் இச்சக்திகளோடு கலந்து இவைகளைக் கெடுத்து விடும். அன்றியும் அவன் பூண்டிருக்கும் சூக்ஷ்ம கவசத்தை மேற்சொன்னவிதம் முரட்டுத்தனமாய் உடைப்பதால் சில சமயங்களில் அவனுடைய சூக்ஷ்ம தேகமும் தகர்ந்துபோய் மிக்க துன்பத்தை விளைக்கும். மேற்சொன்ன விஷயங்கள்

பொருளில் அதிக ஆசையுள்ளவனுக்கும் பொருந்தும். ஆனால் அவன் சூக்ஷ்ம சரீரத்தில் பூண்டிருக்கும் கவசத்தின் நிறம் மட்டும் வித்தியாசமாக விருக்கும்.

இம்மார்க்கத்திற் கேற்பட்டிருக்கும் மற்றொரு தடை, பேராசை. ஆனால் இச்சிக்கப்படும் விஷயம் யோக்கியமானதாக விருந்தால் உலக வியாபாரத்தி லுள்ளவனுக்கு அது கூடாதென்று நான் சொல்லவில்லை. ஒரு வக்கீலாவது டாக்டராவது தான் கைக்கொண்டிருக்கும் தொழிலால் மற்றவர்களுக்கு நன்றாக உதவிபுரியும்படி தான் மிகவும் சாமர்த்திய சாலியாக ஆகவேண்டுமென்று நினைப்பது நல்லதேயொழியக் கெட்டதன்று. ஆனால் சதாகாலமும் அதையே நினைத்துக் கொண்டிருப்பவனை அவ்வெண்ணங்கள், நல்ல உணர்ச்சிகள் அவன் மூலமாக வெளிப்படவொட்டாமல் தடுக்கும். இவ்விதவெண்ணத்தைப் பாபமென்று, சொல்லக் கூடாதாயினும், எல்லா சரீரங்களிலும் ஒருவிதமான கெட்ட சலனசக்தி தங்குவதற்கு இடம் கொடுப்பதாக விருக்கிறது. குருநாதன் அவன் மூலமாக அனுப்ப நினைக்கும் சக்திகளின் தன்மைக்கு அது விரோதமாயுள்ளது.

விஷயானந்தை (சிற்றின்ப சுகம்)யானது இம்மார்க்கத்திற்கு முற்றிலும் விரோதமாயுள்ள தடை. அது முழுவதும் துரெண்ணத்தோடு கலந்ததாக விருக்கலாம். அல்லது நாம் தாண்டி வந்திருக்கும் மிருக வர்க்கத்திற்குச் சம்பந்தப்பட்ட உலகத்தின் பழைய வாசனையாக விருக்கலாம். எப்படி யிருந்தபோதிலும் இந்த இரண்டும் ஒரு தொடர்ந்த சல்லியத்தைக் கொடுத்து அதன் பயனாக சூக்ஷ்ம சரீரங்களில் உசிதமற்ற சலனங்களை உண்டாக்கி முன் சொன்னவிதம் மேலான உணர்ச்சிகளைத் தடைப்படுத்துகின்றன.

குருநாதனால் அழைக்கப்படுவதற்குத் தயாராக விருக்க வேண்டுமென விரும்புகிறவர்கள் இத்தடைகளையெல்லாம் நீக்கிக்கொள்ளவேண்டும். எவ்விதம் தங்களைச் சீர்திருத்திக் கொ

ள்ளுகிறதென்பதைத் தெரிந்துகொள்வது சுலபம். ஆனால் அந்தப்படி செய்வது கடினம். பிரஹ்மக்ஞான மார்க்கப் புத்தகங்களைச் சாதாரணமாகப் படிப்பது கஷ்டமல்ல. சிறிது முயற்சி யெடுத்துக்கொண்டால் தலங்கள், அதன் உட்பிரிவுகள், ஆகிய இவைகளைப்பற்றியும், வட்டங்கள், கோளங்கள், கிரகசங்கிலிக் கோவைகளாகிய இவைகளைப்பற்றியுமுள்ள ஏராளமான விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம். இதுமட்டும் போதாது, பின்னைவேண்டிய தென்னவெனில், அனுபவத்தில் கொண்டு வரப்படவேண்டிய நிலைமை, அதாவது தயவும் விவேகமும் கூடிய ஒரு சாந்த நிலைமை. என்னுடைய செவிலித் தாயொருத்தி யிருந்தாள், அவள் ஏதாவது தவறுதல்கள் ஏற்படும் பொழுதெல்லாம் "அதைப்பற்றிக் கவலைப்படாதே, சுமார் நூறு வருஷம்போனால் எல்லாம் ஒன்றாகத்தா னிருக்கும்," என்று சொல்லுவது வழக்கம்.

இவ்வார்த்தைகளை ஆராய்ந்து பார்த்தால், அது உண்மையென்பது நன்கு புலப்படும். ஏதாவது ஒரு விசனமாவது நோயாவது வந்தால் அந்தச்சமயம் அது மிகவும் கஷ்டமாகத் தோன்றுகிறது. ஆனால் நீ சுவர்க்கலோகத்தில் சுகானுபவங்களை அடைந்து கொண்டிருக்கும்போது நினைத்துப் பார்த்தால் அவைகளைப்பற்றி என்ன எண்ணுவாய்? ஒருவன் உன்னைப்பற்றி எதையாவது அவதூறாகச் சொல்லுகிறான்; ஒரு நூறு வருஷங்கள் கழிந்தபிறகு நீ அதைப்பற்றி நினைப்பாயாயின் உனக்கு அதுவிஷயமானதாகவே தோன்றாது. இப்போதும் கூட சொல்லுகிறவனைத் தவிர்த்து சொல்லப்படுகிறவனுக்கு அதனால் ஒரு கெடுதியுமில்லை. அப்படி யிருக்கும்போது நீ யேன் அதைப்பற்றி உன்னைத் தொல்லைப் படுத்திக்கொள்ள வேண்டும்? ஒருவன்பேரில் யாராவது குறைகூறில் அவன் கோபங்கொள்வது சகஜமாக விருக்கிறது. அது கெட்டவழக்கமே. இப்பழக்கம் சூக்ஷ்ம சரீரத்திற்குக் குழப்பத்தைக் கொடுக்கிறது. இது மதியீனமான பழக்கம். நீயேன் அவ்வழக்கத்தை அநுசரிக்கவேண்டும்? ஒருவன் பொய்யான வார்த்தைகளையும், பிரிய

மில்லாத வார்த்தைகளையும் பேசும் துஷ்டனுயிருப்பானுயின் அவன் செய்த தீங்கின் பலனை அவனே அநுபவிக்கிருன். நாமேன் அனுவசியமாக நம்முடைய சூக்ஷ்ம சரீரங்களைக் கலக்க மடையச்செய்து அதனுல் துன்பத்தை அனுபவிக்க வேண்டும்?

நாம் மற்றவர்களுக்குச் செய்வதை (நன்மை தீமைகளை) அதிகமாகக் கவனிக்கவேண்டும். ஏனெனில், அவைகள் நம்மை உத்தரவாதிகளாகச் செய்கின்றன. ஆனுல் பிறர் நமக்குச் செய்வதைப்பற்றி, அதாவது நமக்கு அந்நியமாயிருந்து வரும் கஷ்ட சுகங்களைப்பற்றிக் காலிபோர்னியா தேசத்து தத்துவ சாஸ்திரி ஒருவர் சொன்னபடி, "ஒன்றுமில்லாம லிருப்பது பெரியகாரியம்; அதிகமாயிருப்பது விஷயமன்று" என்று பொறுமையுடன் சொல்லவேண்டும்.

பிறர் நம்மைத் தூஷித்தாலும் சரி, பூஜித்தாலுஞ் சரி, அதைப்பற்றி வருத்தத்தையாவது சந்தோஷத்தையாவது சிறிதும் அடையாமல் பிறர்க் குதவிபுரியச் சமயத்தை சர்வ ஜாக்கிரதையுடன் எதிர் பார்த்திருக்கவேண்டும். நாம் சர்வத்ர சகோதர பாவம் என்னும் பீடத்தின்மேல் நின்றுகொண்டே எல்லாவற்றையும் நோக்கி அவைகளிலுள்ள நற்குணங்களை மட்டும் கவனிக்கவேண்டும். ஏனெனில், நற்குணங்களை யூன்றிப் பார்ப்பதால் அவைகளை யுறுதிப்படுத்தி அதிக நன்மைகளை விளைவிக்கச் செய்யலாம்.

மேற்சொன்ன ஒழுங்குகளின்படி நடக்கிறவன் சீக்கிரத்தில் தேர்ச்சியை யடைவான்; ஏனெனில், நற்கருமங்களைப்புரிய அவனிடம் ஏராளமான சக்திகளிருக்கும். உலகத்திலுள்ள சாதாரண மனிதன் தன் சக்திகளெல்லாவற்றையும் தன்னைப் பற்றிய வுணர்ச்சிகளில், அதாவது கோபங்கொள்ளுதல், மனவருத்த மடைதல், பொறுமைபடுதல், எரிச்சற்படுதல், பேராசைப்படுதல் முதலியவைகளிற் செலவழித்து விடுகிருன்; ஆகையால் சுயநயமற்ற நற்காரியங்களைச் செய்ய அவனிடம்

சக்தி மிச்ச மொன்றுமில்லை. எவனொருவன் தன்னை மறக்கிறானோ அவனைத்தான் குருநாதன் தன் ஞாபகத்தில் வைத்துக்கொள்வார். இவ்விதமாகச் சிலவருடங்கள் அவன் உறுதியாகவும் தன்னை மறந்தும் உழைத்து வருவதைக் குருநாதன் பார்க்கிறார்.

அவன் பின்னும் முற்றிலுமே உறுதியாயிருப்பானென்று அவருக்குத் தோன்றினபோது, அப்பியாசி நிலைமைக்கு அவன் தகுந்தவனாவென்று அவனைப் பரிசோதிப்பார். முற்றிலும் தன்னால் அங்கீகரிக்கப்பட்ட சிஷ்யனொருவனைக் குருநாதன் தன்னுடன் அதிக நெருக்கமான சம்பந்தத்தில் வைத்துக்கொள்வதால் அவனடைந்திருக்கும் யோக்யதை அதிக உயர்வானதாகவிருக்கவேண்டும். ஆகையினாலேயே அவர் ஒருவனை நீண்டகாலம்வரை பரீக்ஷித்துப் பார்க்கிறார். குருநாதன் ஒருவனைத் தன்னுடைய ஒருபாகமாக வேற்றுக்கொள்வதற்கு முன், எந்தெந்த எண்ணங்கள் எந்தெந்த உணர்ச்சிகள் தன்னிடமிருக்க அவர் இடம்கொடுக்கமாட்டாரோ, அப்பேர்ப்பட்டதொன்று மவனிடமிருக்கக் கூடாது. அக்குணங்கள் அவர் வெறுக்கிறார் என்பதற்காகவல்ல, அவைகள் அவருடைய காரியங்களுக்குத் தடையாகும். சிலசமயங்களில் அங்கத்தினர்களிலொருவர் "நான் கைங்கர்யங்களைப் புரிவதற்கு மனபூர்வமான ஊக்கமுள்ளவனாகவும் கவலையுள்ளவனாகவுமிருக்கிறேன். அநேக வருடங்களாக அதன்பொருட்டு வேலைசெய்தும் படித்தும் வருகிறேன். ஏன் என்னைக் குருநாதன் அப்பியாசியாக ஏற்றுக்கொள்ளக்கூடாது," என்று சொல்லுகிறார்.

நாங்களவருக்குச் சொல்லக்கூடிய பதில் ஒன்றேதான். அஃதென்னவெனில், "என்னுடைய அருமையான ஐயா! நீர்தான் அதைத் தெரிந்துகொள்ளவேண்டியவர். குருநாதனுடைய காரியங்களைத் தடுக்கும் குணங்கள் உம்மிடத்தில் என்னவிருக்கின்றன? அன்றியும் 'குருநாதன் ஏன் ஒரு மனிதனை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்னும் கேள்விக்குப் பதிலாக,

என் அவர் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், அவ்வித உயர்ந்த கௌரவத்துக்கு அவன் பாத்திரனாகத் தகுந்த நற்குணங்கள் அவனிடமிருப்பன யாவை? என்றும் கேளும்," என்பதுதான்.

ஆனால் நான் மேற்சொன்னபடி ஒருமனிதன் சிலவருடங்கள்வரை நன்றாக வேலை செய்துவந்து அவன் பின்னும் அவ்வழியிலேயே உறுதியாகவும், பக்தியுள்ளவனாகவு மிருப்பானென்று நிச்சயமாக அவருக்குத் தோன்றினால், அப்போது ஒரு தினத்தில் தன் சிஷ்யர்களிலொருவரிடம் இன்ன மனிதன் நல்லவன், அவனை இன்றிரவு என்னிட மழைத்துவாவென்று சொல்லலாம். அவ்வார்த்தைகளின் கருத்தென்னவெனில், அவனை யேற்றுக்கொண்டு நன்றாகக் கவனித்துவருவாரென்பதுதான். அப்படிப்பட்ட அபேக்ஷகன் அம்மகான்களின் உபதேசம் பெற்றிருக்கும் ஒருவருடைய சமீபத்திலாவது அல்லது அவர்களால் அங்கீகரிக்கப்பட்ட சிஷ்யரொருவருடைய சமீபத்திலாவ திருந்துகொண்டிருக்கவேண்டும். அதனாலவன் அநேகவிஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம். அவர்கள் மூலமாக இடையிடையே குருநாதனிடமிருந்து தைரியத்தைக் கொடுக்கும் அரிய வார்த்தைகளைப் பெறலாம். தனக்கு மேலான நிலைமையிலிருக்கும் சிஷ்யர்களுடைய நடவடிக்கைகளைப் பார்த்துத் தானெவ்விதம் நடக்கவேண்டுமென்று தெரிந்துகொள்ளலாம். எவனொருவன் இவ்வழியில் வேலைசெய்துகொண்டிருக்கிறானோ, அவனுக்குத்தான் சமாசாரம் வருவது சகஜமேயொழிய அதைப்பற்றி நினைத்துக் கொண்டுமட்டு மிருப்பவனுக்குச் சமாசாரம் வருவதில்லை.

குருநாதர்கள் அநேகம்பேர் இருக்கிறார்கள். அபேக்ஷகர் சிலருக்கு ஒருவரிடமும் மற்றவர்களுக்கு வேறு சிலரிடமும் பற்றுதல் ஏற்படுகிறது. இதனாற் பாதகமொன்றுமில்லை. அவர்களெல்லோரும் மஹிமையுள்ளதாகிய ஒரே வேலையைத் தான் செய்துவருகிறார்கள். சிலவேளைகளில் அபேக்ஷகர் சிலருக்குக் குருநாதர்களிடத்துப் பற்றுதலேற்படாமற் குருநா

தருடைய முக்கிய சிஷ்யர்களாயிருப்பவர்களிடம் அதிகப் பற்றுதலுண்டாகிறது. சீஷர்களை அவர்கள் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்துத் தெரிந்துகொண்டிருப்பதால் தாங்கள் நேரில் பார்த்திராத குருநாதர்களைக் காட்டிலும் சீஷர்களிடமே அவர்களுக்கு அதிகப் பற்றுதலேற்படுகிறது. இனிவரும் ஜன்மங்களில் அம்முக்கிய சிஷ்யர் ஒரு சித்தராக (Adept) ஆகும்போது இவ்வபேக்ஷகன் அவருக்குச் சிஷ்யனாக அமைவான் என்பது பெரும்பாலும் அதன் கருத்தாகும். அம்முக்கிய சிஷ்யர் சித்தர் நிலையை அடைவதற்குமுன் இவ்வபேக்ஷகன் ஒருக்கால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்குப் பாத்திரனாய் விடுவானானால், அப்போது அம்முக்கிய சிஷ்யருடைய குருநாதன் இவ்வபேக்ஷகனை ஏற்றுக்கொண்டு தன் சிஷ்யன் சித்தனாகும் காலம்வரை கவனித்துவருகிறார். அக்காலத்தில் அவ்வபேக்ஷகனைச் சீர்திருத்துதற்கு வேண்டிய உபதேச மொழிகளையெல்லாம் தன் அன்புள்ள முக்கிய சிஷ்யன் மூலமாகவே அனுப்புவார்.

பிரஹ்மக்ஞான சங்கம் இவ்வுலகில் ஏற்படுத்தப்பட்டு 38 வருடங்களாகின்றன. நீண்டகாலம் அது சிரமப்பட்டுச் செய்துவந்த வேலைகளின் பயன் பெரும்பாகம் முன்னமேயே வெளியாயிருக்கிறது. அதனாலேற்பட்டிருக்கும் நன்மைகளை யாவரும் பிரத்தியக்ஷமாக அறிவார்கள். ஆனால் எல்லோருக்குமே அவ்வளவு பிரத்தியக்ஷமாகத் தெரியாத குப்தமான விஷயங்களிலும் அது பயனை உண்டாக்காமலிருக்கவில்லை. இச்சங்கத்தின் மூலமாக இதற் காதிகர்த்தர்களாயிருக்கும் மகான்களுடைய சாமீப்ய பதவியையும் சிலரடைந்து இதனாற் போதிக்கப்படும் விஷயங்களின் உண்மைகளையும் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். பிரஹ்மக்ஞான சபையை இவ்வுலகில் ஸ்தாபித்தவரும் பிரகாசத்தை நமக்குக் கொண்டுவரும் பொருட்டு மிகுந்த கஷ்டத்தை வகித்தவருமாகிய ஹெலிநாம்பாள் (Madame Blavatsky) அம்மையார், அது கருவிலிருந்து வெளிப்படும் சிரமத்தைமட்டும் பார்த்து அதனாலேயே திருப்தியை யடைந்துவிட்டார்கள். ஆனால் அவ்வம்மையார் செய்கையால் நன்மையை அடைந்தவர்களெல்லாரும், அவ்வம்மையார் நடந்த அம்மார்க்கத்தில் நடக்கும்படி அவர்களுடைய கீர்த்தியானது வரவர அதிகமாகுமென்று தோன்றுகிறது. (மோக்ஷ) மார்க்கத்தின் கதவு முன்போலவே எப்போதும் திறந்தே வைக்கப்பட்டிருக்கிறது. அதன் வழியாகச் செல்வதற்குத் தங்களைத் தயார்செய்து கொள்பவர்யாவர்?




# பிரஹ்ம வித்யா தீபிகை.

## முதல் அத்தியாயம்.

### பிரஹ்மவித்யா.

"உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே." கம்பநாடர்.



அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகரும் வேதத்தினால் ஸ்துதிக்கப்படுபவரும், ஸர்வக்ஞருமாகிய பகவான் மானவகோடிகளைப் படைத்து, அவர்கள் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை யடையும்பொருட்டு தேசகால வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு அநேக வழிகளைக் காண்பித்திருக்கின்றார். மனிதர் தத்தம் மதங்களையே அனுஸரித்து, அவைகளே உண்மையான மதங்களெனவும், தத்தம் மதங்களிலேயே மேலான தத்துவங்கள் காணப்படுகின்றனவெனவும், தம்தம் மதங்களில் தவிர வேறு எம்மதங்களிலும் உண்மையைக் காண்பதரிதெனவும், பிறமதத்தினர் அக்ஞான ஆழியில் அழுந்திக்கிடப்பதால் அவர்களுக்கு மோக்ஷம் ஸித்தியாதெனவும் எண்ணங்கொண்டு, உண்மைத் தத்துவங்கள் தங்களுக்கே தெரியுமென்ற அகந்தையால் பிறமதத்தினரை தூஷிக்கின்றனர். இவ்வாறு ஒவ்

வொரு மதத்தினரும் பிறமதத்தினர்மேல் வெறுப்பைக் காண்பிப்பதினால், மதவிரோதமானது சாதாரணமாக ஏற்படு கின்றது. ஆயினும் தந்தம் மத கிரந்தங்களைத் தீர ஆராய்ந்த பண்டிதர்கள் அவ்வித விரோதத்திற்குக் காரணங்களைக் காணு ராதலின், எல்லா மதங்களையும் அவர் சமமாகப் பாவிப்பர். அவர் பிறமத நூல்களையும் பாரபக்ஷமில்லாமல் சோதித்துப் பார்த்தால், எல்லாமதங்களும் முக்கியமான அம்சங்களில் ஒற் றுமை யுள்ளனவெனவும், அவைகளுள் பேதங்கள் சிலவே யெனவும், அவ்வித வேறுபாடுகளும் முக்கியமல்லாதவைகளி லுள்ளனவேயன்றி, முக்கிய தத்துவங்களில் கிடையாவெனவும் தெளிவாய் அறிவர். இவ்விதமாக ஒற்றுமையுள்ள உண்மைத் தத்துவங்களுக்கெல்லாம் மூலம் ஒன்றே என்பதும், இதில் காணப்படும் பேதங்கள் காலதேச வித்தியாசங்களால் ஏற்பட் டிருத்தல் வேண்டுமென்பதும் ஊகிக்கத்தக்கனவாக வுள்ளன.

இவ்வண்ணம் பல மதங்களின் முக்யாம்சங்களென்று சொல்லப்படுவனவற்றை எல்லா மதத்திற்கும் மூலமாகிய பிர ஹம் வித்தை என்பர். இதுவே குப்தவித்தை எனவும் அழைக் கப்படும். இந்த பிரஹ்மவித்தை எல்லாமதங்களுக்கும் மூல மானதென்று அறிந்தவுடன், மாந்தர் தம்தம் மதங்களை அனு ஷ்டித்து பிறமதங்களின்மேல் விரோதம் பாராட்டாமல் அவ ற்றை சமமாகவே கருதத்தொடங்குவர். அவ்வாறாயின் மத பானது மனுஷகோடிகளுக்குள் ஒற்றுமையைப் பிறப்பிக்கத் தகுந்ததாகும். மனிதர்க்குள் உண்டாகும் எல்லா விரோதங்க ளுக்குப் மதமே காரணமென்று இக்காலத்தார் கூறுவது அப் போது பொய்யாகிவிடும்.

பகவான் ஒவ்வொரு கற்பத்திலும் முன் கற்பத்தின் முடி வில இருந்ததுபோலவே உலகத்தைப் படைக்கிறார்.

யாதா யயாவ-ஸவ-ம கைல்பயக் ॥

இந்த கற்பத் தொடக்கத்தில் சிருஷ்டிக்கப்பட்ட மானிடகோடிகள் கடைத்தேறுவதற்காக, பூர்வ கற்பத்தில்

சித்திபடைந்த, பிரஹ்மத்தை உணர்ந்தவரான பல முதலிய மஹாத்மாக்களைக் கடவுள் உலகில் ஜனிக்கச்செய்தார். அம்மஹாத்மாக்கள் ஈடேறியவர்களாயினும், பாமரஜனங்களையும் ஈடேற்றுவதற்காக இப்புவியில் அவதரித்து, நடக்கும் கற்பத்தில் மானிடர்களால் அனுசரிக்கக்கூடிய நானாதர்மங்களையும் பரவச்செய்தனர்.

அந்த தர்மங்களெல்லாம் இந்த யுகத்தில் காலத்திற்குத் தகுந்தபடி அனுசரிக்கப்படும். அம்மஹாத்மாக்கள் மஹரிஷிகளாயும், அரசர்களாயும் அவதரித்து, தர்மமார்க்கங்களை உபதேசித்து, மனிதரை அனுஷ்டிக்கும்படி செய்து, அவரைப் படிப்படியாய் மேலான நிலைக்குக் கொண்டுவர வெகுகாலம் பாடுபட்டார்கள். தாய் கொஞ்சகாலம்வரை சிசுக்களைப்போஷித்து, கைக்கோல் கொடுத்து நடக்கச்செய்து, குழந்தைகள் சிறிது நடப்பதற்குக் கற்றபிறகு தாமாகவே நடக்கவேண்டுமென்ற எண்ணத்தால் நேரில் குழந்தைகளுக்கு உதவிசெய்வதை விட்டு, அவர்களுக்கு அபாயம் நேரிடாமல் தூரத்திலிருந்து பாதுகாப்பதைப்போல, அம்மஹாத்மாக்களும் பாலரது ஸ்வபாவத்தையுடைய மனிதர்களைக் கொஞ்சகாலம்வரை ரக்ஷித்து சிக்ஷித்தபிறகு, அவர்களுக்கு ஸ்வதந்திர ஞான முண்டாகும் பொருட்டு மறைவாக நின்று அவர்களைப் பாதுகாத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு இஷ்டப்படி விடப்பட்ட மனிதர்கள் நாளடைவில் தாங்கள் பெற்ற உபதேசங்களை மறந்தும், அறியமுடியாமலும், நன்றாய் அனுஷ்டிக்காமலும் தீயவழிகளில் செல்லுவாராயின், அவர்களை அவ்வழிகளினின்றும் விடுவித்து நல்வழிப் படுத்துவதற்காக, கருணைக்கடலாகிய மஹரிஷிக் கூட்டத்திலிருந்து ஜகத்குருவானவர் காலத்திற்கேற்ப பல தேசங்களிலும் அவதரித்து, பிரஹ்மவித்தையிற் சில பாகத்தை காலத்திற்குத் தக்கவாறு உபதேசித்து சன்மார்க்கத்தைப் போதித்து மறைந்துவிடுவார்.

இவ்விதமாக அநேக தேசங்களில் காலத்திற்கேற்ப அவதரித்துப் பற்பல நாமங்களைத்தரித்த அந்த ஜகத்குருவே வெவ்வேறு மதங்களை ஸ்தாபித்தவராவர். ஆதலின் மத ஸ்தாபகர் அனைவரும் அந்த ஜகத்குருவின் அவதாரங்கள்தாம். அவர்களால் ஏற்படுத்தப்பட்ட மதங்களனைத்தும் பிரஹ்மவித்தையாகிய மரத்தின் கிளைகளேயாகும். மதங்களெல்லாம் அதை மூலாதாரமாகக்கொண்டு தம் சாரத்தை கிரகித்துக் கொள்ளுகின்றன. வெவ்வேறு மதங்களுள் முக்யாம்சங்களெல்லாம் ஒன்றாக விருப்பதற்கு இதுவே காரணம். ஆயினும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு தேசபாகங்களிலுள்ள மனிதருக்கு அவை உபதேசிக்கப் பட்டனவால், அக்காலத்திற்கும் தேசத்திற்கும் ஏற்றபடி எழுகின்ற ஆசாரங்களில் அநேக பேதங்களில்லாமல் தீராது; அதனால்தான் மதங்களில் ஒன்றற்கொன்று பேதங்கள் காணப்படுகின்றன. ஞானிகள் இவ்வேற்றுமைகளைக் கவனியாமல் அவைகளின் சாரமாகிய ஒற்றுமை பாகங்களைமட்டும் நோக்குவர். மலை யுச்சியில் பெய்தமழை நாற்புறமும் பெருகியோடி, பூமியின் குணத்தினால் ஒருபுறம் கறுப்பாகவும், ஒருபுறம் சிவப்பாகவும், மற்றோர்புறம் பீதவர்ணமாகவும் இன்னு மிவ்வாறு அநேக நிறமாக மாறுகின்றதல்லவா?

பர்வதத்தின் உச்சியிலிருந்து வீழும் தெண்ணீரே பிரஹ்மவித்தை. பற்பல தேசங்களிலும் பலநிறமுள்ளதாக வோடுகிற நீரோட்டங்களே கிளை நதிகளாகிய மதங்கள். அந்நீரோட்டங்களின் பல நிறங்களும் தேசங்களின் வாசியால் ஏற்பட்டனவாகும். அவை மூலத்தில் இல்லை. அதாவது பல வேறு மதங்களுள் காணப்படும் சமான தர்மங்கள் அந்த ஜலத்தின் மூலம் போன்றன. ஒன்றற்கொன்று காணப்படும் பேதங்கள் பல நிறங்களுக்கும் காரணமாகிய நிலராசிபோன்றன. இப்படி எல்லா மதங்களுக்கும் மூலம் பிரம்மவித்தையே. பகவான் இரண்டற்ற ஒருவனாய் எவ்வாறு விளங்குகின்றாரோ, அதுபோல பிரஹ்மவித்தையும் ஒன்றாய் சர்வமதங்களின் சாரமாய் விளங்குகின்றது.

**இத்தகைய பிரஹ்ம வித்தையைப் பரிபூரணமாகக் காப்பாற்றி, உலகத்தின் நன்மைக்சாக அப்பிரஹ்ம வித்தையின் வடிவமாக வுள்ளவர் மேற்கூறிய மஹாத்மாக்களின் சங்கத்தில் உள்ளவர்களே. அம்மஹாத்மாக்கள் இக்காலத்திலும் இருக்கிறார்களென்று அவரது அனுக்கிரகத்திற்குப் பாத்திரராயுள்ள பெரியோர்கள் கூறுகிறார்கள். பகவத் ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகளும் விவேக சூடாமணி என்ற கிரந்தத்தில் பின்வருமாறு வர்ணித்துள்ளார்.**

𑌶𑌾𑌨𑍍𑌤𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨𑌿𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 𑌸𑌨𑍍𑌤𑍋
𑌵𑌸𑌨𑍍𑌤𑌵𑌲𑍍𑌲𑍋𑌕𑌹𑌿𑌤𑌂 𑌚𑌰𑌨𑍍𑌤𑌃 ।
𑌤𑍀𑌰𑍍𑌣𑌾𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌭𑍀𑌮𑌭𑌵𑌾𑌰𑍍𑌣𑌵𑌂 𑌜𑌨𑌾
𑌨𑌹𑍇𑌤𑍁𑌨𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌤𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌃 ॥
𑌅𑌯𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌸𑍍𑌸𑍍𑌵𑌤 𑌏𑌵 𑌯𑌤𑍍𑌪𑌰
𑌶𑍍𑌰𑌮𑌾𑌪𑌨𑍋𑌦𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ।
𑌸𑍁𑌧𑌾𑌂𑌶𑍁𑌰𑍇𑌷 𑌸𑍍𑌵𑌯𑌮𑌰𑍍𑌕𑌕𑌰𑍍𑌕𑌶
𑌪𑍍𑌰𑌭𑌾𑌭𑌿𑌤𑌪𑍍𑌤𑌾 𑌮𑌵𑌤𑌿 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌂 𑌕𑌿𑌲 ॥ விவேகசூடாமணி.

*தாத்பர்யம்:—சாந்த ஸ்வரூபர்களும் மஹாத்மாக்களும், வஸந்த புருஷரைப்போல் லோகோபகாரத்தின் பொருட்டு ஸஞ்சரித்து, பயங்கரமான ஸம்ஸார சாகரத்தைத் தாம் எளிதில் கடந்து, அளவிறந்த கருணையுடையவராய், பவக்கடலில் மூழ்கிக்கிடக்கும் பிறமாந்தர்களையும் அதைத் தாண்டச்செய்வதற்கு இன்னும் வசிக்கிறார்கள். பிறரது கஷ்டங்களைப் போக்குவது அம்மகான்களது இயற்கைக்குணம்.*

*சந்திரன் சூரியனது கொடிய கிரணங்களால் தபிக்கப்பட்ட பூமியை தானே தனது சீதளத்தால் காப்பாற்றுகிறானல்லவா?*

𑌪𑍍𑌰𑌾𑌯𑍇𑌣 𑌦𑍇𑌵𑌮𑍁𑌨𑌯𑌸𑍍𑌸𑍍𑌵𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾𑌮𑌾
𑌮𑍌𑌨𑌂 𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 𑌵𑌿𑌜𑌨𑍇 𑌨 𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 ।
𑌨𑍈𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌹𑌾𑌯 𑌕𑍃𑌪𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷 𑌏𑌕𑍋
𑌨𑌾𑌨𑍍𑌯𑌂 𑌤𑍍𑌵𑌦𑌸𑍍𑌯 𑌶𑌰𑌣𑌂 𑌭𑍍𑌰𑌮𑌤𑍋𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑍇 ॥

*பாகவதம், பிரகலாத சரித்திரம், 7-வது ஸ்கந்தம்*

**தாத்பர்யம்:—அநேகமாய் தேவர்களும் முனிவர்களும் தங்களுடைய முக்தியைக் கோரினவர்களாய் தனிமையான இடங்களில் மௌன விரதஞ்செய்வார்கள். அவர் பிறரது நன்மைக்காக உழைதவராகார். உலகில் அஞ்ஞானிகளை விட்டுவிட்டு நான் ஒருவனே மோக்ஷத்தை அடையமாட்டேன். சம்சாரத்தில் உழன்றுதிரிகிற ஜனங்களுக்கு என்னைவிட வேறுகதி கிடையாது.**

இப்போதும் அவ்வித மஹாத்மாக்கள் இமயமலையில் சித்தாஸ்ரமங்களில் ராஜயோகிகளாய் வசிக்கிறார்களென்றும், இக்காலத்திலும் அநேக பிறவிகளில் தாம்செய்த புண்ணியங்களால் பரிபக்குவமடைந்தவர்கள் அம்மஹான்களைக்கண்டு அவரது அனுக்கிரகத்திற்குப் பாத்திரராகிறார்களென்றும், அதை அனுபோகத்தால் நேரிற் கண்டவர்கள் திடமாகச் சொல்லுகிறார்கள்.

இக்காலத்தில் எல்லா தேசத்தாரும் ஸநாதன தர்மங்களை மறந்து கேவலம் உலகப்பற்றில் ஈடுபட்டு நிரீசுவரவாதிகளாகி மயங்கும் சமயத்தில், உலகிற் பரவும் அக்ஞானத்தைப் போக்குவதற்காக அம்மஹான்களில் இருவர் கருணைகூர்ந்து, யோக்யதையுள்ள தம் சீடருக்குப் பிரஸன்னமாகி, அவர் மூலமாக பிரஹ்மக்ஞான ஸபையென்ற ஓர் சங்கத்தை ஸ்தாபித்தார்கள். அச்சங்கம் நாட்டப்பட்ட கொஞ்சகாலத்திற்குள்ளாக, உலகில் எல்லா விடங்களிலும் அது வியாபித்து, பிரஹ்ம வித்தையின் சாரத்தை இக்காலத்திற்கேற்ப போதித்து, உலகிலுள்ள பற்பல மதங்களையும் துலக்கி நிலைபெறச்செய்துள்ளது. மேற்கூறியவாறு முன்னுள்முதல் காலத்திற்கேற்ப எல்லா தேசங்களிலும் பலவிதமான மதங்களை ஸ்தாபித்த இந்த ஸித்தர் கூட்டமே இக்காலத்தில் புதியதோர் மதத்தை ஸ்தாபிக்காமல் பூர்வ மதங்களை சமரசப்படுத்தி மதவிரோதங்களைப் போக்கி, ஒற்றுமையை விருத்திசெய்து, பல சித்தாந்தங்களுள்ளும் தத்துவம் ஒன்றே என்பதை நிரூபித்துக்காட்ட இந்த சங்கத்தை ஏற்படுத்தியுள்ளார்கள். இச்சங்கம் தோன்றியதுமுதல் மதப்பற்று சிறிதுமில்லாத அநேகர் தம்தம் மதங்களில் பற்றுள்ளவராகி தம் மதாசாரங்களை மிகுந்த ஊக்கத்துடன் அனுஷ்டித்து வருகின்றனர். இச்சங்கம் எந்தெந்த தேசங்களில் பரவியுள்ளதோ அந்தந்த தேசங்களில் மதங்கள் திரும்பவும் உயிர்பெற்று அவ்வத் தேசத்தோரால் மிகவும் அபிமானிக்கப்பட்டு விருத்தியடைகின்றன. இன்னும் எல்லாரிடமும் பிறமதங்களில் அன்பைப்பெருக்கி, பிறமதத்தோரிடம் சகோதரபாவத்தைப் பிறப்பித்து ஒற்றுமையை வளர்க்

கின்றது. ஒருமதத்தைவிட்டு மற்றொரு மதத்தைத் தழுவுவது பிழையென்றும், ஒவ்வொரு ஜீவனும் மோக்ஷத்தை யடைவதற்குத் தகுந்த உபாயத்தை ஒவ்வொருமதமும் போதிக்கின்றதென்றும், தம்தம் மதாசாரத்தை நன்றாய் அனுஷ்டித்தாவர் தால் ஒவ்வொரு ஜீவனுக்கும் கடைத்தேறுவது சாத்தியமாகுமென்றும் இந்த ஸமாஜம் உறுதி கூறுகின்றது.

## எல்லா மதங்களிலுமுள்ள பொதுவான முக்யாம்ஸங்கள்.

ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம ||

ஜந்மாத்யஸ்ய யத: ||

*தாத்பர்யம்:—ஜகதீசுவரனும், ஜகம் உண்டாவதற்கும், காப்பதற்கும், அழிவதற்கும் காரணனும், எல்லாவற்றிற்கும் சாக்ஷியானவனும், சத்சித் ஆநந்த ஸ்வரூபனுயும் இருக்கும் பகவான் ஒருவரே. அவர் தமக்கு நிகரற்றவராய் விளங்குகிறார்.*

பல தேசங்களிலும் பல மதங்களிலும் பல நாமங்களால் அறியப்படுகிற ஈசுவர தத்துவம் ஒன்றே. இந்துக்களுக்குள் பகவான் என்றும், ஸதாசிவனென்றும், மஹாவிஷ்ணுவென்றும் பிரஹ்மமென்றும் மற்றும் வேறு நாமங்களால் அழைக்கப்படுகிற தத்துவத்தையே 'அல்லா' என்று மகம்மதியரும், 'ஜெஹோவா' என்று ஹீப்ருஜாதியாரும், "ஆர் மஜ்ட்" என பாரசீகரும், "காட்" (God) என கிறிஸ்தவர்களும் அழைக்கிறார்கள். பேர் எவ்வாறிருப்பின் என்? பேரினால் நிரூபிக்கப்படுகிற தத்துவம் ஒன்றுதான். எல்லா மதங்களும் ஈசுவரன் ஒருவனே என்று முறையிடுகின்றனவேயன்றி, ஈசுவரர் அநேகரெனக் கூறுவதைக் காணோம். இந்துக்கள் 33 கோடி தெய்வங்களைத் தொழுகிறார்களென்று பிறமதத்தினர் கூறுவர். இது இந்துமத சித்தாந்தத்தை உணராததால் ஏற்பட்ட ஒரு

பிழையான அபிப்பிராயம், அந்த சித்தாந்தமே இந்துமத சித்தாந்தத்திற்கு முற்றிலும் விரோதமானதென்று சொல்லவும் வேண்டுமோ? மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவரும், சுயம் பிரகாசரும், மனோவிகாரமற்றவரும் தமக்கு நிகரில்லாதவருமாகிய ஈசுவரன் திரிமூர்த்தி ஸ்வரூபமாக வுள்ளாரென ஒவ்வொரு மதமும் முறையிடுகின்றது. அம்மும்மூர்த்திகளின் கீழே அவரது ஆக்ஞையை நடத்துபவராகிய கணக்கற்ற தேவதைகள் அநேகர் படிப்படியாக இருக்கிறார்கள். 33 கோடி என்ற எண் ஈசுவரனைச் சேராது. அவரது ஆக்ஞைக்கு உட்பட்டவர்களாகிய தேவர்களையே அது குறிக்கும். இந்திராதி தேவர்களை ஈசுவரனென்று கருதுவோருமுண்டோ? இல்லையென்றே கூசாமற் கூறலாம். அவ்வாறே இதர மதத்தினரும் ஈசுவர ஆக்ஞையை நடத்துவோராகிய தேவகோடிகள் பல தாரதம்மியங்களுடன் வசித்துவருகிறார்களென நம்புகிறார்கள். மகம்மதியரும், கிறிஸ்துவரும் தேவதூதரென்றும் (Angel), பிரதான தேவதூதரெனவும் அவரை அழைப்பர். இவ்விஷயத்திலும் நாமபேதங்களால் நிரூபிக்கப்படும் வஸ்து ஒன்றுதான். வணங்குதற்குரிய தேவதூதர்கள் அநேகர் உள்ளாரென நம்பும் கிறிஸ்துவர்கள், தேவர் பலரை வணங்கும் இந்துக்களை மூடர்களெனத் தம் அறியாமையால் ஏளனஞ் செய்வர். ஆயினும் எல்லா மதஸ்தர்களும் பாமர ஜனங்கள் காணக்கூடாத சூக்ஷ்மலோக சஞ்சாரிகளாகிய தேவதைகள் அநேகர் இருக்கிறார்களென்றும், அவர்கள் நன்மை தீமைகளை விளைவிப்பதற்குத் தகுதியுடையவர்களென்றும் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் ஸர்வேசுவரனும் எல்லாவற்றையும் நடத்திவைப்பவரும், எப்பலனையும் எளிதில் அளிக்க வல்லவருமாகிய ஈசுவரன் ஒருவனே என்பதும், அவரது ஆக்ஞைப்படி நடந்து ஒழுகும் தேவதைகள் அநேகர் உள்ளாரென்பதும், ஸர்வமதத்தினரும் ஸாதாரணமாக நம்புகிற விஷயங்களாக வுள்ளன.

## ஜீவாத்மாக்கள்.

ஜீவாத்மாக்கள் எல்லாம் ஈசுவராம்சங்கள். இன்னும் எல்லா மதத்தினரும் ஆத்மாவின் உண்மை நிலையை நிரூபிக்கும்போது, ஜீவாத்மா கேவலம் சரீரமல்லவென்றும், சரீரத்தினும் அதுவேறான லக்ஷணமுள்ளதென்றும், சரீரத்திற்கு யஜமான ஸ்தானத்திலுள்ள அந்த ஜீவன் வேறாகவுள்ளதென்றும், அந்த ஜீவன் ஈசுவரனது அம்சமென்றும் சொல்லுகிறார்கள். சரீரமே ஜீவனென்று கூறும் மதம் ஒன்றுமில்லை. ஜீவன் ஈசுவரனது அம்சமாயுள்ளதால், ஈசுவரனைப்போலவே சச்சிதானந்த ஸ்வரூபனாய் இருக்கிறான். ஈசுவரன் மிகுந்த ஜோதி ஸ்வரூபனெனவும், ஜீவாத்மாக்கள் அந்த ஜோதியிலிருந்து வெளியேறிய தீப்பொறிகளெனவும் முண்டகோபநிஷத்திலும், ஈசுவராம்சங்களென்று பகவத்கீதையிலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

யதா² ஸுதீ³ப்தாத் பாவகாத் விஸ்பு²லிங்கா³:
ஸஹஸ்ரஶ: ப்ரப⁴வந்தே ஸரூபா: |
ததா²க்ஷராத் விவிதா⁴: ஸோம்ய பா⁴வா:
ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி ||

முண்டகோபநிஷத்.

என்னுடைய மம்சமா யிவ்வுலகிற் சீவனாய்
முன்னாநின்று முயலுமுயிர்.

கீதை வெ. அத்தி 15. பாட்டு 7.

---

## பரமபுருஷார்த்தம்.

ஜீவன் ஈசுவரன் அம்சமாகையால், எவ்விதம் தீப்பொறிகள் வெளியே வரும்போது, ஜ்வாலையின் சக்தியுடன் தோன்றி மறுபடியும் அஜ்வாலையில் அடங்கிவிடுகின்றனவோ, அவ்விதமே ஈசுவரனிடம் தோன்றும் ஜீவாத்மாக்களிடமும் ஈசுவரனது சர்வ சக்திகளும் பீஜரூபமாக அடங்கி யிருக்கின்றன. இந்த சக்திகளெல்லாம் விரிந்து வெளிப்படுவதே பரமபுருஷார்த்தமெனலாம். இதற்காகவே ஜீவர்களை பகவான் சம்சாரத்தில் நுழையும்படி செய்கிறார். ஜீவர்கள் சம்சாரத்தில் பிரவேசித்து பல ஜன்மங்கள் எடுத்துக்கொண்டு தமது கர்மானுசாரத்தால் இகபர சுகதுக்கங்களை அனுபவித்து, பரிபக்

குவமடையும் காலத்தில் மனோதிடம், பக்தி ஞான வைராக்கிய முதலியவைகளில் பரிபூரணமடைந்து பரம்பொருளைப் போல எல்லா கல்யாணகுணங்களையும் பூரணமாக அடைவார்கள். இதைத்தான் ஈசுவரன் ஸந்நிதானத்தை அடைகிறதென்றும், ஈசுவர ஸ்வரூபத்தை அடைகிறதென்றும், ஸ்வஸ்வரூபத்தை அடைகிறதென்றும் சொல்லுவர். பலமதத்தினரும் ருசிபேதத்தினால் புருஷார்த்த ஸ்வரூபத்தைப் பலவிதமாய் வர்ணித்தாலும், அந்தந்த மத மூலகிரந்தங்களை நன்றாய்ப் பரிசோதித்து அனைத்தையும் சமரசப்படுத்திப் பார்த்தால், அந்த ஸ்வரூபத்தின் வர்ணனையில் கொஞ்ச பேதமிருக்குமேயொழிய, தத்துவபேதம் எள்ளளவும் அவைகளிலிராது. மற்றும் எல்லாரும் இந்த புருஷார்த்தத்தை பிறர்க்கு உபதேசித்து, கூடியவரை விரைவாயும் எளிதாயும் அதை யடைகிற வழிகளைத்தேடி, பின்வருவோரும் உறுதியாய் அவற்றைக் கடைப்பிடிக்கும்படி தூண்டுகிறார்கள். இந்திரியங்களுக்குப் புலனாகும் இவ்வுலகத்தைத்தவிர, ஸூக்ஷ்மமானதும் இந்திரியங்களுக் கெட்டாததுமான பரலோகங்க ளிருக்கின்றனவென்றும், அவையெல்லாம் இப்பரம புருஷார்த்தத்தை அடைவதற்குப் படிப்படியாய் துணைக்கருவிகள் ஆகின்றன வென்றும், எல்லா மதத்தினரும் வெளிப்படையாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இவ்வித பரமபுருஷார்த்தத்தையே முக்கியமாக விளக்கிக்காட்டி அதை அனுசரிப்பதற்குத் தகுந்த வழிகளைப் போதிக்காத மதமே கிடையாது.

---

## சாதனங்கள்—வழிகள்.

ஜீவன் பூலோகத்தில் பலதரம் பிறந்து கர்மானுசாரமாக இகபரலோகங்களின் சுகதுக்கங்களை அனுபவித்து, அந்த அனுபவத்தினாலேயே ஒவ்வொரு பிறப்பிலும் ஞானத்தை விருத்திசெய்துகொண்டு, நாளடைவில் அநேக ஜன்மங்களில் அடைந்த ஞானத்தினால் பரம புருஷார்த்தத்தை அதாவது மோக்ஷத்தை அடைவானென்று இந்துமதத்தில் நன்றாய்ச் சொல்லப்பட்டுள்ளது. இவ்வுலகம் அக்ஞானத்தைப் போக்கிக்

கொள்ளுவதற்கோர் பாடசாலைபோலிருக்கின்றது. பூலோகத்தில் அடையத்தகுந்த ஞானத்தை ஜீவன் பரிபூரணமாக அடையும்வரை திரும்பித் திரும்பிப் பிறந்து, இப்பூலோகமாகிய பள்ளிக்கூடத்திற்கு வராமல் தீராது. கருணைக்கடலாகிய பகவான் ஜீவாத்மா பரிபூரண மடையும்வரை உலகத்தில் அவனுக்குப் பிறப்பைக்கொடுத்து முடிவில் கடைத்தேறும்படி செய்வாரேயொழிய ஒரு பிறப்பிலேயே பரிபூரணராகாதவர்களை நிலையாக நரகத்தை யடையும்படி செய்யமாட்டார். இந்த புனர்ஜன்மவிதி இந்து பௌத்த மதங்களில்மட்டும் போதிக்கப்பட்டுள்ள தென்றும், தம்தம் மதங்களில் இல்லையென்றும் இக்கால பார்சிகளும், கிறிஸ்தவர்களும், மகம்மதியரும் எண்ணுவர். ஆயினும் மகம்மதியருக்குள் தத்துவ ஞானிகளாகிய ஸூபி (Sufi) என்ற வகுப்பாரின் நூல்களில் இந்த சித்தாந்தம் பரக்கக் காணப்படுகின்றது. கிறிஸ்தவரின் மதக்கிரந்தமாகிய பைபிளிலும் (Bible) அநேக இடங்களில் இந்த சித்தாந்தம் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. இக்கால கிறிஸ்தவருட் சிலரும் மகம்மதியர்களுமே இந்த சித்தாந்தத்தை நம்பமாட்டார்களே தவிர, தந்தம் மதக் கிரந்தங்களைத் தீர ஆராய்ந்த பண்டிதர்கள் யாவரும் இதை ஒப்புக்கொள்ளுவார்கள். இக்கால கிறிஸ்து மதப் போதகருட் சிலரும் இச்சித்தாந்தத்தைத் தம்மைச் சேர்ந்தோர்க்கு வெளிப்படையாக போதித்து வருகிறார்கள். பிரஹ்மஞான ஸபையின் கிளைகள் இப்பூவுலகில் வியாபித்து வரவர, இம்முக்கிய சித்தாந்தத்தை எல்லா விடங்களிலுமுள்ள சர்வமதத்தினரும் அங்கீகரிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

---

## கர்மம்.

இவ்விதமாக ஜீவர்கள் உலகில் பலமுறை பிறந்து சம்சார வெள்ளத்திலிறங்கி பல வைதீக லௌகீக கார்யங்களைச் செய்து அவற்றின் பலானுசாரமாகப் பரலோகத்தை யடைவார்கள். மனத்தாலும், இந்திரியங்களாலும், காலத்தாலும் அவர் செய்யுங் கருமங்களெல்லாம் அதனதன் பயனைக் கொடுத்துக்கொண்டே யிருக்கின்றன. ஒவ்வொருவரும் தாம் செய்

யும் கருமத்தின் பலனை இம்மை மறுமைகளில் தவருமல் அனுபவிக்கிருர்கள். ஆகையால் இப்பிறப்பில் மிருந்த ஊக்கத்துடன் புண்ணிய கருமங்களைச் செய்யும் ஒருவன் இகபர சுகங்களை அடைவதுமல்லாமல், மீதி ஜன்மங்களில் அவ்வித புண்ணிய கருமங்களில் பிரியம்வைத்து அவற்றிலேயே கருத்தை ஊன்றும்படி தூண்டும் நல்ல வாசனையுடனும், அவ்வித புண்ணிய காரியங்களை முன்னிலும் அதிக திடமாகவும் எளிதாகவும் செய்கிற சுபாவத்துடனும் சக்தியுடனும் பிறக்கிருன். மீதி ஜன்மங்களில் அவ்வித புண்ணிய கர்மங்களைச்செய்ய அவகாசங்கொடுக்கும் தேசகால நிமித்தங்கள் அந்த ஜீவனுக்குக் கைகூடும். அக்காரணங்களினுல், ஜீவன் அப்புண்ணிய கருமங்களை மேன்மேலும் ஊக்கிச்செய்து, பிற்பிறப்புக்களில் சித்தசுத்தியடைந்து, மோக்ஷசாதனத்தை யடைவதற்கான ஞானம் நாளடைவில் நிரம்பப்பெற்று, சம்சார சக்கிரத்திலிருந்து விடுபட்டு மோக்ஷமடைகிருன். இவ்வாறன்றிக் காமக்ரோதங்களினுல் பாவகருமங்களைச் செய்கிற ஜீவன் இகபர லோகங்களில் துக்கத்தை யடைவது மல்லாமல், பின் ஜன்மங்களிலும் பாவகருமங்களில் ருசியும், பற்றும் உண்டுபண்ணுகிற அசுபவாசனைகளுடன் ஜனித்து, அவ்வித பாவகருமங்களையே செய்யும் சுபாவமுடையவனுவான். மற்றும் புண்ணிய காரியங்களுக்கு அனுகூலமான சுபாவத்தை அடைவதற்கும் புண்ணிய கருமத்தைச் செய்வதற்கும் சந்தர்ப்பத்தைப் பெருதவாறு பிறப்பான். ஆயினும் ஜீவன் ஈசுவரனது அம்சமாதலாலும் தன் ஸ்வரூபத்தைத் தெரிந்து புருஷப் பிரயத்தனஞ்செய்ய ஸ்வதந்திரம் பெற்றிருப்பதாலும், புண்ணிய கருமங்களைச் செய்வதிலும் பாவகாரியங்களை விடுவதிலும் தன் புருஷாகாரத்தை (Free Will)க் காட்டிப் படிப்படியாகக் கடைத்தேறுதல்கூடும். தான்செய்யும் புண்ணிய பாவகருமங்களின் பலானுபவத்தை ஜீவன் அடையாமல் தீராது. பாவகர்மங்களில் பிரவர்த்தித்து மீதி ஜன்மங்களில் பூர்வ துர்வாசனையால் தனக்கு ஏற்படும் சுபாவமும் சந்தர்ப்பமும் பிரதிகூலமுள்ளவையாக விருந்தாலும், சாஸ்திர வாராய்ச்சியினுலும், பெரியோ

ருடைய பழக்கத்தாலும் பாவபுண்ணியங்களைத் தெரிந்து கொண்டு, தான் பகவானது அம்சமானவனென்ற தைரியத் தினால் துன்மார்க்கத்தை விட்டு நன்மார்க்கத்தில் நடக்க நிச்சயித்துப் பிறகு நடக்கக்கூடும். இந்த சக்தியைப் பரமதயாநிதியான பரமேசுவரன் தன் அம்சமான ஜீவனுக் குக் கொடுத்திருக்கிறார். ஆதலால் எவ்வித பாவியானாலும் ஜீவன் தன் தன் விவேகத்தைத் தெரிந்துகொண்டு, கர்மப்ரா ப்தமான துர்வாசனைகளை வேருடன் களைய உறுதியாக நிச்ச யித்து, முன்செய்த பாவங்களுக்காக பரிதாபப்படுவதாலும், சர்வ பூதங்களிடமும் கருணை வைப்பதாலும். பகவானைத் தியானித்து ஆராதிப்பதாலும் பரிசுத்தமடைந்து முக்தியடையக்கூடும். ஆகையின் மனிதர் பாவகருமத்தைச் செய்யும் போது அதற்குக் காரணம் பரமனென்று சொல்லி, பகவான் தன்னிடம் அவ்வித புத்தியைப் பிறப்பித்தானென்று கூறுவது மதியீனம். விதி என்பது ஜீவன் முன் சுவதந்திரமாகச்செய்த கருமங்களின் பயனேயன்றி வேறல்ல. அது பகவானைக் குறிக்காது. இதனால் விதியென்பதை நாம் செய்யப்புகும் காரியங்களில் சம்பந்தப்படுத்துவது அத்தனைச் சிறந்த தன்று. இக்கர்ம சித்தாந்தம் இந்து பௌத்த மதங்களில் மட் டுமே போதிக்கப்பட்டிருக்கிறதென்றும், இதரமத சித்தாந் தங்களுக்கு அது விரோதமானதென்றும் இக்காலத்துச் சிலர் கொண்டாலும், இதரமத கிரந்தங்களிலும் இவ்விஷயம் காண ப்படுகின்றது. கிறிஸ்துமத கிரந்தங்களில் "நீ விதைத்ததற் கேற்பப் பயனை யனுபவிப்பாய்; நீ பிறர்க்கு எத்துணை கொடு க்கிறாயோ அத்துணை மறுபடியும் உனக்குக் கொடுக்கப்படும்." என்ற இவைபோன்ற வாக்கியங்களால் இச்சித்தாந்தம் நன் றாய் விளக்கப்பட்டுள்ளதல்லவா? இவ்வாறே பிறமதங்களிலும் இது காணப்படுகின்றது. ஆதலால் சகோதரர்களே! வாருங் கள்! நாமெல்லோரும் இவ்விஷயங்களை நன்றாய் ஆராய்வோம். நம்மத கிரந்தங்களை நன்றாக வாசித்து அதிலுள்ள தர்மங்களை அனுஷ்டிப்போம். நம்மதத்தின் அபிவிருத்திக்காகப் பாடுப ட்டு மேன்மையடைவோம். மதங்களெல்லாம் பிரஹ்மவித்தை

என்ற மரத்தின் கிளைகளே என்றும் அக்கிளைகளெல்லாம் நாம் விரும்பும் பலனைக் கொடுக்கத்தக்கவைகளே என்றுந் தெரிந்து பிறமத தூஷணங்களைவிட்டு, எல்லா மதங்களையும் ஆதரிப் போம். ஸர்வக்ஞனும் பரம தயாநிதியுமான பரமேசுவரன் தனது அம்சரூபமான ஜீவர்களுக்கு, அவரவர்க்குத் தகுந்த மேன்மையான மார்க்கங்களை அவரவர் மதத்தின் மூலமாக கற்பித்துள்ளாரென நிச்சயித்து, அந்தந்த மதங்களில் அவர வர்கட்கு சிரத்தையும் பக்தியு முண்டாகும்படி தூண்டுவோம். விரோதங்களை அறவே யொழித்து எல்லோரும் சகோதர பாவமாக அத்யந்த விசுவாசத்துடன் நட்புக்கொண்டு பக வானை வழிபடுவோம். உலகில் பொறாமை, போட்டி, அவம திப்பு, முதலிய த்வேஷங்களை நீக்கி, எல்லாரும் பக்தி விசுவா சம் நிறைந்தவர்களாய், உலகமுழுவதும் ஒற்றுமையைப் பர ப்பி உலகின் நன்மைக்காகப் பாடுபடுவோம். உலக முழுமை யும் சுகம் நிரம்பியதாகச் செய்வோம். பரமேசுவர ப்ரீதி யைச்செய்வோம். நாமும் கடைத்தேறுவோம்.

"ஸர்வேஜனா: ஸுகினோபவந்து."

---

## 2-வது அத்தியாயம்.

### குருசிஷ்யதர்மம்.

சிருஷ்டிகாலத்தில் பகவான் மனிதர்களைப்படைத்து, அவர்கள் கடைத்தேறும்பொருட்டு மனுவாதி மஹாத்மாக்களையும் மனிதகோடிகளுக்குள் அவதரிக்கச்செய்தார் என்று முன்னர்க் குறிக்கப்பட்டது. அம்மஹான்களின் ஸ்வரூபங்களை நன்றாய் அறிவது அவசியம்.

ஒவ்வொரு பிரம கற்பத்திலும் ஜனிக்கிற ஜீவர்களில் அநேக தாரதம்மியங்கள் உண்டு. அவர்களுள் சிலரேனும் நன்றாகத் தம் தர்மங்களைத் தெரிந்துகொண்டு, அவற்றை நன்றாய் அனுஸரித்து அவைகளின் பலன்களை பூரணமாய் அடையத் தகுதியுடையவர் ஆவர். இச்சிலர் ஸ்வதர்மங்களை நன்றாய் அனுஷ்டிப்பதால் (அநேக பிறப்புகளில்) படிப்படியாகப் பக்குவமடைந்து, ஸம்சாரக் கடலைத்தாண்டி பரிபூரணர்களான ஸித்தர்களும், தர்ம ஸ்வரூபர்களும், ஈசுவராம்சத்தை உணர்ந்த முக்தர்களுமாகி, ஈசுவர ஆக்ஞையை நடத்துவதிலேயே மனம்வைத்து லோகநன்மையின் பொருட்டு ஜீவித்து, கற்பாந்தத்தில் ஈசுவரனிடத்தில் ஐக்யமாகிறார்கள். பூர்வ கற்பத்தில் கடைத்தேறிய இவ்வித மஹாபுருஷர்கள், இக்கற்பத்தில் அதிகாரிகளாகி, சாதாரண ஜனங்களை ஈடேற்றுவதற்காக ஜனிக்கிறார்கள். ஆதலின், கேவலம் சாமானிய ஜனங்களைப் போல அவர் கர்மவசப்பட்டுப் பிறப்போர் அல்லர். இவர்களே ரிஷிகள் என்று அழைக்கப்படுவார்கள். அவர்கள் பரிபூரண பிர்ஹ்மானந்த அனுபவங்களை உடையவராகி, ஸம்ஸார சாகரத்தில் முழுகிக்கிடக்கும் அக்ஞானிகளிடம் இருக்கும் தமது அளவிலாக் கருணையால் உலகில் அடுத்தடுத்து சமான நாமரூபங்களினால் ஜனித்து சரீரத்துடன் வசித்துவருகிறார்கள். உலகில் கணக்கில்லாத ஜீவர்கள் பாமரர்களாய், சகல துக்கங்களையும் அனுபவித்து ஸம்ஸாரத்தில் உழன்றுவர, இம்மஹான்கள் நிர்வாணசுகத்தை அனுபவிக்கும் இச்சையின்றித் தம் அளவிலாக் கருணையால் உலகத்தில் ஜீவர்கள் அனைவரும் கடைத்தேறும்வரை பாடுபட நிச்சயித்துள்ளார்கள். இவர்கள் ப்ரஹ்ம

வித்தை வடிவெடுத்து வந்ததுபோல் விளங்கி உலகில் அக்ஞானமாகிய இருளைப்போக்கும் ப்ரம்மக் ஞானமாகிய ஒளியைப் பரவச்செய்து, உலகத்தை உய்விக்கக் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களே பரமார்த்த தத்வங்களையும், பரமாத்மாவுக்கும், ஜீவர்களுக்கும், உலகுக்கும் உள்ள சம்பந்தங்களையும், சகல பூதங்களின் உண்மைத் தத்துவங்களையும், சகல பூதங்களும் பரம புருஷார்த்தத்தை அடைவதற்குச் சாதனமாகிற வழிகளையும் நன்றாய்த் தெரியும்படி செய்து, உலகிலுள்ள சாமானியர்களும் அனுசரிக்கக்கூடிய தர்மங்களை நிரூபிக்கின்றனர். மஹரிஷிகளெனத்தகும் இவர்களே கற்ப ஆதியில் ராஜாக்களாகவும் ஜனித்து, சகல ஜனங்களையும் காப்பாற்றி, அவர்களனைவரையும் அவரவர்க்கு ஏற்பட்ட தர்மங்களை அனுஷ்டிக்கச் செய்கின்றனர். அப்போது அவர்கள் ஜனோபகாரமாக வர்ணாச்ரம தர்மத்தை ஸ்தாபித்து, ஜீவகோடிகளின் யோக்யதைக்குத் தகுந்தவாறு வர்ணாச்ரமங்களை வகுத்துத் தகுந்த கட்டுப்பாடுகளை ஏற்படுத்தி, உலகைப் பரிபாலித்துக் கொண்டிருப்பர். மனுஸ்மிருதி முதலான தர்ம சாஸ்திரங்களெல்லாம மஹரிஷிகளால் விதிக்கப்பட்டவை. அப்பூர்வ க்ரந்தங்களில் ராஜதர்மங்களும், குடிகளின் தர்மங்களும், குடிகள் ஒருவரோடொருவர் உறவாடி வாழ்வதற்கான விதிகளும் ப்ரம்மவித்தையின் சாரம் முதலியவையும் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ப்ரமவித்தையின் சாரம் எனப்படும் பரவித்தையை மநு, இக்ஷ்வாகு முதலிய ராஜரிஷிகள் மூலமாகவே ஈச்வரன் லோகத்தில் வ்யாபிக்கச்செய்தார் என்று பகவத் கீதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தயோ கத்தை இரவிக்கு யானுரைத்தேனவன்
வந்த மனுவுக் கதனுரைத்தான்—மைந்தனு
மிக்ஷ்வா குக்கவனு மென்றுரைத்தா னிப்படியாற்
றக்குவாய்த் துற்றது தான்.

இன்னே பரம்பரையா லெய்த்ததனை யீங்கறிவர்
முன்னே யரச முனிவர்கள்—பின்னேபோய்க்
காலத்தி னுன்மறைந்து கைகழிந்து விட்டதே
ஞாலத்தில் யோக நலம். கீ. வெ. IV. 1, 2.

(இ-பொ.) சாசுவதமான பலனைக் கொடுக்கும் ஹேதுவான இந்த யோகத்தை (கருமயோகம்) நான் ஆதியில் சூரியனுக்குச் சொன்னேன். சூரியன் மனுவுக்குபதேசித்தார். மனு இக்ஷ்வாகுக் குரைத்தார். இவ்விதம் பரம்பரையாக வரும் இந்த யோகத்தை ராஜரிஷிகள் அறிந்திருந்தார்கள். வெகுகாலமானமையால் அந்தயோகம் இந்த லோகத்தில் நஷ்டமாய்விட்டது.

11. ஹரிஷிகளால் பிரதிபாலிக்கப்பட்ட கர்மங்களெல்லாம் கல்பமுடிவுவரை அநுஷ்டிக்கப்படுகின்றன. நன்றாய் ஆராய்ந்து பார்த்தால், அத்தருமங்கள் ஒரு தேசத்திற்கு மாத்திரமாவது, ஒரு காலத்திற்கு மாத்திரமாவது ஏற்பட்டதுபோலக் காணப்படா. அவை சர்வ ஜனங்களும் தம் தம் யோக்யதைக்குத் தகுந்தபடி அநுஷ்டிக்கும்படியாகவும், யாவற்கும் உபயோகமாகவும் இருக்கும். அவை ஸர்வஜ்ஞர்களால் விதிக்கப்பட்டிருப்பனவால், ஜீவனை ஸர்வ உத்தமமாகிய பதவியை அடையச்செய்வதில் அவை அதிக உதவியாக உள்ளன. இக்காலத்தார் அவர்களைப்போல பரிபூர்ண ஞானிகளாக இராமையால், அவ்விதிகளின் தாத்பரியத்தை உணரக்கூடாமலும், அவற்றின் சாரத்தைத் தெரிந்துகொள்ளக் கூடாமலும் இருக்கிறார்கள். அத்தர்மங்களெல்லாம் நன்றாய் அநுஷ்டிக்கப்பட்டால், உலகில் மனிதகோடிகளுக்கே அன்றி சராசரங்களாகிய சகல பூதங்களுக்கும் மிகுந்த சுகம் கிடைக்கும். மற்றும், இத்தர்ம அநுஷ்டானம் நாம் காணக்கூடாத புவர்லோகம் முதலிய சூக்ஷ்ம லோகவாசிகளான தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் அநுகூலமானதால், லோகத்திற் தேவர்களின் அநுக்கிரகத்தால் கிடைக்கக்கூடிய மழை சரியான காலங்களிற் பெய்யவும், பயிர்கள் செழித்து விளையவும், உலகத்திற்கு அவைமூலம் நன்மை விளையவும் கூடும். அஞ்ஞானத்தினால் அத்தர்மங்களை மனிதர்கள் கைவிட்டால், உலகில் மனுஷ கோடிகளுக்குள் விரோதமும், அவர்களுக்குப் பல தீங்குகளும் உண்டாகும். நடக்கிற கல்பத்தின் முதலில் இம்மஹரிஷிகள் மானவகோடிகளுக்குள் ஜனித்து கொஞ்சகாலம் அவருக்கு வழிகாட்டிகளாக இருந்து, நாளடைவில் ஜீவகோடிகளின் மேன்மையை உத்தேசித்தே மறைவாக இருக்கிறார்கள். மறைந்திருந்த

லும் அவர்கள் உலக அபிவிருத்தியை நாடி, உலகத்தின் நடவடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு, ஜனங்கள் தாம் அநுஷ்டிக்க வேண்டிய தர்மத்தை எவ்வெப்போது கைவிடுகிறார்களோ அவ்வப்போது அவர்கள் மறுபடியும் அவதரித்து அவர்களைச் சீர்திருத்தி, கல்ப முடிவுவரை சநாதன தர்மத்தைக் காப்பாற்றி, உலகில் யோக்யதை உள்ள மனிதருக்கு உதவிபுரியக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். முன் கல்பத்திலிருந்து அவதரித்த அவ்வதிகாரிகளே யல்லாமல், நடக்கும் கல்பத்தில் ஜனித்த ஜீவர்களும் தமது தர்மாநுஷ்டான பலத்தினால் சித்தசுத்தி அடைந்து, உண்மை ஞானத்தைப்பெற்று, பகவானிடம் பக்தி வைத்து நற்குணமடைந்து, ஈசுவரத் தன்மையைப்பெற்ற ஜீவன் முக்தர்களாகி, அந்த மகான்கள் கூட்டத்திற்சேர்ந்து, அவர்களைப்போல் மஹரிஷிகளென பேர் அடைகின்றனர். அவ்விரு ஜீவன் முக்தர் சம்ஸார சாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் பாமரர்களை உய்விக்கப் பலதடவை இப்புவியிற்பிறந்து பாடுபடுவது முண்டு. அவர்கள் எப்போதும் ப்ரம்மானந்தத்தை அடைந்தவராய், யோக்யராகிய சிஷ்யர்களைத் தேடியும், அவர்களது மனதிற் புகுந்தும் அவரிடமுள்ள அக்ஞானத்தைத் தொலைத்து, அவர்களைப் பரிசுத்தர்களாகச்செய்து, முடிவில் தம்மைப் போல அவர்களையும் பரிபூர்ணர்களாகச் செய்வதற்குப் பாடு படுகிறார்கள். அன்னோரது அநுக்கிரகத்திற்குப் பாத்திரர்களானால், அவரது சகாயம் தவறாது கிடைக்கும். மனிதர்கள் சுயநன்மையைத் தேடுபவராய் இருக்கும்வரை அவரது சகாயத்தை அடையார். பரோபகாரபுத்தி அவரிடம் வளர வளர அம்மஹான்களின் கடாக்ஷ வீக்ஷண்யத்திற்கு மனிதர்கள் உரியவர்களாகிக், கூடிய விரைவில் அவருடைய தரிசனத்தையும் நேரில்பெற்று, அவரைப்போலவே தாமும் நாளடைவில் பரிபூர்ணர்களாகி ஜீவன் முக்தர்களாகக்கூடும். இவரே ஜகத்குரு என்று அழைக்கப்படக் கூடியராவர்.

---

## குருநாதர்கள்.

குரு என்பவர் அக்ஞானத்தைப்போக்கி, ஞானத்தை உபதேசம்செய்ய வல்லவராவர். ஸம்ஸார ஸாகரத்தைத் தாமே

கடந்து பிறரையும் அதைத் தாண்டும்படி செய்ய உத்தே சித்து இருப்பவர்களே குருநாதர்கள்.

ஸர்வித்யாஸ்ரயோமூடா: ஸ்வயம்மோக்ஷா ஸவேஸதா: ।
தஸ்ய மாநஸிகா ஸாமர்த்யா ஸர்வமாகேஸிந: ॥

தாத்பர்யம்.—அஞ்ஞானம் நிறைந்த மனதையுடையவருக்கு எவன் மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடுமோ அவனே குருவென்று அம்மொழி யின் பொருளை உணர்ந்த பெரியோர் கொள்வர்.

பிரம்மாண்டத்தில் குருக்கள் அநேக தாரதம்மியங்களு டன் இருக்கிறார்கள். முக்யமாய் குருக்கள் பரிபூர்ணர் என வும், பரிபூர்ண ரல்லாதவரெனவும் இருவகைப்படுவர். ஆன ந்த ஸ்வரூபரும், ஸகல ஞானத்தையும் கொடுப்போரும், ஸம் ஸார ரூபமாகிய அஞ்ஞானத்தை தொலைக்கும் மஹா ஸ்ம சானவாசியாகிய ஸதாசிவனே "குரோர்குரு" என்ற நாமத்தி னால் அழைக்கப்படுவர். அவருக்குப் பிறகு நிற்பவர் அவர் க்கு பிரதிநிதிகளாகி, மனிதர்களை அவரது பாதாரவிந்தத்தில் சேர்க்கக்கூடியவராகிய மேற்சொல்லிய ஜீவன்முக்தரது சங் கமே; இவர்கள் "காரணகுருக்கள்" என்றும் அழைக்கப்படுவர். இவர்கள் லோக நன்மைக்காக ஸ்தூல சரீரத்தை தரித்தவர்க ளாய் இப்போதும், இமயகிரி பிராந்தியத்தில் இருக்கிறார்க ளென்று முன்னமே கூறப்பட்டது. ஆயினும் இவர்கள் சூக்ஷ்ம சரீரத்தினால் பூவுலகு முழுவதும் சஞ்சரித்துக்கொண் டிருக்கிறார்கள்.

அபரஞ்சி ஸர்வபதனஹாஸம் ப்ராஹ்மணா ஸமவந்தியா: ।
ஸநத்குமாரா ருபுஸ்ச்சாங்கிரஸோ தேவலோஸித ஸ்ருங்கிண: ।
ஸாரஸ்வதா நாரத மைத்ரேயா வசிஷ்டோ ஸவித: ॥

பாகவதம் 6-வது ஸ்கந்தம்.

தாத்பர்யம்:—பகவத் பக்தர்களான பிராம்மணர்களும், ஸனத்கு மாரரும், நாரதரும், ருபுவும், ஆங்கீரசுவும், தேவலர், அசிதர், பாரசரர், மைத்ரேயர், பாரத்வாஜர், வசிஷ்டர், முதலியோரும், மற்றும் அநேக சித்தர்களும் எங்களைப்போல அற்பபுத்தி யுடையோர்க்கு மோக்ஷஞான த்தைக் கொடுக்கிறவர்களாய்த் தமது மஹிமையை வெளிப்படுத்தாமல் இஷ்டம்போல் பூலோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள்,

பூர்வகாலத்தில் ஜனங்கள் பரிசுத்தர்களாய் இருந்ததினால், அவருக்கு இம்மஹாத்மாக்கள் அவ்வப்போது தரிசனம் தந்தனர். இப்போதோ மனிதர் அற்ப விஷயங்களில் ஆசை வைத்து, தம் நயத்தையே நாடி பக்தியில் சிரத்தை குறைந்தவராய் இருப்பதால், அம்மஹாத்மாக்களைப் பார்க்க அவர் தகுதியற்றவராய் இருக்கிறார்கள். ஆயினும் பகவத் ஸ்வரூபர்களான அவர்களை நாம் பார்க்கக்கூடாமற் போயினும், நம்மை அம்மஹாத்மாக்கள் ஸர்வ காலங்களிலும் தமது ஞானதிருஷ்டியால் பார்த்து, நமது ஞானவிருத்தியின் பொருட்டும் பரிசுத்தத்தின்பொருட்டும ப்ரயத்தினம் செய்கிறார்கள். ஸப்த ரிஷிகளாகிய நாரதர், வியாசர், சுகர் முதலியோரும், கோத்ர ரிஷிகளாகிய, உத்தவர், மைத்ரேயர், முதலியோரும் இக்காரண குருவர்க்கத்தில் சேர்ந்தோர்தாம. இவர்கள் பரிபூர்ணர்களாகி, பகவத் சொரூபராகி, ஜீவர்களை மேம்படச்செய்வதே தம் கார்யமாக நினைந்து, பிரதிபலனைச் சிறிதும கோராமல் ஸூரியன் உலகத்தில் பிரகாசிப்பதுபோலத் தாமும் பாடுபடுகிறார்கள். உலகில் ஜனங்களைப் பரிபாலிப்பதற்கு சக்ரவர்த்தி ஒருவர் இருக்க, அவருடைய ஆசனத்துக் குட்பட்டு மந்திரிகள் ராஜப்பிரதிநிதிகளாய் இருப்பதுபோல, ஞான பரிபாலனத்தில் குரோர்குருவாகிய மஹாதேவர் சக்ரவர்த்தி ஸ்தானத்திலும், மேற்சொன்ன மஹாத்மாக்களின் கூட்டம் ராஜப்பிரதிநிதிஸ்தானத்திலும் இருக்கிறார்கள். ஆயினும் இவர்களனைவரும் கண்ணுக்கு மறைவாகவே இருந்து வேலைசெய்து வருவர். சாமான்ய ஜனங்களுக்கு ஞானோபதேசம் செய்யும்பொருட்டுத் தமது சிஷ்யர்களில் சிலரை ஜனிக்கச்செய்து, லோகத்தில் உத்தமர் சிலரை அவர்களது சிஷ்யர்களாக்கி, அவர்மூலம் அஞ்ஞானிகளுக்கு ஞானத்தை உபதேசித்துப் பக்தியைப் பெருக்கி, உலகில் ப்ரம்மவித்தை மறைந்துபோகாமல், காப்பாற்றுகிறார்கள். இவர்களே முன் எடுத்துக்காட்டப்பட்ட பரிபூர்ணராகாத குருக்கள்; இவர்களே காரிய குருக்கள் எனப் படுவர்.

இவர்கள் இவ்வுலகில் ஜனித்துத் தமது சித்தத்தை ஒரு நிலைப்படுத்திக்கொண்டு ஈசுவரத்யானம் செய்வர். பூததயையை நன்றாகப் பழகிக்கொள்வர். காரணகுருவினால் தூண்டப்பட்டுத் தாமும், தம் சிஷ்யரும், யோக்யர்களான சாமான்ய ஜனங்களுக்கு ராஜயோகமார்க்கத்தை உபதேசிப்பர். இவ்வாறு பலரை மேன்மைப்படுத்துவதற்காகவே அவர்கள் பாடுபட்டுச் சிலகாலம் பூலோகத்தில் உழன்று திரிந்து, ஞானத்தைப் பரப்பி, நாளடைவில் ஜீவன் முக்தர்களாகிக் காரணகுருவின் கூட்டத்தைச் சேர்வார்கள். அந்த சிஷ்ய சம்பிரதாயத்தில் சிலரே மஹாத்மாவாகிய காரணகுருவின் தரிசனத்திற்கு பாத்திரர்களாகி, அவரது கட்டளைப்படி பூலோகத்தில் வர்த்திப்பார்கள். மற்றும் சிலர் அவ்வித உத்தம பதவியை அடையாதபோதிலும், அவரது அநுக்ரஹத்திற்கு பாத்திரர்களாகி, உலகில் ஞானம் விருத்தியாகும் பொருட்டு பாடுபடுவார்கள். உலகில் ஸத்புருஷராகி ஞானத்தை அடைய ஆசை உடையவர்க்குத் தற்செயலாய் யாரோ ஒரு புருஷன்வந்து அவரது மனச்சந்தேகங்களைப் போக்கி, நல்போதனையை அவருக்குச் செய்துபோவதை நாம் பார்த்திருக்கிறோம். இப்படி நன்மார்க்கத்தைக் காட்டிய புருஷர்கள் காரணகுருவின் உத்தரவினால் வந்தவர்களெனலாம். இப்படி காரணகுருக்கள் பலவிதமாக ஜீவர்களை சன்மார்க்கத்தில் நடக்கும்படி செய்வர். அவற்றுள் சிலவழிகள் முக்யமாக இதில் காட்டப்படும்.

(1) தேச காலாநுகுணமாகத் தங்களுக்குள் ஒருவர் பூலோகத்தில் அவதரித்தாவது, இல்லாவிட்டால் தமது முக்ய சிஷ்யர்களை அவதரிக்கச்செய்தாவது, ஜீவகோடிகளுக்கு, பக்தி ஞானவைராக்ய மார்க்கங்களை உபதேசித்து, ஜீவர்களைப் பரிசுத்தர்களாகச் செய்வர்.

(2) ஜீவன் முக்தர்களாகிய காரணகுருக்கள் சூக்ஷ்ம சரீரத்தைத் தரித்து, மனிதரின் அக்ஞான இருளை பார்த்துக் கருணைகூர்ந்து அதைத் தொலைக்கும் எண்ணத்துடன் அவரது ஹ்ருதய கபாடத்தின் அருகில் காத்துக்கொண்டிருப்பர். அம்

மஹாத்மாக்களுக்கு எல்லா ஜீவரிடமும் கருணை சமமாக இருந்தாலும், ஜீவர்கள் பலர் தமது காமக்ரோதாதிகளாலும், அகங்கார மமகாரங்களாலும் அவருடைய அநுக்ரகத்தை அடையக்கூடாதவராவர். சூரியனுடைய ஒளி எல்லார் வீட்டிலும் நுழைந்து பிரகாசிக்கத் தயாராயிருக்க, வீட்டுக்கு உரியோன் வீட்டை தாழ்ப்போட்டுக் கொண்டால், அவ்வெளிச்சம் அவ்வீட்டில் புகாதல்லவா? ஆயினும், சூரிய வெளிச்சம் கதவண்டை யிருந்துகொண்டு இருட்டைப் பொறுக்கக்கூடாது க்ரஹஸ்தன் எப்போதேனும் கதவைத் திறந்தால், அப்போதே வீட்டினுள் நுழைந்து, இருட்டைப்போக்கி, வீட்டை ப்ரகாசிக்கும். இதுபோலவே, மனிதரது ஹ்ருதயங்களுக்குக் காமக்குரோதாதிகளும், அகங்கார மமகாரங்களும் தாழ்ப்போல இருந்து, காரணகுருக்களை ஹ்ருதயத்தில் பிரவேசிக்க ஒட்டாமல் தடுக்கின்றன. எப்போதேனும் ஜீவர்கள் காமக்குரோதாதிகளைச் சிறிதுவிட்டு, ஹ்ருதயத் தாழ்க்கோலைத் திறந்தால், தயாநிதிகளாகிய அம்மஹான்கள் ஹ்ருதயத்தில் பிரவேசித்து, அக்ஞான இருளைப்போக்கி, பக்தி ஞானவைராக்யங்களை நன்ருய் அபிவிருத்தி அடையும்படி செய்து, காலக்ரமத்தில் அவர்களுக்கு ப்ரத்யக்ஷமும் ஆவர். ஆகையால், இந்த ஜீவன் முக்தர்கள் சர்வகாலங்களிலும் ஜீவர்களைத் தம் ஞானத்ருஷ்டியால் பார்த்துக்கொண்டே யிருக்கிறார்கள். எந்த ஜீவனுடைய ஹ்ருதயத்தில் பக்தி ச்ரத்தைகளும், பூததையையும் ஒளிர்கின்றனவோ, அந்த ஜீவனைத் தம் ஞானக்கண்ணால் பார்த்து அவன் அழையாமலே, பசித்த குழவியிடம் தாய் பரிந்துவந்து ஊட்டுவதுபோல, ஓடிவந்து ஞானோபதேசம் செய்து போவார்கள். திவ்யதரிசியாகிய நாரதமுனிவர், த்ருவர், ப்ரஹ்லாதாழ்வார் இவர்களுடைய ஹ்ருதய சுத்தத்தைத் தெரிந்துகொண்டவர் அவர்களிடம் வநது, மிக்க கருணையுடன், த்ருவருக்குக் கானகத்திலும், ப்ரஹ்லாதாழ்வாருக்குக் கர்ப்பத்திலும் உபதேசித்தா ரல்லவா? மற்றும், பரீக்ஷித்து மஹாராஜனிடம் தயாநிதியாகிய சுகப்ரும்ம மஹரிஷி அழையாமலே வந்து, ஸ்ரீமத் பாகவத புராணத்தைப் போதித்தா ரல்லவா? அவ்விதமே, இவர்கள் பரிசுத்த ஆத்மாக்களுக்கு

ஞானோபதேசம் செய்ய இப்போதும் வருவதற்குத் தயாராய் இருக்கிறார்கள். அம்மஹாத்மாக்களின் அநுக்ரகத்திற்குப் பாத்திரராயுள்ளவர்கள் இக்காலத்திலும் இவ்வுலகில் சிலர் இருக்கிறார்கள்.

## சிஷ்ய தர்மங்கள்.

மஹாத்மாக்களின் அநுக்ரகத்திற்குப் பாத்திரர்களாக விரும்பும் சிஷ்யர்கள் பரிபூரணர்களாகிய காரணகுருவைப் போலாவதற்கு முயலவேண்டும். குரு பரிபூர்ண தயா ஸ்வரூபராகவும், பரிசுத்தராகவும் இருப்பார். ஆதலின், சிஷ்யனும் தயா ஸ்வரூபனாவதற்கும், பரிசுத்தனாவதற்கும் முயலவேண்டும்; காமக்குரோதங்களையும், அஹங்கார மமகாரங்களையும், விஷய ஆசைகளையும் போக்கிக்கொள்ளவேண்டும். இவ்வாறு செய்வதற்கு முக்ய சாதனமாக உள்ளது த்யானமே. த்யானமென்றால் காரண குருக்களையாவது, ஈசுவரனையாவது மனதில் நிறுத்தி, ஸர்வகாலங்களிலும் ஸர்வ அவஸ்தைகளிலும் பூஜித்து சேவிப்பதாகும். எந்த மூர்த்தியின் கல்யாண குணங்களை மனதில் தியானித்துத் தான்செய்யும் தொழில்களில் ஒருவன் அவற்றை தினம் வழக்கப்படுத்திக் கொள்ளுகிறானோ, 'யத்பாவம் தத்பவதி' என்றபடி, அவன் அந்த மூர்த்தியின் பாவத்தை அடைகிறான். அதனால் ஒருவன் சாந்தமும் இந்திரிய நிக்ரகமும் நிறைந்த குருவை த்யானித்தால், அவன் அவரைப்போலாவான். ஈசுவரனையாவது குருவையாவது தியானித்தால், அவருடைய தேஜஸானது தியானியின் மனதில் பிரவேசித்து, அவனது இல்லறப்பற்றைப்போக்கும். வேப்பிலையைத் தின்றதால் அடையும் கசப்பு சர்க்கரையைத் தின்பதால் எவ்வாறு தொலையுமோ, அவ்வாறே கோபசுபாவமுடையவன் ஈசுவரனை சாந்தமூர்த்தியாக தியானித்தால், அவனது கோபம் தணிந்துவிடும். காமியாகவுள்ளவன் காமனை எரித்த கடவுளாகிய ஸதாசிவனை தியானித்தால், அவன் காமப்பற்று நீங்குவான். இதுபோலவே, இதர துர்க்குணங்கள் நிறைந்தோரும் அவ்வக்குணங்களுக்கு விரோத குணங்களையுடைய ஈசுவரனை தியானித்தால், அவரிடம் அந்தந்த துர்க்குணங்கள்

நசித்து நற்குணங்கள் பெருகும். இதில்லாமலும், பக்தன் ஸர்வ பூதங்களிடமும் சமபுத்திகொண்டு, ஸர்வ ஜனங்களும் மேன்மை யடையும்பொருட்டு தியானம் செய்யவேண்டும். இவ்வாறு தியானிப்பவனிடமும் சுயநன்மையும், அகங்காரமும் பூர்த்தியாக நசித்துப்போகும் அவனும் பரிசுத்தனுவான். அப்போது அவனுக்குக் காரணகுருவின் தரிசனம் கிடைக்கும். ஆதலின், பக்ஷிகள் பறப்பதற்கு இறகுகள் கருவியாவதுபோல பூதஸேவையும் ஈசுவர தியானமும் மேன்மை பெற விரும்பும் சிஷ்யனுக்கு முக்ய சாதனமாகின்றன. மனது தன்வசப்பட்டாலொழிய இவைகளை அநுசரிப்பது ஒருவனுக்கு சாத்யமன்று. மனதில் சலனத்தை விளைவிப்பவை இந்திரியங்களாதலின், முதலில் அவ்விந்திரியங்களை வசப்படுத்திக் கொள்ளவேண்டும். அதன்பிறகு சஞ்சல ஸ்வபாவமுள்ள மனதை விஷயங்களிற் புகாமல் அடக்கி ஒருநிலைப்படுத்துவது எவனுக்கும் கைகூடும். இவ்வாறு ஒருநிலைப்பட்ட மனதினால் தியானம்செய்து, ஈசுவரனது அநந்தகல்யாண குணங்களை எப்போதும் மனனம் செய்துகொண்டு, அக்குணங்களை நாம் பழகவேண்டும். அவ்வாறு பழகிவந்தால், படிப்படியாக சாதனசதுஷ்டயம், அதாவது நித்ய நித்யவஸ்து விவேகம், வைராக்யம், சமாதிஷட்கஸம்பத்து. முமுக்ஷுத்வம், என்ற நான்கு சாதனங்களும் நமக்குக் கிடைக்கும். இச்சாதனங்கள் நான்கையும் அடைவதற்கு சாத்விக ஆகாரங்களைப் புசிப்பதும், ராஜஸ தாமஸ ஆகாரங்களை நீக்குவதும், பிரம்மசரியமும் அவசியம்.

இவ்வாறு தர்மங்களை சிரத்தையுடன் ஒருவன் அநுஷ்டித்துவந்தால், அக்ஞானமாகிய இருளும் தாமசகுணங்களும் அவனிடம் நீங்கும்; அவனும் ஞானதிருஷ்டியை அடைவான். ஜோதிஸ்வரூபனாகிய காரணகுரு நேரில் அவனுக்குக் காட்சி தந்து, பரிபூர்ண ஞானோபதேசம் செய்து, குமாரகுருவாகிய மஹாதேவனுடைய பாதபத்மங்களின் தரிசனத்தைக் காண்பித்து, பிரம்மானந்தத்தை அடையச்செய்வர்.

---

## அதிகாரம் 4.

---

### கடவுளின் இச்சையாகும் ஜகத்பரிபாகமார்க்கத்தை நிறைவேற்றிவரு மதிகாரிபுருஷர்கள்.

கடவுளால் வகுக்கப்பட்ட இப்பிரபஞ்சத்தின் பரிபாகமார்க்கமானது இயற்கையில் ஆகரவற்றுத் தானேயாடுஞ் சாட்டையில்லாப் பம்பரம்போன்றதோர் ஜடரூபமான வியவஹாரமன்று; பின்னைச் சேதனத்தின் பஹிர்முக விலாசமேயாகிய இப்பரிபாக மார்க்கத்தில் தமக்களிக்கப்பட்டிருக்கும் 'மாதிரிகளுக்'கிணங்கப் பலவுருவங்களை நிர்மாணித்துக்கொண்டு வருவதற்கென வறிவுடை யேவலாளிகள் பலர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். உலகினிற்காணப்படு மெல்லா வஸ்துக்களும் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மாதிரியல்லது 'அச்சி'ன் படியேயன்றோ உருவாக்கப்பட்டு வருகின்றன.(1)

இவ் வுலகி னபிவிருத்தி முறையில் பரமனது இச்சையை நிறைவேற்றிவரும் மேற்கூறிய ஏவலாளிகளாகும் அதிகாரிபுருஷர் யாவரும் சேர்ந்த மஹா சங்கத்திற்கே "வெள்ளியம்பலம்," "பொன்னம்பலம்," "முக்திதரும் தெய்வசபை," "பழவடியார்களின் திருக்கூட்டம்," என்பனவாய பலவித நாமதேயங்க ளளிக்கப்பட்டிருக்கின்றன.(2) உலகந்தழைக்குமாறு நடனஞ்செய்யுந் திருவருளின் பிரவாகத்திற்கும் மானிடர் முதலியன வாழும் இப் பிரபஞ்சத்திற்கு மத்தியிலிம் மஹாபுருஷர்களே ஓர் பெரும் பிணைப்பாய் நிற்கின்றனர். உலகி னபிவிருத்திக்கு வேண்டிய சமஸ்த சக்திகளும் கடவுளிடமிருந்து இவ் வதிகாரிகளாகும் கால்வாய்களின் வழியே வருஷிக்கப் படுகின்றன. இப் பெரியோர்கள் உலகத்தின் க்ஷேமார்த்தம் பிரத்தியக்ஷ வப்பிரத்தியக்ஷமான பலவழிகளில் உழைத்துவருகின்றார்கள்.(3)

---

(1) "வடிவனைத்துந்தந்த வடிவில்லாச் சுத்தவான் பொருளே" (தாயுமானவர்.)

(2) "முத்திதருந் தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாருஞ்சகத்தீரே" (தாயுமானவர்)

(1) முழுமுதலே, யைம்புலனுக்கு மூவர்க்கு மென்றனக்கு வழிமுதலே, நின்பழவடியார் குழுமிக்கெழுமுதலே! (திருவாசகம்.)

(3) "இருத்திய கர்த்தராயிலம்படைத் தெம்மையாள்கின்றபேர்" (தாயுமானவர்.)

ஆதலின் உலகரக்ஷணமாம் பெருங்காரியத்தின் நிருவாஹகர்களான இப்பெரியோர்களுக்கு சகாயஞ் சேவைகளைப்புரிதற்கென அவர்கட் கடிமைபூண் டொழுகும் பாக்கியத்தைவேண்டி யத்தனிப்பவர்க ளடையலாம்.

இனி, பூரணத்தன்மையெனும் முக்தியடையுமுன், மானிட பதவியையடைந்த ஒவ்வொரு ஜீவனும் முதலில் காட்டுமிராண்டி, நாகரீகன், உயர்லெக்ஷியமுடையோன், பின் முக்தராம் குருதேவர்க்குச் சீடன், அப்பால் வெள்ளியம்பல மஹாசபையின்கண் பிரவேசமெய்தப்பெற்ற ஞானசாதகன், ஆகிய விப்பதவிகளனைத்தையும் கடந்தே முடிவில் முதிர்ச்சியடைந்த ஞானியாதல்வேண்டும். எப்பொழுது இவனுக்கு ஞானசபையினுட் பிரவேசங்கிடைத்ததோ அன்றேயிவன் உலகமாளும் சம்ரக்ஷகர்களான ஞானிகளின்குழாத்து ளொருவனுகிறான்.(1) அப்பால் ஞானத்தின் முதிர்ச்சியைப்பெற்று முக்தியடைந்தபின்னர் உலகசம்ரக்ஷண மஹா ராஜ்யத்தின் பொறுப்பைத் தாங்கிய மேற்கூறிய ஞானசபையாருள் தானுமொரு அதிகாரியாகி அவ்விராஜ்ஜியத்துளொரு விபாகத்தையே (டிபார்ட்மெண்டு) நிர்வகிக்கும் உத்தியோகஸ்தனுகிறான்.

இவ்வுலக பரிபாகத்தில் சடமுதல் மானிட வகுப்புகள் வரை சகல வஸ்துக்களும் அபிவிருத்தியடைந்து வருதல் யாவும் இவ் வெள்ளியம்பல மஹாசபையினராகிய பெரியோர்களது பாதுகாப்பின் மகிமையாலன்றோ! இப் பூமியில் பெருங்கண்டங்கள் சமுத்திரங்களுக்கு மேல் நீர்வற்றிக் கிளம்புவதும் பின்னரவை யடங்கி நீருண் மறைவதும் இவ் வதிகாரி புருஷர்களின் ஆக்ஞையாலே நிகழ்கின்றது. உலகிலெங்கும் ஜெந்துக்கள் ஒன்றோடொன்று கலகமிட்டுப் போட்டி போட்டு நின்றே தத்தம் வாழ்வை நடத்திவருதலையும், இடைவிடாதெங்கும் காணப்படும் இக் கலகங்களில் பலஹீனங்கள் சிதைவுண்டு பலமுடையவைகளே எஞ்சிநிற்றலையும், இவ்வித பல சரீரங்களினுறையும் ஜீவர்களின் பரிபாகம் இச்சரீரங்களாற் றடைபடாது விரைவில் மேலோங்கிச்செல்லும் வண்ணம் மேற்கூறிய மஹாபுருஷர்களே

---

(1) என்றைக்குமழியாத சிவராசயோகமா யிந்திராதிதேவர்களெலாம், விஜய ஜய ஜய வென்ன வாசிசொலவே கொலுவிருக்கு நம்பெருமை யெளிதோ, வேதாந்த சித்தாந்த சமரஸநன் னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே.

ஏற்படுத்துகின்றனர். உலோகங்கள், கந்தமூலம், மிருகம் இவற்றின் அபிவிருத்தியில் ஒவ்வொரு படியிலும் கடவுளினிச்சையாம்பிர பஞ்ச விகாஸமுறையினொழுங்கை நிறைவேற்றுமோரே நோக்கம் பெற்று ஒப்பிலாவிழிப்புங் கருணையுங் கொண்டோரா யாவற்றையும் சம்ரக்ஷித்து இயற்கையிற்றோன்றும் சகல சக்திகளையும் ஆட்டுவிப் போரும் அவர்களேயாவர்.

இவ்விதமே மானிடரது வாழ்க்கையிலும் சகல வியவகாரங்களை யும் அடக்கியாண்டு வருபவர்களும் இவ்வெள்ளியம்பல மஹாசபை யோரே! இவ் வுலகில் பல நாகரீகங்களை யேற்படுத்திக்கொள்ளுமாறு மானிடரைத் தூண்டிவருவோரும் இவர்களே. உலகிலுள்ள பலவ கைச்சாதியாரும் சேர்ந்து ஆடும் இப்பிரபஞ்சநாடகத்தில் ஒவ்வொரு தேசத்தாரும் கைக்கொள்ளும் தொழிலுக்கேற்ற யோக்கியதைகளை யுடைய மாந்தர்களையும், அம்மாந்தர்களின் மூலமாய் தகுந்த கல்வி கேள்விகளையும் அவ்வத்தேசத்தின்கண் பிறப்புறச்செய்தலும் இம் மூத்தோரின் காரியமே. பற்பல நாடுகளில் பொதுக்ஷேமத்தைக் கோருமுபகாரிகளாகியுழைத்துவரும் ஆசாரியர்கள், புலவர்கள், சிற்ப மாதி கலையுணர்ந்தோர், ராஜ்யதந்திர நிபுணர்கள், பிரத்தியக்ஷவிசா ரணையுடையோர் ஆகிய இத்தகையினர் யாவருக்கும் அந்தரங்கத்தில் நின்று உத்ஸாகம் ஊட்டுவருபவர்களே. இம்மட்டோ! மானிடருட் பெரும்பாலாரின் தம்பாடு பார்த்தலாகும் ஸ்வயநயம் பாராட்டும் தன்மை, பிறர்க்குத்தீங்கிழைத்தலாங்குணம், இவற்றையுங்கூட உலக காரியங்களிற் சிற்சிலவற்றை முதலில் சிதைவுறுத்திப் பின்னர் அவற் றையே முன்னிலுமழகுபெற்று விளங்குமாறு நிர்மாணம்செய்வதற்கு இவ் வதிகாரி புருஷர்களே உபயோகித்து வருகின்றனர். இவ்விதம் மனுஷ்யசமூகத்தின் பரிபாகத்தில் ஒவ்வொரு படியுமே கடவுளால் வகுக்கப்பட்டு அவனது ஏவலாளர்களாம் இப் பெரியோர்களால் ஒழுங்குடன் நிறைவேற்றப்பட்டு வருகின்றது. ஆதலின் நம் மானிட வகுப்பார்களாகிய அறுநூறுகோடி ஜீவர்களின் யோகக்ஷேம முழு மையும் இவ் விருஷிகளினதீனத்திற்றான் வைக்கப்பட்டிருக்கின்றதென் பதை நாம் அறிதல்வேண்டும். (1) ஆதலின், கடவுளின் சங்கற்ப விச்

(1) அருமைபெறுபுகழ்பெற்றவேதாந்தசித்தாந்தமாதியாமந்தமீது,
மத்துவிதநிலையாயென்னையாண்டென்னடிமையானவர்கள்நிதிநாடுந்,
திருமருவுகல்லாலடிக்கீழுமுனர்கின்றசித்தாந்தமுத்திமுதலே.
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியேசின்மயானந்தகுருவே'(தாயுமானவர்.)

சையே இஞ்ஞானமூர்த்திகளா மதிகாரிபுருஷர்களிடம் விளங்கி யிப் பிரபஞ்சத்தின் சகல காரியங்களையும் எழில்பெற நடாத்திவருகின்றது.

ஆகவே யிப்பெரியோர்க்கு அடிமையாகித் தொண்டுசெய்வோன் கடவுளின் தொண்டனேயாவனென்பதற்கு ஐயமுளதோ ! இதனுல் மேம்பாடுடை யுயர்நோக்கம்பூண்டவெவனு மறிந்துணரவேண்டியது யாதெனில் இவ்வுலகத்தையாண்டு ரக்ஷித்துவரும்மேற்கூறிய தெய்வ சபையில் கீழ்ப்படியிலுள்ளோர் யாவருக்கு மூத்தோருள் ஒருவராய் நிற்பவரே குருதேவனுவர் என்பதே. இக்காரணங்களால் ஜீவன்முக்தனும் குருநாதனைத் தேடியடைந்த புருஷனெவனும் கடவுளுக்குச் சமீபம் வந்தடைந்தவனேயென்பது பெறப்பட்டது.



# அதிகாரம் 5.

---

## குருதேவரின் பிளான்.

நெசவுதொழிற்கென வமைக்கப்பட்டதோர் "தறி" யின்கண் அளவற்ற நீட்சியுள்ளனவாய் எண்ணிறந்த நூற்சரடுகள் அதன் "பாவு" எனப்படும் விபாகத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றனவெனவும், இவ்வொவ்வொரு நூலும் தனித்தனி நோக்குமிடத்துச் சிறிதேனும் வர்ணமுடையனவாய்த் தோன்றாவிடினும் "அப்பாவிடையாடும் குழவி" யுள்ள ஊடு எனும் குறுக்குச்சரடொன்றோடு சம்பந்தப்படும்பொழுது குறிப்பிட்டதோர் வர்ணத்தை வெளிப்படுத்துமியற்கையுடையனவாய் அமைக்கப்பட்டிருக்கின்றனவெனவும், நீர் சற்றே பாவித்துக்கொள்வீராக. இவ் "ஊடு" எனும் குறுக்குச் சரடு அளவிறந்த நீட்சியுமுள்ளதாகிப் பாவினது நூல்களின் மத்தியிற் குறுக்கே யுள்ளும் புறமும் சென்றுசென் றோடிவருவதாலேயே வஸ்திரங்களின் பற்பல 'ரகங்க' ளல்லது தினுசுகள் சிருஷ்டிக்கப்படுகின்றனவன்றோ. இவ்வித தினுசுகள்யாவும் முன்னரே யாக்கப்பட்ட மாதிரிக் கிணங்கவேயன்றோ அந்த நெசவுகாரனுக் தொழிலாளியால் உருவாக்கப்படுகின்றன. இத்தறியின் பாவினது கோடிக்கணக்கான நூல்களெனப்படுவது மானிட ஜீவர்களாகும்; ஊடெனும் குறுக்குச் சரடென்பது கடவுளின் பிராணசக்தியே யாகும். இனி இத்தறியில் நெய்யப்படுந் தினுசெனப்படுவதோ ஜெகத்தின் பரிபாகமாகும். அதற்கு மூலாதாரமான மாதிரியாவது கடவுளது சங்கற்பத்தில் இவ்வுலகமெவ்விதம் பூரணமடைந்து விளங்க வேண்டுமென்றிருக்குமோ அந்நோக்கம் அல்லது கருத்தேயாகும்.

ஏனெனில், தான் முதலில் தீர்மானித்து முடித்துக்கொண்டிருக்குமோர் பிளான் அல்லது மாதிரிக்கிணங்கவேயன்றோ! கடவுளும் தன் சேதனத்தை மானிடசமூகத்தின்கண் உள்ளும் புறமுமோட்டுவித்து, அந்தர்யாமியாகித் தான் சம்பந்திக்கும் பிரதி ஜீவனையு மோர் நூதன வர்ணமல்லது பிரகாசத்துடன் விளங்கும்படி தூண்டுகிறார். இவ்விதம் குறிப்பிட்ட வர்ணமாம் பிரகாசம் ஒவ்வொரு நூலாகும் ஜீவனிடத்தும் வெளிக்கிளம்பினாலன்றோ! தறி

யினில் செய்யப்பெறுந் தினுசும் தறிகாரனுருங் கடவுளினுத்தேசத்திற்கு மாறுபடாததாயிசைந்து நிற்கும். எங்கு தனியான சரடாம் ஜீவனு மூலகாரணனும் நெசவுகாரனது உத்தேசத்திற் கிணங்காது வர்ணமெனும் பிரகாசமற்று விளங்குவதோ, அங்கெல்லாம் அத்தனிநூலுடை "தினுசு"ம் அம்மட்டிற் குறைவடைந்து கடவுளாந்தறிகாரனுசைகொண்ட "மாதிரி" யைப் பூரணப்படுத்தாமல் நிற்குமன்றோ!

இனிக் கடவுளோ டைக்கியமுற்ற குருதேவரும் உலகமெனுந் தறியின்கண் நெய்யப்பட்டுவரும் தினுசின் மூலகாரணமான நெசவுகாரனுங் கடவுளின் உத்தேசமல்லது மாதிரியை நன்குணர்ந்தவராவர். ஆதலின் ஒவ்வொரு தடவையிலு மித்தறியின்கண் ஊடு பாய்வதுபோல் பரமனது விலாசம் பிரபஞ்சத்திலு முட்புகுந்தாடும் பொழுதெல்லாம், அச்சோதியினூடுறையும் பிரதி மானிடனும், ஈஸ்வர சங்கற்பத்தி னுத்தேசத்திற்கிணங்க நூதன பிரகாசத்தோடு விளங்குமாறு அவ்வச்சீவர்க்கு அந்தரங்கத்தி னுபகாரம் செய்துவருதலே அவரது தொழிலாகும். இப்பிரபஞ்சமார்க்கத்தில் நாமானந்தமடைதலும் கடவுளோ டிணக்கமடைந்தொழுக வரலாற்றுன் சித்திக்குமன்றோ!

இனிக் குருநாதனது பிரபஞ்ச வுபகாரச்செயல்கள் யாவும் பிரத்தியக்ஷ வப்பிரத்தியக்ஷ விதங்களில் நடந்தேறுகின்றன. அவனது தொழிலிற் பெரும்பாகம் சூட்சும வுலகங்களிலேயே நிகழ்கின்றன. ஏனெனில் சகல ஜீவர்களி னந்தரங்க வியவகாரங்கள், பிரபஞ்சவியற்கையின் மூலகாரணங்களிவையாவும் நிறைவேறிவருவது சூக்ஷம ஸ்திதிகளாகும் உயருலகங்களிலன்றோ! அந்நிலைகளிற்றான் மானிடர் முதலிய சகலப் பிராணிகளுக்கு மவ்வவற்றினபிவிர்த்திக் கின்றியமையாத சேதனமாதி சக்திகளைக் குருதேவரினனு மேற்பதவிகளினின்றும் வருவித்தளிக்கிறார். குருதேவரென்பார் கேவலம் பூரணத்தன்மையடைந்ததோர் மானிடர் மாத்திரமேயன்று; பின்னைக் கடவுளது சேதனமாம் பிரவாகம் பிரபஞ்சத்து ளெங்குமோடிப் பரவுதற்கெனவே யமைந்த நேர்வழியான கால்வாயுமாவரன்றோ! தொட்டால் திடீரென வுயிர்வாங்கிவிடு மிக வுயர்தர வீரியம்பொருந்தியதோர் மின்சாரவோட்டத்தை (" ஓட்ட

மாற்றி") எனுமோர் யந்திரம் தன்னுளிழுத்துக்கொண் டஃதை மாற்றி வீரியந் தணிந்ததாக்கி யபாயமன்றி மனிதருக் குபயோகமா கும் வழிகளிலுதவுமாறு செய்துவிடுவதுபோல், குருதேவனும் யாவர்க்குமெட்டாக் கடவுளின் வீரியத்தையும் தன்னியற்கையில் தாபித்துக்கொண்டு மாற்றி, மானிட கோடிகளுக்குப் பிரயோஜனப் படும் பலவழிகளிலெல்லாம் பொழிந்து வருகின்றனர். சகல செடி கொடிகளின்மீதுஞ் சூரியன் எப்பொழுதுந் தன் கிரணங்களைச் சொரிந்துகொண்டே நின்று, அவைதாந்தாம் இலைமலர்களைப் பக்கு வப்படுத்தி வெளிக்காட்டும்படி செய்துவருவதுபோன்றே, ஸ்ரீ குரு தேவனு மப்பிரத்தியக்ஷமான மேலுலகங்களில் சகல ஜீவசமூகங்களு மபிவிர்த்தி யடைந்தோங்கி வருமாறு, அவற்றின்மீதிடைவிடாது தஞ்சத்தியாங் கிரணங்களை வருஷித்தருளுகின்றனர்.

இனிச் சாமானியரான மன்பதைகளைக்காட்டினும் விசேட பக் குவமடைந்த சிற்சில மானிடர்க்குத் தனியாய் உத்ஸாஹமுதவிகளைக் குருதேவன் புரிவது மிவ்வுண்ணிலைகளினின்றே! ஒருவன் உயர் நோக்கம்படிந்த வுள்ளங்கொளின், உடனே யவரது திருஷ்டிக்குப் புலப்பட்டு அவரிடமிருந்துதவியைத் தானறியாமலே யடைகிறான். நற்காரியங்களில் மிகுந்த வூக்கமடைந்த மனந்தளராத் தன்மை யுடன் அவற்றைச் சாதித்துக்கொள்ளும்படி யந்தரங்கத்தில் பரிசுத்தி தைரிய மிவற்றை யிவனுக்குக் குருநாதரே யுண்ணிலைகளிலளிக்கி றார். ஆதலின் மானிடத்திற்குரிய எவ்வழியிலாயினு மிவ்வுலகில் பிறர்க்குதவிபுரியு நற்சிந்தையுடையோர் யாவராயினு மெவ்விடத்தி லாயினு மிஞ்ஞான மூர்த்திகளின் திருஷ்டியில் தென்படாமலு மவர் களா லுபகரிக்கப்படாமலு மிருப்பவர் கிடையாரென்பதே யுண்மை.

இவ்விதமே குருதேவர் பஹிரங்கமாகவு முலகினருக் குதவி புரிய வுடன்படுஞ் சமயங்களுமேற்படும். அஃதெப்படியெனிற் கூறுவாம். ஜகத்தின் பரிபாக மார்க்கத்தி லவ்விதம் நிகழவேண்டு மெனக் கடவுளின் சங்கல்பமுமிருப்பின், இவர்களும் மானிடர் மத்தி யிலவதரித்தவராகி யவர்கட்கு நீதிமுதலிய சட்டங்களை யேற்படுத்தி யுஞ் சகல தர்மங்களையும் பிரத்தியக்ஷமா யுபதேசித் துத்ஸாஹப் படுத்தியும் வருவார்கள். அவ்வித மிப்பரதகண்டத்தில் வெளி

பட்டு மானிடரொடு மானிடராய் வசித்துவந்த மஹாபுருஷர்களே யன்றோ! மனுவும் புத்தருங் கிருஷ்ணனும். இப்படியே 'கிரீஸ்' தேசத்தில் 'பைதகோராஸ்' என்னும் பெரியோரும், 'பாலஸ்தீன்' நாட்டில் கிரிஸ்துவு நடித்துக்காட்டி வந்தவர்கள். இம்மட்டோ! இக்காலத்திலுமிப்படியே அதி சமீபத்தில் ஜகத்குருவாம் நாதனை முன்னே கொண்டவர்களாய இஞ்ஞான நிதிகளிலநேகர் இவ்வுல கினிற் றேன்றி, நமக்குபதேசிக்கவும் நம்மை நன்னெறிக் குய்ப்பிக்க வுமே நம்மத்தியிற் சஞ்சரித் தருளுவார்களென்பது திண்ணம்.

இன்னுமோர் வழியிலுங் குருதேவர் தஞ்சோதரராகு மானிடர்க் குதவிபுரிந்தருளுவர். அஃதெதன்னையெனில் மானிடரிற்றகுதியடை ந்த சிலரைத்தனது சீடராகவங்கீகரித்துக் கொள்ளலே யென்க. என்றைக்காயினு மொருநாள் குருதேவனுக்குகந்ததோர் சீடனாதல் வேணடுமெனுமவாவு நமக்கிருத்தலால் அவ்விதமவரது அங்கீகாரத் திற்கவசியமான சாதனங்கள் யாவையென நீர் விசாரித்துணருதல் வேண்டும்.



# அதிகாரம் 6.

---

## சீடபாவம்.

ஜீவன் முக்தனும் குருநாதனிடம் சீடனாயடைக்கலம் புகுதல் மிக மேன்மைபொருந்தியதோர் பாக்கியமேயாயினும் அவ்விதஞ் சீடனாகாது நிற்றலொரு குற்றமாகுமென்பதூஉம் அதனாலுமக்குத் தண்டனையல்லது துன்பமேதேனும் விளையுமென்பது மில்லையென நீர் முதலிலறிந்துகொள்ளல் வேண்டும். ஏனெனில் நமது பரிபாகத்திற்கு நாமே அதிகாரிகளாதலின் அதை நடாத்தி வருவதிற் பூரண சுதந்திரம் நமக்குண்டென்பதற்குத் தடையுமுண்டோ? அஃதென்னவெனில் நமது பரிபாகம் துரிதமாய் நடந்தேறுதற்கு நமது சொந்தமுயற்சி மிகவு மின்றியமையாததேயாயினும் அதைமுழுமையும் தடுத்து நிறுத்திவிட நம்மாலியலாதென்பதுண்மையென்க; ஏனெனில் சர்வப்பிரபஞ்சவதிகாரியாகிய கடவுள் இங்குள்ள சகலமுமபிவிருத்தியடைந்து மேற்செல்லவேண்டுமென வுத்தேசித்திருக்கின்றமையின், அவனது இச்சைக்குமீறிநிற்றல் நமக்கசாத்தியமாகுமன்றோ! இனி, ஜீவன் முக்தராகு மஹாபுருடர்களுளரென்பதை நம்பாது நின்றால் நமது பரிபாகத்திற்குத் தடையேற்படுமோவென்பது மில்லை. தம்மிடத்தில் நமது நம்பிக்கை முதலியவற்றை யெதிர்பாராமலே அப்பெரியோர் நற்குணமுள்ளோர் யாவரையும் புரப்பதுபோல் நம்மையுமாதரித்து வருவர். ஆனால் இந் நம்பிக்கைகொண்டு அவர்களுக்கடிமை பூணுவீராகில் நமது பரிபாக மதிதீவிரமாய் மேற்செல்லுமென்பதுண்மையாகும்.

இனி குருதேவன் மானிடர் சகலரிடமும் பேரன்பு பூண்டவராதலின் தன தன்பிற்கிலக்காம் அம்மானிடகோடிகளின் மத்தியினின்றும் விசேடகாரணங்களிருப்பினன்றி நம்மைமட்டும் தனியாய் மற்றவர்களிடஞ் செலுத்தப்படாததோரதிக வன்பிற்குரிமைகொண்ட சீடனாக்குதலெங்ஙனமமையும். ஆதலின், அதற்கேற்ற விசேட காரணத்தை நீரே முதலில் உற்பத்தியாக்கிக்கொள்ளல் வேண்டும். அக்காரணம்யாதோவெனில் கூறுவேன். உலகம் புரக்கும் அவனது தொழிலில் குருநாதனுக்குத்தக்க வுதவிகளை நீர் செய்யக்கூடியவ

ராதலே யென்க. குருதேவனும் மகாபுருஷனிடம் பேரறிவுமானந்தா னுபவமு நிறைந்திருப்பினு மலையாவற்றையும் சிறப்பித்துக்கொண் டாடியே காலங்கழித்துத திரியாமலவர் பிரபஞ்சநாதனுங் கடவுளின் காரியாதிகளைப் பிரதிபிம்பிஷமும் முழுக்கவனத்துட னிறைவேற்றி வரும் ஓய்விலா உழைப்பாளியேயாவர் என நீரறிந்துகொள்ளல் வேண்டும். இப்பெரிய அதிகாரத்திற்கேற்றவாறு அவரிடமுள்ள சக்தி யுமெவ்வளவேனுங் குறைவிலாததென நமக்குத் தென்படினும், உண்மையி லஃது அவ்விதமானதன்று. பின்னை அவரிடமிருக்கும் சக்திக்குமோரளவுண்டென நாமறிதல்வேண்டும். உலகசம்ரக்ஷணார்த் தம் தன்னிடம் வைக்கப்பட்டிருக்கு மிச்சக்தியாம் தனத்தை பரம னது காரியங்களை நடாத்திவருதற்குத் தகுந்த சௌகரிய முதவிகள் கிடைப்பதாயிருந்தாலன்றி பொருநகடுகளவேனுமிவர் வீணேசெல வழிக்க வுடன்படாரன்றோ. இனிமானிடனொருவனைத் தன்சிடனாக் கிக்கொள்ளற்குக் குருதேவருமவன் பொருட்டுத் தனது சக்தியைச் சிறிது உபயோகப்படுத்தி முயலவேண்டியது மவசியமாகின்றது. ஆதலால் இச்சீவனது நிமித்த மிவ்விதஞ் செலவழிக்கப்படுந் தஞ் சத்தியாம் திரவியத்திற்கு, வேறுவிதங்களிலுபயோகிப்பதைக் காட் டினு மதிகமாய்த் தகுந்த பலன் கிடைப்பதாயிருந்தாலன்றி, யிவனைக் குருநாதனு மாட்கொள்ளத்துணியார். ஆகவே குருதேவர்க்கடிமை யாக விச்சைகொள்ளுவோன் எவனுமுலகிலுள்ள வேனைய சாமானி யரைப்போல் தஞ்சுகதுக்காதிகளையேபோற்றி அவற்றிற்கு வழிகளைக் கோரி நில்லாமல் குருநாதனுலங்கீகரிக்கப்படின், அவரது சுமைகளைத் தானுந்தாங்கி யவர்க்குதவிபுரியுஞ் சுபாவம் அமைந்தவனாயிருத்தல் வேண்டும்.

உலகரக்ஷணத்திலிவ்விதமாய பெரும் பொறுப்புகளைக்கொண்டு நிற்கும் ஒரு முக்தனுங்குருதேவன் தனக்குச் சீடர்களையபேக்ஷிக்குங் காரணமெதுவெனில் அவர்கட்கு ஞானத்தையூட்டி யேனையோரைக் காட்டினு மவரை மேம்பட்டவராக்கிவிடும் பொருட்டன்று; பின்னைத் தான் செய்துவரும் பெருங்காரியத்திலவர்களைப் பழக்குவித்து நாள டைவி லவர்கள் முதிர்ச்சியடைந்து வருங்காலே யதிகமதிகமாயவர் களிடந்தானிப்போது நிறைவேற்றிவரும் கடமைகளை யேற்றுவித் துப்பின்னர் மென்மேலுஞ் செய்துமுடிக்க வேண்டியதாய்க்கிடக்கு

முயர்காரியங்களைக் கவனிப்பதற்குச் சாவகாசமுஞ் சௌகரியமுந் தனக்குச் சம்பாதித்துக்கொள்ளு நோக்கங்கொண்டே யென்க. (1) ஆகவே குருதேவனுமொரு சீடனையங்கீகாரஞ் செய்துகொள்ளுவ தெல்லாமவரது உலகங்காக்கும் வேலைக்குத் தகுதியடைந்தபின்னரவனுந் தனக்குதவிபுரிவனெனுங் கருத்தைப்பற்றியேயன்றி வேறன்று.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் நாமறிந்துகொள்ளவேண்டியது யாதெனில் குருவிற்குச் சீடனாதலைவிரும்புவோனத்தகைய மஹாபுருஷனது பணிவிடைக்குகந்த சாமர்த்தியமல்லது பிரபாவமேதேனு மொன்றை யுடையவனாதல்வேண்டும். கேவல மிவன் தோஷமற்றவனாய்மட்டு மிருந்து விசேடகுணம் அல்லது சாமர்த்தியமொன்றுமில்லானாய்விளங்கி னப்பெரியோருக் கவனாலெவ்வகைப் பிரயோஜனமு மேற்படாதன்றோ! தனது துக்கங்களின் ஒழிவையோ, தனது ஆன்ம பரிபாகஸ்திதியையோ அல்ல திம்மைமறுமையிலதிகார மல்ல துலக சித்திகளையோ, நாடிக் குருவையடையவிரும்புவோனாயினிவன் குருவிற்கே யடிமைபூண்டொழுகுதலு மவருக்குச்சகாயம் புரிதலுமெங்ஙனமமையும்? இவனால் குருநாதன் தொழிற்கிடைஞ்சலுந்தடையும் விளையுமென்பதற்கையமுண்டோ! இத்தன்மையனாஞ் சீடனுக்குத் தெய்வத்தன்மையாளரான குருமூர்த்திகளை வந்தடையும் பரிபாக முதிர்ச்சி இன்னும் பன்னாட்குப்பின்னரே கிடைக்குமேயன்றிச் சமீபத்திற்கிட்டுமோ? இவ்விதமின்றித் தன் சகோதரராம் மானிடரனைவர்க்கு முதவிபுரிந்துவந்திருக்கும் பழக்கத்தால், தன்னறிவையுமன்பையும் பன்னாட்களாய்ப் பெருக்கிக்கொண்டும், மிகவுமுயர்நோக்கங்கொண்ட வுள்ளம்படைத்தவனாகி, யந்நோக்கத்தை யனுட்டிப்பதிலெத்துணைத்தீமையு மபவாதமும்வரினு மவற்றையெல்லாந்தாங்குமுறுதியுடைச் சுபாவம்பெற்றும் ஒருவன் விளங்கிவருங்காலை யின்னு மப்பாற் சிற்சில சாதனங்களையும் சாதித்துக்கொள்ளத் துணிந்தால் மட்டும் குருவானவரிவனை யேற்றுக்கொள்ளுவாரேயன்றி வேறுவிதமில்லை.

(1) நீ ஞானவனன் மூட்டியேகனிவுபெற வுள்ளுருககிப்
பருவமதறிந்து நின்னருளான குளிகை கொடுபரிசித்துவேதி செய்து ஊத்துமாற்றுத் தங்கமாக்கியே
பணிகொண்ட பக்ஷத்தை என் சொல்லுவேன். தாயுமானவர்.

இனி யிச்சாதனங்கள் யாவையோவெனி னவற்றை யானெடுத்துரைக்கக்கூடியதைக் காட்டினும் பன்மடங்கதிகமான தெளிவுடனெனது குருதேவரோ தனது சீடனுமெனது சகோதரனுமாகிய ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தியின் மூலமாய் வெளிவந்திருக்கு மரியதோர் நூலின்கண், உலகங்கடந்தேதறியுய்யுமாறு திருவாய்மலர்ந்தருளியிருப்பதை நீர் விஸ்தாரமாய்க் கண்டுகொள்வீராக. "சற்குரு சரணங்களி"லெனும் பெயர்பூண்ட அவ்வரிய நூலின்கண்ணொவ்வொரு முமுட்சுவு முயன்று சாதகஞ்செய்துகொள்ளவேண்டிய மார்க்கம் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றது. அவற்றை யதிககவனங்கொண்டு படித்துணர்ந்துகொள்வது நங்கடமையேயாகும். அன்றியுமதிற் கூறப்பட்டிருக்கு மொவ்வொருவிஷயமுங் குருநாதர் யதார்த்தமாயுள்ளபடி தங்கருத்தை வெளியிட்டிருப்பதாவேயன்றி யலங்காரமாதிசொற்களின் வன்மையைப்பற்றிச்சிறிது கூட்டியே யதிவருணனையாய்த்தீட்டியிருப்பனவாகாவெனத் தெளிந்துகொள்ளல்வேண்டும். இச் சாதனங்களையே ஞானநிதிகளாகிய சகல பெரியோர்களுந் தஞ்சீடராகவேண்டு மானிடரனைவரும் கைக்கொள்ளல்வேண்டுமென வாக்ளை புரிகின்றனர். ஞானிகள் பலருஞ்சேர்ந்த தெய்வசபையாம் பொன்னம்பல மென்பதொன்றேயன்றோ! இவ்வுலகில் விளங்குகின்றது. அங்குநிகழும் விஷயங்களிவைகளே. இனி யாரம்பத்திலேயே மேற்கூறிய நற்குணங்கள்யாவும் பூரணமாய் நம்மால் கைக்கொள்ளப்படவேண்டுமெனக் குருதேவர் கூறுகிறதில்லை. ஆயினுமென்றைக்காயினுமொருநாள் குருதேவனது மனதிற்கியைந்தசீடனாய் நீரும் ஏற்றுக்கொள்ளப்படவேண்டுமாயின், அக் குணங்களனைத்தையும் சம்பாதித்துக்கொள்ள நீர் முயலுதலேவேண்டும். அவற்றிற் சிறிதேனுங் குறையுமாகில் நமக்கவனதங்கீகாரப்பேறு கிட்டாதென்றே மதித்தின்றுமுதல் நம்மை யவ்வழியில் பழக்கிக்கொண்டு வரத்துணிவதேயுமது கடமை. ஆதலின் நீர் மிகவுமுழைப்புஞ் சுறுசுறுப்புமுடையோராயொவ்வொரு நிமிஷகாலமும் மிகவும் பயனுள்ளதென மனத்தினுன்னிக் காலங்கழிக்கவாரம்பித்து, அதி சமீபகாலத்தில் குருவும் நம்மை யடிமைகொண்டு நமது சகாயத்தை நாடும்பாக்கியம் நமக்குக் கிட்டுமென்ற வெண்ணங்கொண்டு அக் காலை யவரது தொண்டைப் புரிதற்குத்தக்கவாற்றலு நற்சீலமும் நாமடைந்துநிற்குமாறு இந்நாண்முதலே யவ்வழியிற் பழகிவருத லின்றியமையாததாகுமன்றோ?

இனி முக்தி மார்க்கத்தில் பிரவேசிக்க முயலும் நமது விருப்பமும் கைகூடுமாயினக் காலே குருநாதனென் நமக்கேற்படுஞ் சம்பந்தஞ் சிலபருவங்கள் அல்லது படிகளுடையதாகும்; அவற்றுண் முதற்படியாவது குருவானவர் சீடனாக விரும்புவோனைச் சோதனைநிலையில் நிறுத்தியவனைப் பரீட்சித்தறிய வேற்றுக்கொள்ளலே.

(1) எண்ணிறந்த காலமாய் நீர் உயர் நோக்கங்கொண்டவரென்பதைக் கண்ணுற்று நும்மை யிதுகாறுங் கட்டிக்காத்து வந்திருப்பவரும், நும்மைத் தனக்கடிமையாய்ப் பழக்கித் தேற்றுவித்துக் கொள்ள விச்சைகொண்டிருப்பவருமாகிய ஞானமூர்த்தி யெவரோ, அவரே யிப்பொழுது நமக்கு குருநாதனுகித் தனது சித்திபெற்ற பழஞ்சீடருளொருவரையனுப்பி, நும்மைத் தனதருகிலழைத்து வரச் செய்வார். நுமது சரீரம் நித்திரையிற் கிடக்குங்காலைச் சூட்சுமமல்லது காமிகப் பிரபஞ்சத்தில் நீர் குருதேவரிட மழைத்துக்கொண்டு போகப்படுவீர். அச்சமயத்திலவர் ஸ்வயமே நும்மைச் சோதனைநிலையில்வைக்கத் தீர்மானஞ் செய்துத்தரவளிப்பார். இதனுலிப்பொழுதே நீருஞ்சீடனுய்விட்டீரென்பதில்லை பின்னை யச்சீடபாவம் நிறைவேறுதல் குருவினது சோதனைகள் தீர்ந்தபின், உம்மைப்பூரணமான வங்கீகாரத்துடனவரேற்றுக் கொண்டபொழுது தான் நிகழும். இனி யிச்சோதனு நிலையின்கண் நுமக்குநிகழ்வது யாதெனிற் கூறுவேன் தஞ்சீடனுதற்கிருக்கு நும்மை முதன் முதல் பரீக்ஷித்தறிய வேற்றுக் கொண்ட வந்நிமிஷமே குருதேவர் நுமது சூட்சும சரீரங்களத்தனைக்கு மொவ்வினதாய பிரதிமையொன்றைச் சூட்சுமமான பிரகிருதியாலுண்டுபண்ணி அதைத் தனதாசிரமத்தில் வைத்துக்கொள்ளுவார். நிமிஷந்தோறும் நீருண்டுபண்ணிக்கொள்ளும் பலவித நினைவுகளுணர்ச்சிகள், பேராவாக்கள் முதலியவற்றால் நுமதுகாமிகமானசிக

(1) ஞானநெறி நிட்டை கூடவு மெந்நாளுமே,
யறிவினின்று குருவா யுணர்த்தியது மன்றி
மோனகுருவாகியே யகிலமீ துவரவந்த சீரருளை
யைய வையவினியென் சொல்வேன்
சிறிய னேழை நமதடிமை யென்
றுனது திருவுளத்தி லிருந்ததோ. (தாயுமானவர்)
நல்லன் பர்தமைச் சேயாகத்
தொழும்பு கொள்ளுங் கனகனமே
சோதிக்குன்றே! (தாயுமானவர்)

மாதி சரீரங்களிலேற்படு மாறுதல்கள் யாவற்றிற்கு மியைந்தவாறு,
யாதொரு வெளித்தூண்டுதலு மின்றித் தன்படியே யப்பிரதிமையு
மப்போதைக்கப்போது மாறிக்கொண்டு வருமியற்கை வாய்ந்ததா
கின்றது. உயிருடைய தேபோன்ற இப்பிரதிமையைப் பிரதிதின
மும் குருதேவர் பார்த்து நாடோறுமேற்படும் நமதுவாழ்க்கையின்
நிலையைக் கண்ணுற்றுத், தஞ்சீடனதற்கு நேரம்மட்டிற்றகுதி யடை
ந்து வருகிறீரென்பதையு மறிந்துகொள்ளுவர். (1)

இனி யிவ்விதர் குருதேவரு நம்மையுயருலகில் மேற்கூறிய
வண்ணஞ் சோதனை நிலையிலேற்றுவித்திருக்கு முண்மையை நீர்
ஸ்தூலமூளையின் விலாசமாகிய ஜாக்ராவஸ்தையில் அறிந்துகொள்ள
வுங் கூடும், அல்லது அறிந்துகொள்ளாமலிருப்பது முண்டு. இஃதெப்
படியிருப்பினும் பாதகமில்லை. ஆனாலிதில் நீர் கவனிக்கவேண்டிய
முக்கிய விஷயம் யாதெனில ஸ்ரீ குருநாதரது உலகவுபகாரமாந் தொ
ழிலில் நீரெவ்விதமும்மைப் பழக்கக்கொண்டு வருகிறீரென்பது தவிர
வேறன்று. இவ்வித மும்மைப்பழக்குவிக்கத் திருவுள்ளம் குவித்த
குருநாதனு மிப்பால் உம்மை உடனே சோதிக்கவாவது, அல்ல தெக்கா
ரியங்களிலுந்தூண்டிவரவாவது தொடங்குகிறதில்லை. பின்னையும்மை
யுமதுபோக்கிலே போகவிட்டு, உயர்குணங்களும் பரோபகார சீலமும்
பொருந்தி நாட்கழிக்கின்றீரா வென்பதைமட்டும் பார்த்துவருவர்.
நமது பிரதிதின வாழ்க்கையில் கருமவசத்தால் நேரும் இன்பதுன்
பங்களை நீ ரெவ்விதங் கிரகித்துக்கொள்ளுகின்றீரென்பதையு, மவற்
றை யனுபவிக்கும்பொழுதெல்லாம் பிறரிடம் கருணையுமன்பும் செ
லுத்துங் குணத்தையே விருத்திசெய்து வருகின்றீரா அல்லது தன்
துக்கங்களையே நினைந்து வீணில் வாதனைகளால் நொந்து மனங்கலங்
கிக் காலங்கழிக்கும் பான்மையை நீரடைகின்றீரா வென்பதையுங்
கூர்ந்தறிந்து கொள்ளுகின்றனர்.

இந்நிலை தொடங்கியபின் இதனடுத்தபடி வந்து சேருதற்கு
எவ்வளவு காலஞ் செல்லு மென்பது முழுமையு நம்மையே பொறுத்

---

(1) பேதைப்பருவத்தேயின் றொடர்ந்
தென் பக்குவ, மூன் சோதித்த
வண்ணல் வந்துதோய்வாரோ
பைங்கிளியே! — தாயுமானவர்.

திருக்கின்றது. இந்த வழக்கம்போலேழாண்டளவில் நிற்பினும் நிற்கும். அல்லது நமது விசேடப் பிரயத்தனங்களால் குறையினுங் குறையும். அல்லது நமக்குக் கிடைக்குஞ் சௌகர்யங்களத்தனையும் நீர் பயன்படுத்திக்கொள்ளாது வீணே காலங்கழிக்க நேரினிக்காலவளவு மிகினு மிகும். ஆதலின் இச்சோதனை நிலையாம்படியின் காலவளவும் நமது முயற்சியையே சார்ந்து நிற்கின்றது.

இதற்கு மப்பாலுள்ள குருநாதனது பூரண வங்கீகாரத்தாலேற்படுஞ் சீடபாவமெனும் படியை யினி விளக்குவாம். மேலே கூறிப் போந்தவண்ணங் குருதேவனானவர் நம்மைச் சோதித்து நஞ் சுபாவத்தைச் சுத்தமென ருசுவாக்கிக்கொண்ட பின்னரே நமக்கந்நிலையும் வாய்க்கின்றது. இத்தருணத்தில் நமக்கு மவருக்குமுள்ள சம்பந்த மிகவு மாறி யோர் நூதனத் தன்மையை யடைகின்றது. (1) நீர் அறியமுடியாத பலவித சூட்சும வழிகளி லவரும்மைத் தனது பிரக்ஞையின் விலாசத்திற் கேற்றதோர் ஸ்தானமா யாக்கிக்கொள்ளுகின்றனர். நமதியற்கையே யவரதியற்கையில் கலந்து பொருந்தி நிற்பதாயினமையின், தான் விரும்பும்பொழுதெல்லாந் நமது இச்சை நினைவுகளையெல்லாந் தனதறிவி லுணர்ந்துகொண் டவற்றைத் தன் காரியங்களினு முபயோகித்துக் கொண்டாளுவர். (2) இனிக் கள்ளங்கபடமுதலிய மாசு சிறிதாயினுங் கலந்த சீடனது கருத்துக்களாற் றனதுன்னதவ்வியவகாரங்களுக்கு இடையூறு நிகழும்படி குருதேவனு மிடங்கொடாரன்றோ! ஆதலினவ்வித மலங்கலந்த வெண்ண மோர் கணமேனுஞ் சீடனிடங் காணப்படுமாயினுடனே அந்த தன்னியற்கையிற் கலவாதவண்ணம் தனது பிரக்ஞைக்கும் அவனது சிந்தைக்கு மத்தியில் தடையாகும் திரையொன்றை குருவானவர் சிருஷ்டித்துக்கொள்ள நேருகின்றது. இத்திரையை ஒரு க்ஷணநேரத்திற்காயினு மேற்படுத்தல் தனதிடமுள்ள சக்தியை வீணே செலவழித்தே யாகவேண்டிய தாதலி னிவ்

---

(1) அறியா தறிந்தெதமையா ளண்ணலை நாமாகக்
குறியாதவண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.
(தாயுமானவர் எந்நாட்கண்ணி)

(2) சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.
(தாயுமானவர்)

வித மடிக்கடி கவலைகொண்டு கட்டிக் காக்கப்படவேண்டிய நிலையிலுள்ளோனாமொருவனைக்குருதேவனுஞ் சீடனா யேற்றுக்கொள்ள வொருமைப்படாரன்றோ. இவ்விதமல்லாது நாளுக்குநாள் சீடனும் தூய்மை யறிவு பெருமையாதி குணங்கணிறைந்த நற்சீலம் பெருக வளர்ந்து வருவானாயின் ஸ்ரீ குருநாதனும் வரவர அவனது இச்சை நினைவுகளையெல்லாங் கொள்ளைகொண்டவனையு மானந்தமயமாக்கித் தானெனுமகந்தை நீக்கி யவனது நெஞ்சினில் அவன் கனவிலு மெய்தவொண்ணாப் "போத பரிபூரண அகண்டிதாகாரமும்" நிறுவச் செய்தலுந் திண்ணமையன்றோ. (1)

இவ்விதஞ் சீவன்முக்தனாஞ் சற்குருவிற்கு நேர்சீடனாய்விடினொருவனது பொறுப்பும் பாரமுமிகவுயர்ந்ததாகிவிடும். அங்ஙனமே யவனது பாக்கியமுமானந்தமும் பன்மடங்கதிகமாய்ப் பெருகிவிடுகின்றது. ஏனெனிலிவன் மிகுந்தசிரத்தையும் குருவினிடத்தில் தானெனுமகந்தையற்ற இடைவிடாப்பற்றுமுடையோனாய் விளங்குவானாயின், குருவுமவனதறிவை விட்டகலாதகருணைவடிவாயவனைக்கட்டிக்காத்து வழிகாட்டுவர். செய்வகையறியா துழலநேருந்தருணங்களி லெல்லாமிவனுக்குத் தன்னினைவின் நிச்சயம் தெரிந்தறிய ஸ்ரீ குருநாதனது திருவுள்ளத்தோ டிதை ஒப்பிட்டுப்பார்த் துண்மைகண்டறிந்து கொள்ளுஞ்சக்தியு மிப்பொழுது வாய்க்கின்றது.(2) எப்பொழுதும் குருநாதனது நாமங்கொண்டழைப்பதற்கு வழியுமிவனுக்குள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குவதால் எச்சமயத்திலு மெவ்விதமொழுகுவதென மயங்கிநிற்றலமையாது. ஆதலினிவனின்றுமுதல் ஸ்ரீ குருநாதனது கடாக்ஷமாம் பெருங்கவசம் படைத்தோனாகி மானிடர்மத்தியிற் பயம் சிறிதுமில்லானாய்த் திரிவன்.

---

(1) அன்னையப்பனென்னாவித்துணையெனுந்
தன்னையொப்பற்றசற்குருவென்பதன்
னென்னைப்பூரணவின்பவெளிக்குளே
துன்னவைத்தசுடரெனத்தக்கதே. (தாயுமானவர்.)

(2) அந்நாண்முதலாகநாளதுவரைக்குமுனடிமைகூடவேசனனமானதோவனந்தமுண்டு, ஜலசனனமீது-இதனுளறியவேண்டுவனவறியலா, மோகமாதிதருபாசமானதையறிந்துவிட்டெனையுமெனையுமே, முழுதுணர்ந்துபரமானவின்பவெனமூழ்கவேண்டும். (தாயுமானவர்.)

அடுத்த நிலையாவது புத்திரபாவமெனும் பதவியாம். புத்திரனுதலுமாருக்கோவெனின் குருதேவற்கேயென்க. இத்தருணத்தில் குருவானவர் சிடனைத் தன்னெடும் விசேட நெருக்கத்துட னைக்கியப் படுத்திக்கொள்கின்றனர். இன்னும் முதலாய்ச்சிடனது அதமமனது ஒருகணப்பொழுதாயினும் பூர்வஜென்ம வாசனையால திடீரென எழுந்தோங்குங்காலையிலுங்கூட வதனுல்நேரும் களங்கங்கள் தன்னை யணுகாதபடி தனது பிரக்ஞைக்கு மனனுடையதற்கு மத்தியிலொரு திரையை ஏற்படுத்திக்கொள்ளும் சுதந்தரத்தையும் குருநாதனிழந்து விடுகின்றனர். மகன்றந்தையாகிய விவ்விருவருக்குள்ளு மினியென்று மழியாச்சேர்க்கையொன் றிப்பொழுதுண்டாகிவிடுகின்றது. (1) இனியிப்புத்திரபாவமெனுஞ்சம்பந்தம் வாய்க்குந்தருணத்திலேதான்

(1) நெருங்குமடியார்களுநீயு
நின்றுநிலாவிவிளையாடு
மருங்கேசார்ந்துவரவெங்கள்வாழ்வே
வாவென்றருளாயே! (7) கோ.மூ. திருப்பதிகம். திருவாசகம்.
பரம்பரனேயுன்பழவடியார்கூட்ட
மடியேன் காணவாசைப்பட்டேன்
கண்டாயம்மானே!

p. p. 352 திருவாசகம்.

திருப்பாதத்
தப்பனுண்டு தன்னடியாரிற் கூட்டிய
வதிசயங்கண்டாமே! p. p. 354 திரு.

ஆதியாண்டு...—
அன்னையாண்டு...—
நீக்கிமுன் னெனைத் தன்னெடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன செய்து
சொற்செய்து நகமின்றி விளாக்கைத்து
தூக்கிமுன் செய்து பொய் யறத்துகளறுத்
தெழுதரு சுடர்ச்சோதி
யாக்கியாண்டு தன்னடியாரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே! p. p. 359 திரு.

கயக்கவைத்து
அடியார் முன்னேவந்து காட்டினும்
கழுக்குன்றிலே! p. p. 362.

கூடிய நின்சீர் அடியிற்கூட்ட மென்றே வாய்க்குமென
வாடிய வென்னெஞ்ச முகவாட்டமுநீ கண்டிலையோ
தேடியநின் சீருனைத்திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடிய நானகண்டாய் பதியே பராபரமே.

அநேகமாய் ஸ்ரீகுருதேவனுந் தன் சீடனை முக்திமார்க்கத்தின் பிரவேசத்திற்குத் தகுதியடைந்தவனென அம்முக்திநிலையினை யீந்தளிக்கும் பேரதிகாரம்பெற்ற "வெள்ளியம்பல மஹாசபையின்" திருமுன்னர்ச் சேர்ப்பிக்கின்றனர்.

இனி, கடவுளின் பழுத்தவடியார்களாகும் ஜீவன்முக்தர்கள் நிரம்பிய வெள்ளியம்பல மஹாசங்கத்தாரால் இவனுட்கொள்ளப்பட்ட பின்னர் முமுட்சுவுஞ்சம்சாரமாகுந் தீவைவிட் டப்பாலேகுவோரைச் சத்தியநிலைகளிற் கொண்டுபோய்ச்சேர்க்கும் மரக்கலங்கள் செல்லும் பேராற்றில் நுழைவோனுகின்றான்.(2) இப்பொழுது சீடனு முலகமானுஞ்சிஷ்டர்களான வெள்ளியம்பல மஹாசங்கத்தினருள் கடைப்படியினுள்ளவனேயாக, இப்பேருலகின் துன்பச்சுமையத்தனையுந் தாங்கும் பெரும்பொறுப்பை யடைகின்றான். ஆயினு மிப் பேதையுலகை ரக்ஷிக்கவுமதைக் கருணையுடனுசீர்வதிக்கவும் தக்கபேராற்றலு மிவனுக்கிப்பொழுது வாய்க்கின்றது.

---

(2) அலையாமல் அறிவிலே பொறையிலே நின்னடியர் கூட்டத்திலே நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான ஞேயத்திலே யுனிருதாள் மட்டிலே மனது செல நினதருளுமருள்வையோ வளமருவுதே வையாசே (2) மலைவளர் காதலி.—தாயுமானவர்.

முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம்பொருளே!

உன்னைப் பிரானுகப்பெற்றவுன் சீரடியோம், உன் சீரடியார் தான் பணிவோமாங்கவர்க்கே பாங்காவோ மன்னவரே யெங்கணவராவருகந்து சொன்னபரிசே தொழும்பாய்ப்பணிவோம், எங்கோனல்குதியேலோரெம்பாவாய்.—(திருவாசகம்.)

பிறவியென்னுமிக்கடலை நீந்ததன்பேருடந்தருளினு ன்றவையென்றடியார்கடங்களநட்துழாம்புகவிட்டு நல்லுறவை செய்தெனையுய்யக் கொண்ட பிரானுண்மை பெருக்கமாநிறமை காட்டிய சேவடிக்கணஞ் சென்னிமன்னித்திகழுமே.

## அதிகாரம் 7.

### அவன் பெயரால்

எங்கெங்கு தத்துவமல்லது பிரகிருதியுண்டோ அங்கெல்லாஞ் சத்தியுமுண்டு. அவ்விதமே யிவ்விரண்டினுள்ளும் சேதனமும் நிறைந்துலாவுகின்றது. இனி யிம்மூன்றனுள்ளுங் கடவுளின் பிரக்ஞையும் ஊடுருவிப்பாய்ந்து விலாசம் செய்கின்றது. இப்பிரபஞ்ச முழுவதையும் வாழ்விப்பதவனது வாழ்வேயன்றோ? ஆதலின் நீரும்நானு மற்றுமுள்ள வெண்ணிறந்த மானிடகோடிகளு மிப்பிர பஞ்ச மவனதுடலத்திலமைந்த மிகநுண்ணிய வங்கங்களாகியே நிற்கின்றோம். இவ்வெல்லாவற்றுள்ளு மொவ்வொன்றும் தத்தம் வாழ்க்கையிற் றனியே யமர்ந்துநிற்பதின் பயனெல்லாம், யாவற்றையும் தன்னுள்ளடக்கிநிற்கு மவனதகண்டாகார வாழ்வாகுமற்புதத்தைச் சிறிதுசிறிதாயறிந்து தெளிதற்பொருட்டேயாகுமாதலி, னிப் பிரபஞ்சத்திற் பிறந்த்ஜீவனு மானந்தமடையும் வழியாவது மேற்கூறிய பெருவாழ்வின் மகிமையைத் தம்மட்டிற் சற்றுத் தெளிந்துணர்ந்து மேற்செல்லுதலே யென்க.

இவ்விதமா யொவ்வொருவரு 'மானந்தமாக்கடலனைய' கடவுளின் பெருவாழ்வைத் தேடியலைந்துதிரியு மொழிவிலா யாத்திரையாகிய சம்சாரத்தில், ஆரம்பம் முடிவு, அல்லது பிரவிருத்தி, நிவிருத்தி யென இருபடிகளுண்டு. இதில் முதற்படியாகிய பிரவிருத்திநிலையிலே யுலகினிற் பெரும்பாலார் நிற்கின்றனர். இவர்களதியற்கையாதோவெனின்,எப்பொழுதும் தம்மாசைகளையே விருத்திசெய்து அவை நிறைவேறுமா றிடைவிடாது பல்வேறுபதார்த்தங்களையபேக்ஷித்துக்கொண்டுவருவதே. இவ்வொழிவற்ற விருப்பங்கள் "வருந்திக்கேட்பதனால் வாராவெனு" முண்மையை இவர்களறிந்துகொள்ளற்குப் பல்கோடியாங் காலஞ்செல்லுகின்றது. ஆனு லிவ்வாசைகளைப் பற்றும்பொழுதெல்லாம் இம்மானிடர்க்கிவை முற்றிலும் நிறைவேறாவிடினு மெங்குநிறைபொருளாகிய கடவுளின் தன்மையை மட்டும் அவரவர்க்குச் சிறிதுசிறிது காட்டிவருதற்குதவுகின்றன. மனைவி, குழந்தை, நண்பனிவரிடத்திலும், பேரிலுங் கீர்த்தியிலு மிவ்வுலகினர் கொள்ளும் பிரீதி பக்தியாலும்,

அண்டையயலார்கட்களிக்கு முபகாரத்தாலு மற்றுங் குற்றமற்ற வநேக நற்செய்கைகளிலுந் தத்தம் விருப்பத்தை நாட்டுவார்க்கோ ராநந்தம் ஜெனிக்கின்றது. இவ்வாநந்தத்தை யித்தகையினர்க்குக் கடவுளளிப்பதும் ஆனந்தமே வடிவமாய்த் தனது பூரணநிலையை நோக்க யின்னுமதிகமதிகமாய் நாட்டமுற்றுத்தேடிவரும்படி இவரது நெஞ்சங்களை யிவ் வற்பானந்தத்துள்ளுந் தானே நின்று ரஹஸியமாய்த் தாண்டிவருவது போலவேயாகும். ஏனெனில் அவ்வயநலமற்றுச் செய்யப்படுமெவ்வித நன்மையும் 'அவனருளாலேயே' யாக்கப்படுவதுபோலேயாகும். ஏனெனில் வீட்டிலும், வெளியிலும், ஆவணத்திலும், பூஜாக்ருஹத்திலுமப்படியே யுலகெலாம் புகழ்பெற்ற மகாக்ஷேத்திரத்தின் மத்தியிலும் எங்குமாய் நிறைந்து தங்கி, யாவற்றையுங்கண்ணுற்று வஸிப்பது இச்சர்வபரிபூரணமாம் பரமனே யன்றோ! 'கூறரியவின்பக்கடலாம்' அவனிடமடங்கிநிற்கு மற்புதவதிசயங்களைக்காண்ட விச்சன்மத்திலு மின்னுமநேக சன்மகாலங்களிலு மிப்பான்மையர்க்குக்கிட்டுவனவாகா. ஆதலின் இத்தகையினர் ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ்சென மனத்தை யலையவிடாமற்றடுத்து நிராசையாக தெய்வத்தன்மையடைந்து, பிறர் எல்லார்க்குமிரங்கியுழைக்குஞ் சுபாவவியற்கையைப் பெற்றுனந்திக்கு' நாள்வருமளவரையில், எண்ணிறந்த தொல்லைக்கவலையார் துன்பக்கடலிலாழ்ந்து வருந்தியே தீருவர். பின்னர் நிவிருத்திநிலையினிற் பிரவேசமெய்திப் பாசபந்தமற்று யாவருங்காணுக்கரிய முத்திவழியிற் கூடுவர்.

இம் மகாமார்க்கத்தை நாடி யெண்ணிறந்த மானிடர் முயற்சிகொள்ளினும், அவருள்ளெல்லாஞ் சிற்சிலரே யதிற் பிரவேசமெய்தும் பாக்கியமடைவர். பலர்க்குக்கிட்டாது சிலர்க்குமட்டுஞ்சாத்தியமாகு மிவ்வழி எந்நாளுமில்லாதிந்நாளில் நூதனமாய் ஏற்படுத்தப்பட்டதோர் மார்க்கமன்று; பின்னை சகலஜீவசமூகமுங் கடவுளை நோக்கிச் சென்றடையும் தொன்றுதொட்டுள்ளது முலகப்பிரசித்தியுமான மாப்பெருமாண்புடை யிராஜயோகமார்க்கமே இதுவாகும். இதனைக் குறுகியதுங்கூரியதுமான வழியென யான் விளக்கியதற்குக காரணமாவது, இவ்வழியிற் செல்லவிரும்புவோர் இக்காலம் வரை யிங்குமங்குமோடிப் பலவிஷயங்களைப் பற்றிநின்றிருப்பது

போலல்லாமல், இப்பஹிருலகநாட்டமற்றுப் பரம்பொருளின் சந்நிதானத்தையே நோக்கிய திருஷ்டியுடன், வில்லினின்றுங் கிளம்பியதோர் கிலீமுகம்போன்று நேர்வழிபிறழாது முடிவைநோக்கி, மிக விரைவிற் சென்றடைதல்வேண்டுமெனு முங் கருத்தைக்கொண்டேயென்க. (1) இந்நிலையெய்திய வொருஜீவ னொருகணமேனுந் தன் வழியிலகி நடப்பானாயின் அவனுக்கு நீங்காத்துன்பம் விளையுமே யன்றி வேறன்று.

சூரியவானினுங்கடியதானவிம்மார்க்கமே நாமிதுகாறுங் கூறிப் போந்த சீடனுவான் செல்லும் வழியாகும். 'முடிவாகியபேறு,' 'முக்தி,' 'பந்தமறுதல்' எனவுலகினர் பல பெயரிட்டழைத்து வருமுயர்ந்த நிலைக்கு நம்மையேற்றுவிக்கும் பாதையாவதிதுவே. இவ்வழிதான் மெய்ப்பொருளாஞ்சாசுவத நிலையில் நம்மைச்சேர்ப் பிக்கும். ஏனெனில் ஞானமூர்த்தியாங் குருதேவனிடம் அடிமை பூண்டொழுகும் சீடத்தன்மையைப் பெற்றபின்னரேயன்றோ! ஓர் ஜீவனுக்கிவ்வநித்தியவுலகின் மாயையைக்கடந்து செல்லுந்திறனும், நித்தியமானவந்தர்முகவிர்த்தியினைப் பெற்றுத் தன் கோரிக்கைகள் யாவற்றையுமீடேற்றிக்கொள்ளும் பக்குவங்கிட்டலும் வாய்க்கின்றன. இனி, இவனது கோரிக்கையினீடேற்றமாவது சகல பூதராசிகளினுள்ளுறைவிலுங்கானிறைந்துநின்று அவற்றின் சுமைகளை யெல்லாந்தாங்குபேராற்றலடைந்து விளங்குவதேயன்றோ!

இப்பேருபகாரத்திற்கே யுளமுருகி மற்றப்பற்றினையுந்துறந்தோராக, இம்மானிடவர்க்கத்திற்கெல்லாந்தலைவர்களும் திருவருண் ஞானமாநிதிகளுமாகிய பெரியோர்கடமதுலகவாழ்க்கையைத்தாங்கி யிப்பரிபாகமார்க்கத்திலுழைத்துவருகின்றார்கள். இவ்விதமுலகெலாம் படுந்துன்பத்தைத் தாங்கிநிற்குமிப் பெரியோர்மட்டுமில்லாவிடின், ஆண்பெண்டங்கிய விம்மனிதவர்க்கம் தாந்தாம் புரிந்த பாபவாஸநா மலங்களைத் தம்மனங்களினின்று மொருவாறு துடைத்து நின்று முத்தியாம் பேரின்பத்தைநோக்கி யிச்சைகொளுமுறுதியைப்பெறுதலே முடியாதென்பது திண்ணம். ஆதலினிவ்வுண்மைகொண்டு நீரு

1. தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டணலிட, த்தோவியம் போனிற்கினெனை யுள்குவதோ பைங்கிளியே! —தாயுமானவர்.

மிப்புவனமுய்வதற்கே யவதரித்துழைக்குமிப் பெரியோரிடமேவல் பூண்டு சாசுவதநிலையாமளவிலாவானந்த வாழ்க்கையை யடைய விரும்புவிராயின் (1) நீருமேனைய மானிடரின் சுமைகளைத்தாங்குவதற்குப் பழகிவரல்வேண்டும். (2) இதையன்றி வேறோர் வழியில்லையென்பதுண்மை.

இப்படிப்பிறரெல்லாருடைய கருமச்சுமைகளையுந் தாங்கிநிற்றற்குத்தகுதியடையுமுன், முதலில் அச்சுமைகளை யதிகப்படுத்தாதிருக்குந்தன்மையை நீருணர்ந்தறிந்துகொள்ளல வேண்டும். நுஞ்செயல்களாலெத்துணையு முலகினரது பாரங்களை விருத்தியாக்காது ஜாக்கிரதையாயிருத்தல் நுமது கடமையாகும். நுமது பிரதிதின வாழ்க்கையில் மனமொழி மெய்களால் அஹிம்சையென்னுங் குணத்தையே காட்டிவரல்வேண்டும். இவ்விதமொழுகுவரின் நுஞ்செயல்களியாவும் களங்கமற்றனவாகி, சின்னாட்களில் நுமது மனமும் பரிசுத்தமடைந்துவிடுவதால, முன் சன்மங்களினது அசுபவினையினுலுமக்கு நேருந்துன்பங்களையுமிலகுவாய்த் தாங்கிநிற்றற்கானவுறுதியுமனத்துணிவு நுமக்குத்தாமே வாய்க்குமன்றோ!

நீர் சந்தோஷமடையும்பொழுதெல்லா மவ்விதமே மானிட சமூகமுழுவதுஞ் சந்தோஷமடையவேண்டுமென்னு மாசையையுநிருமித்துக்கொள்வதால் மானிடர்யாவருடனுமுமையுஞ் சேர்ப்பித்து ஒன்றுவித்துக்கொள்ளப்பழகுவீராக. அன்பு, அறிவு அழகு இவை முதலியவற்று லுமக்கானந்தங்கிட்டுமாயினத்தருணத்தில், நுமக்கு

(1) அழியாத நிலையாகி யாதின்பாலும் பிரியாமற்றண்ணருளே கோயிலான பெரியபரம்பதியதனைப் பெறவே வேண்டி நெறியாகக்கூறுவேன்.—(தாயுமானவர்)

(2) ஆகவேதான், தேனென ருசிக்குமன்பாற் சிந்தைநைந்துருகும் வண்ணம் வானெனநிறைந்தானந்த மாகடல் விளைவதின்றே!

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள், செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ? எந்நாட்கண்ணி—(தாயுமானவர்.)

நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந், தன்மை தானெனவுண்மை தனைச்சாருநாளெந்நாளோ? எங்ஙனே யுய்ய யானென தென்பதற், றங்ஙனே யுன்னருண்மயமாகிலேன். பொன்னைமாதரை—(தாயுமானவர்.)

மிகப்பிரீதியுள்ளார்களையு மனதில் நினைந்துகொண்டும்முடனவர்களை யுமுமதானந்தானுபவத்திலொன்றுவிப்பதுமுமது கடமையாகும். ஏனெனிலுண்மையான வானந்தமாவது நம்மையு நம்மனதிலுள்ளாரையு மொன்றுவிக்கும் பான்மையுடையதேயாகும. நமக்கு வேண்டியவரொடும் பகிர்ந்தனுபவிக்கமுடியாததெதுவும் சுகமெனப்படல் பொருந்தாது. மற்றச்சமயங்களைவிட நாம் சந்தோஷமனுபவிக்குந் தருணங்களிற்றான் பிறரொடு மொன்றுபடுவது நமக்குச்சுலபமாகும். ஆதலின் இக்குணம் நுமதியற்கையேயாகுமாறு சாதகம்பண்ணிக் கொள்ளுவீராக; அதனாலுமக்குப்பிறரிட மன்புகொளுஞ்சிந்தையும் விருத்தியடைந்தங்ஙனமே எவ்வித வழக்கையுமறிந்தனுபவிக்குங் குணமும் கூர்மையாகிவிடும். இவ்விதமே யொழுகிவரின் காலக்கிரமத்தில் விசேடபொறுப்பு பாரங்களையுந் தாங்குமாற்றலு நும்மிட மிகப்பெருகி விளங்கும். தற்காலம் சுற்றத்தார் உறவினர் முதலிய சிலரைமட்டுமே நேசித்துவரு நும்மிடம நாளடைவில் அதிகமதிகமாய் மானிடர்மீது அன்புசெலுத்துமியற்கை மிக விஸ்தாரமாய் விரிந்து, முடிவில் நுமது சந்தோஷத்தால் மனிதவர்க்கமுழுவதையுமே நும்மொடொன்றுவித்துகொள்ளும் பக்குவமும்முள் ஜனிக்கலாகுமன்றோ!

இனியப்படி லுமது துன்பத்தாலுமுலகத்தாரின் துன்பங்களையெல்லா நும்மிடஞ்சேர்ப்பித்துக்கொள்ளக் கற்றலுமவசியமாகும். நமது வாழ்வின் பயனவதெல்லாம் நாம் மென்மேலும் பிறரிடமன்பு பற்றுதலு, மவ்விதமே சமயம்நேர்ந்துழிப் பிறர்பொருட்டவர் துன்பத்தையுமேறறுக்கொள்ளலுமேயாகும். (1) ஆனாலிவ்வின்பமுந்துன்பமு மேனிலையாம் நித்தியவுலகத்தின் ஸ்வரூபங்களாய் விளங்கினாலன்றி உயர்வடைவனவாகா மனிதனனுபவிக்குந்துன்பம் யாவும் கடவுளின் துன்பமேயாகுமன்றோ! ஆதலின், பரமன் எவ்வாறு இத்துன்பத்தை யனுபவிக்கிறானோ, அவ்வாறே நீருமதையனுபவிக்குந்திறமை யடைவீராகில் உடனே அவனது தன்மையைச் சிறிது நீருமடைந்தவராகிப் பிறருடனைந்தத்தா லைக்கியப்படும்பொழுது எப்படிக்கடவுளினனந்தமயநிலை யுமக்குவிளங்கிற்றோ, வப்படியே

(1) திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு, மின்பவீட்டிலிருப்பது தெரிவதற்கரிய பிரமமே.—(தாயுமானவர்.)

சகல மானிடவர்க்கத்தின் துன்பமூட்டைகளையனுபவிக்கும்பொழுது மவனதியற்கை நமக்கு விசதமாகின்றது.

மானிடர் ஒவ்வொருவரும்படுந் துன்பமெதையேனுங்காணி னுங் கேள்வியுற்றவிடத்து மதற்குக்கருணையால் நீர் சிந்தையிலிரக்க முறல்வேண்டும். துன்பமுறுவோர் மிகத்தீயர், கடையராயினுஞ்சரி அவரின்னல்களை யெல்லாங் கிரஹித்துக்கொள்ளற்கு நீர் கூசுதல் கூடாது. மிகப்பழிப்புடையராயினுந் துன்பமுற்றவர், அவரை யணுகி அவற்குதவிபுரிதலால்நமக்குமிழிவுகிடைப்பினும்பாதகமே யில்லை. அவ்விதமின்றி யிப்பழிப்பிற்கஞ்சி யவரை நீக்கிநிற்றலா லவ்விழிவு நம்மை அணுகாதிருக்கப்படினுமிதுவே கொடிய பாப மாகும். இனி, துக்கம் விளைவிக்குங் காரணங்களையும் கருமமுற் பத்தியாகி வியவகரிக்கும் வழிகளையும் நீர் செவ்வனே படித்துணரு தல் வேண்டும். ஏனெனில் கருமமென்பது கடவுளதிச்சையினோர் பிரகாரமல்லது ஸ்வரூபமேயாகும். கருமமானது யாவருக்காவது மிகவுநிர்த்தயவாய்த் தாங்குதற்கரிய துன்பங்களை யளித்திருப்பினு, மதனிருதயமல்லது கருத்து மிகக்கருணை பொருந்தியதே யாதலா லஃதுபகாரத்தையே செய்யப்புகுந்திருக்கின்றதென்பதை நீர் நும் மட்டில் நம்புதல்வேண்டும். இத்தகைய திருடமான நம்பிக்கை கொண்டுநும் கருணையைத் துன்புடையோரிடத்துக்காட்டுவீராயி, னுமது மனோவலிமையினலவர்களுக்குந் தன் துன்பங்களைத்தாங்கு முறுதியுமுண்டாகும்.

இனி யெவ்வகைத்துன்பங்களுமக்கு நேரிடினுமவற்றைக்கண்டு நீர் நடுக்கமுறல்கூடாது. துன்பமடைதலெனும் நரகத்தின் வாச னையேயிம்மண்ணுலக வாசனையினு மதிகமாய் இப்பிரபஞ்ச வியற் கையின் திறத்தையும் அதன் உண்மையழகையு நமக்குத் தெரிவிக் கும். ஆதலின் மானிடரின் தற்கால நிலைமையை யோர்ந்துபார்க் கின் கேவலமானந்தத்தால் மட்டும் அவர்களொடு நாம் ஒன்றுபட வெவ்வாற்றானு மியலாது. பின்னைத் துன்பங்களின் வழியாகவுஞ் சகலமன்பதைகளொடு மொன்றுபடற்கு நீருந்துணிவீராயின், அத னால் ஆனந்தத்தி லவர்களொடு ஐக்கியமுற விச்சிக்கும் நுமது கருத் தும் மிகத்தீவிரமாயும் இலகுவாயும் நிறைவேறுமென்பதற் கைய மில்லை.

உலகவாழ்க்கையிலமர்ந்து மதைக்கடந்து செல்லற்கியலாமலு நிற்கும் நம்பொருட்டு யானிதுகாறு மியம்பிவந்திருக்குமிவ் வசனங்களின் கருத்து யாதோவெனிலிவ்வுலகியலில் நிற்கும் பொழுதே உயர்விவேகமாம் விளக்கத்தைத் துணையாக் கொள்வதால், ஸ்ரீ குருதேவனது நாமத்தையுன்னி யெப்பொழுது மன்புநிறைந்த செயல்களைப் புரிந்து, பின்னர் முடிவில் குருதேவனைப் பிரத்தியக்ஷமாகவுங் காணும் பாக்கியத்தை நீரடையலாமென்பதை நமக்கறிவித்தற்பொருட்டேயென்க. இனிவருநாட்களில் நமக்குத் துன்பமிகுதியு முண்டாகும். ஏனெனில் பூர்வகாலங்களில் நீர் பிரவிருத்தி மார்க்கத்தில் நின்றபொழுதெல்லாம் நுஞ்சகோதரராகிய வேனைய மானிடர்க்கு நமது பாபகர்மங்களாற் றுன்பங்களை விருத்திசெய்து வந்ததாலேற்பட்டிருக்குங் கடன்களை யொருசிறிதுங் குறையாமல் நீரிப்பொழுது திருப்பியளிக்கக் கடமை பூண்டவரேயாவீர். ஆனு லிக்கருமச் சுமையாங் கடனை நீருமனுபவித்தே தீர்க்கவேண்டுமாயினும், உமது ஒழுக்கததாலு மனோநிலையாலு மிவ்வுயர் பாவனையற்ற வேனைய மானிடர்க் கெக்காலத்திலு மெட்டாத் தைரியமுஞ் சிந்தையின் தெளிவும் நமக்கு வாய்க்குமென்பதற் கையமுமுளதோ?

ஆதலின் நீரும் ஸ்ரீகுருநாதனைத் தேடி யடையும் பெருந்தொழிற்கே நம்மை யர்ப்பணஞ்செய்துகொள்ளுவீராயின் நிச்சயமாயவரும் நமக்குக் கிட்டுவரன்றோ! இனி ஸ்ரீ குருமூர்த்தியினது தரிசனமுங் கிட்டியபின்னதற்குமப்பாற் படிப்படியாயநேக ஜன்மங்களில் நீருமேனிலைகளிலோங்கச் சென்று முடிவில் கடவுளதம்சமேயாகு முலகம் புரக்கவல்லதோ ரவதார புருஷனுகுவீர். இந்நிலையிற் பிரபஞ்ச முழுமையும் நமக்குச் சின்மயவடிவமேயாகி விளங்குவதால், பூர்வகாலங்களில் நீரனுபவித்த துன்பமும் அவாவும் தம்மியற்கையெல்லா மிழந்தானந்த வடிவமாய் மாறி நிற்கும்வண்ணம் அவற்றை யெல்லாம் பேரறிவால் நவமாக்கிக்கொள்ளும்படி கடவுளே நமக்கு வழிகாட்டுவர். பேரறிவுதோன்றிய பின்னர் வருங்காலமெப்படி நமக்கு சுவாதீனமாய்விடுமோ அவ்விதமே யிறந்தகாலமு மிந்நிலையில் நமக்கு வசப்பட்டதாகின்றமையின், இவ்விரண்டுகாலவளவுகளு மிப்'போதபரிபூரணவாழ்வில்' தங்காலமய ரூபங்களையிழந்த 'வதீத'வடிவங்களாகின்றன. ஆத

லால் இப்பொழுது சம்சார வாழ்வில் நாமடையுந்துன்பங்கள் யாவும் நாம் பன்னாட்களின் பின்னடையவிருக்கும் 'போக்குவரவற்ற' பெரிய பதவியின் வாழ்வைப் பெற்றுய்தற்கென நாமிம்மையிற் கற்கும் கல்வியின் அரிச்சுவடிபோன்ற வாரம்பமுயற்சியேயாகுமன்றோ!

ஆதலின், ஐய, சீடபாவந்தாண்டி முத்திநிலையெய்தப்பெற்ற பேரறிவாளனுக்குச் சென்றகாலமெனும் பொய்ப்பிசாசின் றோற்றங்கள் யாவுமாண்டுபோகின்றன. இனி நமக்குமிவ்வருணிலை கிட்டுமாயின் பின்னரிவ் விறந்தகாலத்திய அனுபவங்களின் ஞாபகம் சிறிதாயினும் தோன்றுமிடத்து, அஃது பூர்வமிருந்தவாறின்றாமலிப்பொழுது ஆனந்தமயமாகி விளங்குமாதலால், அவ்விறந்தகால வனுபவங்களையும் 'நீருள் நிலாவென விலங்கியசிறுநகை'யொடு மனுபவிப்பவரேயாவீர். (1)

சென்றகாலத்தினு நிகழ்காலத்தினு மொரேவிதமாய்ச் சுகநடம் புரியுந் தொழிலாளருமாகிவிடுவீர். இதுவே நாமனைவருமடையவிருக்கும் வருங்காலத்தின் பெருமையாகும். இஃதே நமக்குதயமாகவிருக்கும் உணர்வரிய மஹிமைபெறு புருடார்த்த நிலையின் மாட்சிமையாகுமன்றோ! (2)

(1) எனதாவியுடல் பொருளு மௌனியாய் வந்து கைவேற்று நமதென்றவன்றே, பொய்க்காலதேசமும், பொய்ப்பொருளில் வாஞ்சையும், பொய்யுடலை மெய்யென்னலும், பொய்யுறவுபற்றலும், பொய்யாகுநானெனன்னல் பொய்யினும் பொய்யாகையான், மைக்காலிருட்டனையவிருளில்லையிருவினைகள் வந்தேறவழியுமில்லை, மனமில்லை யம்மனத்தினமில்லை வேறுமொருவரவில்லை போக்குமில்லை, யக்கால மிக்காலமென்பதில்லை யெல்லா மதீதமயமானதன்றோ! வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகியானந்தமானபரமே.—தாயுமானவர்.

(2) இன்பமுறவன்பர் பக்கலிருத்தி வைத்துக்கனந்தருமாகனமே, தண்ணருளிற்றானே கனிபலித்த வானந்தக்கட்டிப்பேறே!—தாயுமானவர்.

ஓம்

# நோட்டீஸ்.

---

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்தில் ஆஸ்திகசீலமும் தேசாபிமானமும் பொருந்திய சகல கனதனவான்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்:—

இத்தென்னாட்டின்கண் இராஜபாஷையாம் ஆங்கிலந்தோன்றிய நாண்முதலாய் வடமொழியாகிய ஆரியமும், தென்மொழியாகிய தமிழும் வரவர க்ஷீணதசையடைந்துவருவதும், அருமையாய் இவை எங்கேனும் கற்கப்படினும், இராஜபாஷையின் கலப்பில்லாததால், கற்கும் மாணாக்கர்களின் காலக்ஷேபத்திற்கு அவை அதிகமாய்ப்பயன் படாமற்போவதும, நமதுநாட்டின் தற்காலநிலைமையைக் கவனித்து வருவோர் யாவருக்கும் தெரிந்தவிஷயமே. இப் பெருங்கேட்டையகற்றிநம் நாட்டிற்கு நன்மையை விளைவித்தற்குப் பலவித உபாயங்களைத்தருந்த அவகாசமும் திறமையும் பதவியுமுள்ள கனதனவான்கள் எண்ணிறந்தவகைகளிற் செய்யவேண்டியதவசியமென்பது திண்ணம். ஓரேமாதிரியான ஒரு சொற்ப ஏற்பாட்டினால் இவ்வித பெரிய ஆபத்து நீங்கிவிடுமென்பது கொள்ளற்பாலதன்று. ஆயினும், அதற்குற்ற வழிகளத்தனையும், தக்கநிபுணர்களால் யோசிக்கப் பட்டபின்னரே அதில் ஏதேனுமொன்றை யாவராயினுஞ் சாதிக்கப் புகுதல் வேண்டும் என்பது நியாயமில்லை.

இக் கருத்துக்கொண்டு திருமீயச்சூரெனும் இச்சிறுகிராமத்தில் இங்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் பிரம்மவித்தியா கிளைச்சபையின் ஆதரவின்கீழ், இந்த மூன்றுபாஷைகளின் பயிற்சியும், நடந்தேறும் படியான ஓர்கல்விச்சாலை ஸ்தாபிக்கவேண்டுமெனுமெண்ணம் சின்னாட்களாய் எங்கள் மனதிற் குடிகொண்டுவந்தமைத கடவுளின் அரு

ளால் பகிரங்கத்தில் நிறைவேற்றிக் காட்டல்வேண்டுமென உறுதி கொண்டு, சென்ற ஜூலைமாதத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. அதில் ஐந்து ஸ்டாண்டர்டு வரை இப்பொழுது ஏற்பட்டு நடந்து வருகிறது அவற்றில் 120 பிள்ளைகள்வரை சேர்ந் திருக்கிறார்கள். இப்பெரும திருத்தொண்டின் ஓர் சிறு ஆரம்பமாக மேற்கூறிய பாடசாலையை ஸ்தாபனஞ்செய்ய முன்வந்த எங்க ளுடைய கருத்து வெகுவிசாலமும் மிகவுமுயர்ந்ததுமாவிருப்பினும், அவ்விதமான உயர்ந்த மனக்கோட்டைகளுக்குத்தக்கபடி இவ்வுலகத் தில் இடம், பொருள், ஏவல் ஆகிய சாதனங்கள் போதுமானவைகளா யில்லை. இப் பாடசாலையில் வந்துசேரும மாணுக்கர்களிடம் சம் பளம் பெற்றுக்கொள்ளாமல் தர்மக்கல்விகற்பித்தலே நிகழுவேண்டு மென்பது கருத்து. தவிரவும், இவ் வொவ்வொருபாஷையிலும் தகுந்த திறமையடையும்படி மாணுக்கர்களைச் செய்துவரவேண்டு மாயின் அதற்குத்தக்கதாய பெரியதோர் புஸ்தகசாலையும் அவசியம் வேண்டுமென்பதும், கல்விகள் கற்பிக்கும் முறைகளைப்பற்றி இக் காலத்தியநிபுணர்கள் ஆழ்ந்தகருத்துடன் வெளியிட்டிருக்கும் மேன் மைதங்கிய அபிப்பிராயங்களைத் தழுவி, கல்வியின் பயிற்சியை நடத்து வதற்குவேண்டிய சௌகரியங்களையும் சாதனங்களையும் ஏற்படுத்திக் கொள்ளும்பொருட்டுத் தகுந்த கட்டடங்களும் இன்றியமையாதன வாகும என்பதும் யாவருக்கும் விசதமாகும். ஆதலின், இந்நன் முயற்சி நிறைவேறும்படி சகலதேசாபிமானிகளும் தங்கள் நல் லெண்ணங்களையும் தங்களாலியன்ற திரவியசகாய முதலியவற்றை யும் தட்டுத்தடையின்றி ஈந்து எங்கள் பேருத்ஸாகத்தை விருத்தி செய்து வரல்வேண்டும்.

இத்தகைய பரோபகாரங்களைச் செய்துவரும்படி தூண்டிவரு வதும், தற்காலத்தில் உலகமெங்கும் வியாபித்து நிலைத்திருப்பது மான "பிர்ம்மவித்யா" மகாசங்கத்தின்உயர்ந்தஅனுபவிகளாற் கூறப்

பட்டுள்ள அரிய விஷயங்கள் யாவும் இங்கிலீஷ் பாஷையிலேயே இருத்தலால் அவை நந்தமிழுலகுக்கும் பயன்படுமாறு அவற்றைத். தமிழில் மொழிபெயர்த்தச்சிடும் நன்முயற்சியையும் இத்துடன் ஆரம்பித்து, மாதமொன்றுக்கு ஒரு சஞ்சிகையாய் வருஷம் 1-க்கு ரூ 1—8—0 விதம் சந்தாத்தொகைக்குப் பிரசுரஞ்செய்துவருகிறோம். இப்புஸ்தகங்களாற் கிடைக்கும் சகல வருமானத்தையும் மேற்கூறிய . தருமபாடசாலையின் பிரயோஜனத்திற்கே உபயோகப் படுத்திவருகிறோம். இதனால் பாடசாலையில் உழைத்துவரும் உபாத்தியாயர்களுக்கு இப்'பிரம்மவித்தியா' சங்கத்திலுள்ள கல்வி கேள்விகளின் அனுபவம் ஏற்படுவதுடன் அவ்வாசனைகொண்டே அவர்தங் கிழமையும் மாணுக்கருக்குக் கல்வியைப் போதித்தலும் தாமும் ஒழுகிவருதலும் அமையுமன்றோ! இவையெல்லாம் ஒருங்கேசேரும் படிக்குஉதவுகின்ற இவ்வித தருமக்கல்விச்சாலையாம் பெரியகாரியம் நிறைவேறுவதற்கு எல்லாம் வல்ல கடவுளின் திருவருள் மாத்திரம் கிட்டுமாயின் இவ்வுலகத்திய சாதனமாகிய திரவியமெனும் உதவி கிடைப்பது அரிதாகாதென்பது எமது ஆழ்ந்த கருத்து. இந்நற் காரியத்தைப்பார்க்கிலும், பெரியதோர் காரியமும் உலகத்திற்கு உதவிபுரியும் நோக்கங்கொண்ட பெருங்கொடையாளருக்குக் கிட்டுமோ? இப்பெரிய காரியத்திற்கு ஒரு சிறிய துரும்பேனும் உதவி ஈந்து அளிக்கும் ஆற்றல்பெறுத மானிடரும் இருப்பரோ? இருக்கவேமாட்டாரென்புது எமது துணிபு! பெரும் பெருங்கொடைகளை ஒரே காலத்தில் செய்து அதனால் தக்கபேரும் கீர்த்தியும் படைத்துக்கொள்ள வேண்டுமென்னும் ஆசையுள்ளார்க்கும் இதில் இடமுண்டு. சுவல்பமாகிய வருவாயுள்ளவராகி தம் காலங்கழிப்பதே சிரமமாய் நாட்கழிப்பார்க்கும், இப்பெருங் கல்விச்சாலையின் தருமத்தில் அற்பஉதவியாயினும் செய்து புண்ணியஞ்சம்பாதித்தற்கும் வழியுண்டு. ஆதலின் நம் தேசாபிமானம் சிறிதாயினும் கொ

சிற்குடிகொண்டார்யாவராயினும்சரி. இக்கற்காரியத்திற்குத் தம் மாலியன்ற உதவியைச் செய்தேதீருவாரென்பது திண்ணம். அற் பக்கிரயமுள்ள புஸ்தகங்களோ, பல்வித அபூர்வமான கிரந்தங்களோ, இங்குள்ள புஸ்தகசாலைக்கு அனுப்பப்படலாம். அப்படியே கட்ட டங்கட்கென்றும், மேஜை, குரிச்சி, நாற்காலி, பெஞ்சி முதலிய சாமான்களுக்கென்றும், முற்றிலுமேழைகளாகிய குழந்தைகளின் சாப்பாட்டுக்கென்றும், மற்றும்பெரிய காரியத்திற்கவசியமான பலவகை விஷயங்களுக்கென்றும், சிறியது பெரியதான நன்கொடை களை எம்மட்டிலாயினுமடியிற் கையொப்பமிட்ட விலாசத்திற்கு அனுப்பலாம். இது மிகவும் பெரியதோர் திருத்தொண்டாதலின் எங்கள் அந்தரங்கத்திலுள்ள சிரத்தைக்குத் தகுந்தபடி வுரவாமிகப் பெருகி விஸ்தாரமடைவதற்காக்ஷேபமில்லை.

இப்பாடசாலையிலேழு ஸ்டாண்டார்டுகள் வரை நிறைவேறின பின்னர் அப்பால் மூன்று அல்லது நான்கு வருஷங்களுக்குள் தமிழி லும் சமஸ்கிருதத்திலும் உயர்தர பாண்டித்தியமும், இங்கிலீஷ் பாஷையிலும் பத்திரிகைகளைப் படித்துக்கொள்ளவும் கடிதங்களை யெழுதிக்கொள்ளவும் போதுமான திறமையும், வரும்படி கல்வி கற் பிக்கப்படவேண்டும். அன்பே நிறைந்தவுள்ளமுடையவர்களான உபாத்தியாயர்களாலும், அவ்வன்பின் வலிகொண்டு துர்க்குணங்கள் எவையிருப்பினும் நீக்கப்படுமாறும், இவ்வித்தியாசாலையில் கல்விகற்பிக்கப்படுமென்று றுதியாய்ச் சொல்லுகிறோம். மற்றும் மாணுக்கர்கள், நன்னடக்கை, தெய்வபக்தி, ராஜவிசுவாசம் முதலிய வற்றில் விசேட சிரத்தையுடன் பழக்கப்படுத்தப்படுவார்கள். இப் பாடசாலை யாரம்பித்துச்சொற்பநாட்களேசென்றிருப்பினும், இதற் குள்ளேயே யிதற்கீசனது கடாட்சமிருப்பதை விளக்கும்படி தகுந்த நற்சீலமுள்ள வுபாத்தியாயர்களும் வெகுதூரமிருந்து வந்துசேர்ந் திருக்கிறார்கள்.

இவ்வாரம்பத்தி விதற்குமேலிப் பெருங்காரியத்தைப்பற்றிக் கூற எங்களாலியலவில்லை. உண்மையில் இவ்வித்தியாசாலையானது பரமனது விலாசம் விளங்கப்பெற்றதாய், கல்விகற்பது மலைகைக் கற்பிப்பதும் கடவுளது திருவழிபாடே தவிர வேறன்றென்பதை யொருவாறு பார்ப்பவர்க்குக காட்டிவருவதாய், நிறைவேறிவர வேண்டுமென்பதெங்கள் கருத்தாகும். இப்பேருபகாரமாந் திருத் தொண்டிற்கு நந்தேசாபிமானிகள் யாவரு முன்வந்து தகுந்தவாதர வுகளைப் புரியத்துணிவார்கள் என நம்புகிறோம்.

நாளடைவி லிக்கலாசாலை யடைந்துவரும் விருத்தியைப்பற்றி யும், இதற்களிக்கப்படும் நன்கொடைகளைப்பற்றியும, மற்றுமிக்கலா சாலையின் நடபடிக்கைகளைப்பற்றியும் வருஷந்தோறும் தகுந்த கணக்கு முதலிய விபரங்களுடன் வருஷாந்த ரிபோர்ட்டு அல்லது அறிக்கைப் பத்திரம் வெளிப்படுத்தப்படும்.

இங்ஙனம்,

அ. ரத்தினசபாபதி முதலியார்,

சாந்தியாச்சிரமம், திருமீயச்சூர், பேரளம் போஸ்டு,

தஞ்சாவூர் ஜில்லா.



## அதிகாரம் 4.

---

### கடவுளின் இச்சையாகும் ஜகத்பரிபாகமார்க்கத்தை நிறைவேற்றிவரு மதிகாரிபுருஷர்கள்.

கடவுளால் வகுக்கப்பட்ட இப்பிரபஞ்சத்தின் பரிபாகமார்க்கமானது இயற்கையில் ஆதாரவற்றுத் தானேயாடுஞ் சாட்டையில்லாப் பம்பரம்போன்றதோர் ஜடரூபமான வியவஹாரமன்று; பின்னைச் சேதனத்தின் பஹிர்முக விலாசமேயாகிய இப் பரிபாக மார்க்கத்தில் தமக்களிக்கப்பட்டிருக்கும் 'மாதிரிகளுக்'கிணங்கப் பலவுருவங்களை நிர்மாணித்துக்கொண்டு வருவதற்கென வறிவுடை யேவலாளிகள் பலர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். உலகினிற்காணப்படு மெல்லா வஸ்துக்களும் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மாதிரியல்லது 'அச்சி'ன் படியேயன்றோ உருவாக்கப்பட்டு வருகின்றன.(1)

இவ் வுலகி னபிவிருத்தி முறையில் பரமனது இச்சையை நிறைவேற்றிவரும் மேற்கூறிய ஏவலாளிகளாகும் அதிகாரிபுருஷர் யாவரும் சேர்ந்த மஹா சங்கத்திற்கே "வெள்ளியம்பலம்," "பொன்னம்பலம்," "முக்திதரும் தெய்வசபை," "பழவடியார்களின் திருக்கூட்டம்," என்பனவாய பலவித நாமதேயங்க ளளிக்கப்பட்டிருக்கின்றன.(2) உலகந்தழைக்குமாறு நடனஞ்செய்யுந் திருவருளின் பிரவாகத்திற்கும் மானிடர் முதலியன வாழும் இப் பிரபஞ்சத்திற்கு மத்தியிலிம் மஹாபுருஷர்களே ஓர் பெரும் பிணைப்பாய் நிற்கின்றனர். உலகி னபிவிருத்திக்கு வேண்டிய சமஸ்த சக்திகளும் கடவுளிடமிருந்து இவ் வதிகாரிகளாகும் கால்வாய்களின் வழியே வருவிக்கப்படுகின்றன. இப் பெரியோர்கள் உலகத்தின் க்ஷேமார்த்தம் பிரத்தியக்ஷ வப்பிரத்தியக்ஷமான பலவழிகளில் உழைத்துவருகின்றார்கள்.(3)

---

(1) "வடிவனைத்துந்தந்த வடிவில்லாச் சுத்தவான் பொருளே" (தாயுமானவர்.)

(2) "முத்திதருந் தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாருஞ்சகத்தீரே" (தாயுமானவர்)

(1) முழுமுதலே, ஐம்புலனுக்கு மூவர்க்கு மென்றனக்கு வழிமுதலே, நின்பழவடியார் குழுமிக்கெழுமுதலே! (திருவாசகம்.)

(3) "கிருத்திய கர்த்தாராயகிலம்படைத் தெம்மையாள்கின்றபேர்" (தாயுமானவர்.)

ஆதலின் உலகரக்ஷணமாம் பெருங்காரியத்தின் நிருவாஹகர்களான இப்பெரியோர்களுக்கு சகாயஞ் சேவைகளைப்புரிதற்கென அவர்கட் கடிமைபூண் டொழுகும் பாக்கியத்தைவேண்டி யத்தனிப்பவர்க ளடையலாம்.

இனி, பூரணத்தன்மையெனும் முக்தியடையுமுன், மானிட பத வியையடைந்த ஒவ்வொரு ஜீவனும் முதலில் காட்டுமிராண்டி, நாக ரீகன், உயர்லெக்ஷியமுடையோன், பின் முக்தராம் குருதேவர்க்குச் சீடன், அப்பால் வெள்ளியம்பல மஹாசபையின்கண் பிரவேசமெய் தப்பெற்ற ஞானசாதகன், ஆகிய விப்பதவிகளனைத்தையும் கடந்தே முடிவில் முதிர்ச்சியடைந்த ஞானியாதல்வேண்டும். எப்பொழுது இவனுக்கு ஞானசபையினுட் பிரவேசங்கிடைக்கமோ அன்றேயிவன் உலகமாளும் சம்ரக்ஷகர்களான ஞானிகளின்குழாத்து ளொருவனு கிறான்.(1) அப்பால் ஞானத்தின் முதிர்ச்சியைப்பெற்று முக்தி யடைந்தபின்னர் உலகசம்ரக்ஷண மஹா ராஜ்யத்தின் பொறுப்பைத் தாங்கிய மேற்கூறிய ஞானசபையாருள் தானுமொரு அதிகாரியாகி அவ்விராஜ்ஜியத்துளொரு விபாகத்தையே (டிபார்ட்மெண்டு) நிர் வகிக்கும் உத்தியோகஸ்தனாகிறான்.

இவ்வுலக பரிபாகத்தில் சடமுதல் மானிட வகுப்புகள் வரை சகல வஸ்துக்களும் அபிவிருத்தியடைந்து வருதல் யாவும் இவ் வெள்ளியம்பல மஹாசபையினராகிய பெரியோர்களது பாதுகாப்பின் மகிமையாலன்றோ! இப் பூமியில் பெருங்கண்டங்கள் சமுத்திரங் களுக்கு மேல் நீர்வற்றிக் கிளம்புவதும் பின்னரவை யடங்கி நீருண் மறைவதும் இவ் வதிகாரி புருஷர்களின் ஆக்ஞையாலே நிகழ்கின்றது. உலகிலெங்கும் ஜெந்துக்கள் ஒன்றோடொன்று கலகமிட்டுப் போட்டி போட்டு நின்றே தத்தம் வாழ்வை நடத்திவருதலையும், இடைவிடா தெங்கும் காணப்படும் இக் கலகங்களில் பலஹீனங்கள் சிதைவுண்டு பலமுடையவைகளே எஞ்சிநிற்றலையும், இவ்வித பல சரீரங்களி லுறையும் ஜீவர்களின் பரிபாகம் இச்சரீரங்களாற் றடைபடாது விரை வில் மேலோங்கிச்செல்லும் வண்ணம் மேற்கூறிய மஹாபுருஷர்களே

(1) என்றைக்குமழியாத சிவராசயோகமா யிந்திராதிதேவர்களெலாம், விஜய ஜய ஜய வென்ன வாசிசொலவே கொலுவிருக்கு நம்பெருமை யெளி தோ, வேதாந்த சித்தாந்த சமரஸநன் னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே.

ஏற்படுத்துகின்றனர். உலோகங்கள், கந்தமூலம், மிருகம் இவற்றின் அபிவிருத்தியில் ஒவ்வொரு படியிலும் கடவுளினிச்சையாம்பிரபஞ்ச விகாஸமுறையினொழுங்கை நிறைவேற்றுமொரே நோக்கம் பெற்று ஓய்விலாவிழிப்புங் கருணையும் கொண்டோரா யாவற்றையும் சம்ரக்ஷித்து இயற்கையிற்றோன்றும் சகல சக்திகளையும் ஆட்டுவிப்போரும் அவர்களேயாவர்.

இவ்விதமே மானிடரது வாழ்க்கையிலும் சகல வியவகாரங்களையும் அடக்கியாண்டு வருபவர்களும் இவ்வெள்ளியம்பல மஹாசபையோரே! இவ் வுலகில் பல நாகரீகங்களை யேற்படுத்திக்கொள்ளுமாறு மானிடரைத் தூண்டிவருவோரும் இவர்களே. உலகிலுள்ள பலவகைச்சாதியாரும் சேர்ந்து ஆடும் இப்பிரபஞ்சநாடகத்தில் ஒவ்வொரு தேசத்தாரும் கைக்கொள்ளும் தொழிலுக்கேற்ற யோக்கியதைகளையுடைய மாந்தர்களையும், அம்மாந்தர்களின் மூலமாய் தகுந்த கல்வி கேள்விகளையும் அவ்வத் தேயத்தின்கண் பிறப்புறச்செய்தலும் இம் மூத்தோரின் காரியமே. பற்பல நாடுகளில் பொதுக்ஷேமத்தைக் கோருமுபகாரிகளாகி யுழைத்துவரும் ஆசாரியர்கள், புலவர்கள், சிற்பமாதி கலையுணர்ந்தோர், ராஜ்பதந்திர நிபுணர்கள், பிரத்தியக்ஷவிசாரணையுடையோர் ஆகிய இத்தகையினர் யாவருக்கும் அந்தரங்கத்தில் நின்று உத்ஸாகமூட்டுபவருமிவர்களே. இம்மட்டோ! மானிடருட் பெரும்பாலாரின் தம் பாடு பார்த்தலாகும் ஸ்வயநயம் பாராட்டும் தன்மை, பிறர்க்குத்தீங்கிழைத்தலாங்குணம், இவற்றையுங்கூட உலக காரியங்களிற் சிற்சிலவற்றை முதலில் சிதைவுறுத்திப் பின்னர் அவற்றையே முன்னிலுமழகுபெற்று விளங்குமாறு நிர்மாணம்செய்வதற்கு இவ் வதிகாரி புருஷர்களே உபயோகித்து வருகின்றனர். இவ்விதம் மனுஷ்யசமூகத்தின் பரிபாகத்தில் ஒவ்வொரு படியுமே கடவுளால் வகுக்கப்பட்டு அவனது ஏவலாளர்களாம் இப் பெரியோர்களால் ஒழுங்குடன் நிறைவேற்றப்பட்டு வருகின்றது. ஆதலின் நம் மானிட வகுப்பார்களாகிய அறுநூறுகோடி ஜீவர்களின் யோகக்ஷேம முழுமையும் இவ் விருவஷிகளினாதீனத்திற்றான் வைக்கப்பட்டிருக்கிறதென்பதை நாம் அறிதல்வேண்டும் (1) ஆதலின், கடவுளின் சங்கற்ப விச்

(1) அருமைபெறுபுகழ்பெற்றவேதாந்தசித்தாந்தமாதியாமந்தமீது,
மத்துவிதநிலையாராய்என்னையாண்டுள்ளடிமையானவர்களறிவினாடுந்,
திருமருவுகல்லாலடிக்கீழும்வளர்கின்றசித்தாந்தமூர்த்திமுதலே.
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியேசின்மயானந்தகுருவே! (தாயுமானவர்.)

சையே இஞ்ஞானமூர்த்திகளா மதிகாரிபுருஷர்களிடம் விளங்கி யிப் பிரபஞ்சத்தின் சகல காரியங்களையும் எழில்பெற நடாத்திவருகின்றது.

ஆகவே யிப்பெரியோர்க்கு அடிமையாகித் தொண்டுசெய்வோன் கடவுளின் தொண்டனேயாவனென்பதற்கு ஐயமுளதோ! இதனால் மேம்பாடுடை யுயர்நோக்கம்பூண்டவெவனு மறிந்துணரவேண்டியது யாதெனில் இவ்வுலகத்தையாண்டு ரக்ஷித்துவரும்மேற்கூறிய தெய்வ சபையில் கீழ்ப்படியிலுள்ளோர் யாவருக்கு மூத்தோருள் ஒருவராய் நிற்பவரே குருதேவனுவர் என்பதே. இக்காரணங்களால் ஜீவன்முக்தனும் குருநாதனைத் தேடியடைந்த புருஷனெவனும் கடவுளுக்குச் சமீபம் வந்தடைந்தவனேயென்பது பெறப்பட்டது.



# அதிகாரம் 5.

---

## குருதேவரின் பிளான்.

நெசவுதொழிற்கென வமைக்கப்பட்டதோர் "தறி" யின்கண் அளவற்ற நீட்சியுள்ளனவாய் எண்ணிறந்த நூற்சரடுகள் அதன் "பாவு" எனப்படும் விபாகத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றனவெனவும், இவ்வொவ்வொரு நூலும் தனித்தனி நோக்குமிடத்துச் சிறிதேனும் வர்ணமுடையனவாய்த் தோன்றுகிறினும் "அப்பாவிடையாடும் குழலி" யுள்ள ஊடு எனும் குறுக்குச்சரடொன்றோடு சம்பந்தப்படும்பொழுது குறிப்பிட்டதோர் வர்ணத்தை வெளிப்படுத்துமியற்கையுடையனவாய் அமைக்கப்பட்டிருக்கின்றனவெனவும், நீர் சற்றே பாவித்துக்கொள்வீராக இவ் "ஊடு" எனும் குறுக்குச் சரடு அளவிறந்த நீட்சியுமுள்ளதாகப் பாவினது நூல்களின் மத்தியிற் குறுக்கே யுள்ளும் புறமும் சென்றுசென் றோடிவருவதாலேயே. வஸ்திரங்களின் பலபல 'ரகங்க' ளல்லது தினுசுகள் சிருஷ்டிக்கப்படுகின்றனவன்றோ. இவ்வித தினுசுகள்யாவும் முன்னரே யாக்கப்பட்ட மாதிரிக் கிணங்கவேயன்றோ அந்த நெசவுகாரனுந் தொழிலாளியால் உருவாக்கப்படுகின்றன. இத்தறியின் பாவினது கோடிக்கணக்கான நூல்களெனப்படுவது மானிட ஜீவர்களாகும்; ஊடெனும் குறுக்குச் சரடென்பது கடவுளின் பிராணசக்தியேயாகும். இனி இத்தறியில் நெய்யப்படுந் தினுசெனப்படுவதோ ஜெகத்தின் பரிபாகமாகும். அதற்கு மூலாதாரமான மாதிரியாவது கடவுளது சங்கற்பத்தில் இவ்வுலகமெவ்விதம் பூரணமடைந்து விளங்க வேண்டுமென்றிருக்குமோ அந்நோக்கம் அல்லது கருத்தேயாகும்.

ஏனெனில், தான் முதலில் தீர்மானித்து முடித்துக்கொண்டிருக்குமோர் பிளான் அல்லது மாதிரிக்கிணங்கவேயன்றோ! கடவுளும் தன் சேதனத்தை மானிடசமூகத்தின்கண் உள்ளும் புறமுமோட்டுவித்து, அந்தர்யாமியாகத் தான் சம்பந்திக்கும் பிரதி ஜீவனையு மோர் நூதன வர்ணமல்லது பிரகாசத்துடன் விளங்கும்படி தூண்டுகின்றார். இவ்விதம் குறிப்பிட்ட வர்ணமாம் பிரகாசம் ஒவ்வொரு நூலாகும் ஜீவனிடத்தும் வெளிக்கிளம்பினாலன்றோ! தறி

யினில் செய்யப்பெறுந் தினுசும் தறிகாரனுருங் கடவுளினுத்தேசத் திற்கு மாறுபடாததாயிசைந்து நிற்கும். எங்கு தனியான சரடாம் ஜீவனு மூலகாரணனும் நெசவுகாரனது உத்தேசத்திற் கிணங்காது வர்ணமெனும் பிரகாசமற்று விளங்குவனே, அங்கெல்லாம் அத் தனிநூலுடை "தினுசு"ம் அம்மட்டிற் குறைவடைந்து கடவுளாந்தறிகாரனுசைகொண்ட "மாதிரி"யைப் பூரணப்படுத்தாமல் நிற்குமன்றே!

இனிக் கடவுளோ டைக்கியமுற்ற குருதேவரும் உலகமெனுந் தறியின்கண் செய்யப்பட்டுவரும் தினுசின் மூலகாரணமான நெசவு காரனுங் கடவுளின் உத்தேசமல்லது மாதிரியை நன்குணர்ந்தவராவர். ஆதலின் ஒவ்வொரு தடவையிலு மித்தறியின்கண் ஊடு பாய்வதுபோல் பரமனது விலாசம் பிரபஞ்சத்திலு முட்புகுந்தாடும் பொழுதெல்லாம், அச்சேசாதியினூடுறையும் பிரதி மானிடனும், ஈஸ்வர சங்கற்பத்தி னுத்தேசத்திற்கிணங்க நூதன பிரகாசத்தொடு விளங்குமாறு அவ்வச்சீவர்க்கு அந்தரங்கத்தி லுபகாரம் செய்துவருதலே அவரது தொழிலாகும். இப்பிரபஞ்சமார்க்கத்தில் நாமானந்தமடைதலும் கடவுளோ டிணக்கமடைந்தொழுக வரலாற்றுன் சித்திக்குமன்றே!

இனிக் குருநாதனது பிரபஞ்ச வுபகாரச்செயல்கள் யாவும் பிரத்தியக்ஷ வப்பிரத்தியக்ஷ விதங்களில் நடந்தேறுகின்றன. அவனது தொழிலிற் பெரும்பாகம் சூட்சும வுலகங்களிலேயே நிகழ்கின்றன. எனெனில் சகல ஜீவர்களி னந்தரங்க வியவகாரங்கள், பிரபஞ்சவியற்கையின் மூலகாரணங்களிவையாவும் நிறைவேறிவருவது சூக்ஷும ஸ்திதிகளாகும் உயருலகங்களிலன்றே! அந்நிலைகளிற்றுன் மானிடர் முதலிய சகலப் பிராணிகளுக்கு மவ்வவற்றி னபிவிர்த்திக் கின்றியமையாத சேதனமாதி சக்திகளைக் குருதேவரின்னு மேற்பதவிகளினின்றும் வருவித்தளிக்கிறுர். குருதேவ ரென்பார் கேவலம் பூரணத்தன்மையடைந்ததோர் மானிடர் மாத்திரமேயன்று; பின்னைக் கடவுளது சேதனமாம் பிரவாகம் பிரபஞ்சத்து ளெங்குமோடிப் பரவுதற்கெனவே யமைந்த நேர்வழியான கால்வாயுமாவரன்றே! தொட்டால் திடீரென வுயிர்வாங்கிவிடு மிக வுயர்தர வீரியம்பொருந்தியதோர் மின்சாரவோட்டத்தை ("

மாற்றி") எனுமோர் யந்திரம் தன்னுளிழுத்துக்கொண் டஃதை மாற்றி வீரியந் தணிந்ததாக்கி யபாயமன்றி மனிதருக் குபயோகமாகும் வழிகளினுதவுமாறு செய்துவிடுவதுபோல், குருதேவனும், யாவர்க்கு மெட்டாக் கடவுளின் வீரியத்தையும் தன்னியற்கையில் தாபித்துக்கொண்டு மாற்றி, மானிட கோடிகளுக்குப் பிரயோஜனப் படும் பலவழிகளிலெல்லாம் பொழிந்து வருகின்றனர். சகல செடி கொடிகளின்மீதுஞ் சூரியன் எப்பொழுதுந் தன் கிரணங்களைச் சொரிந்துகொண்டே நின்று, அவைதாந்தாம் இலைமலர்களைப் பக்கு வப்படுத்தி வெளிக்காட்டும்படி செய்துவருவதுபோன்றே, ஸ்ரீ குரு தேவனு மப்பிரத்தியக்ஷமான மேலுலகங்களில் சகல ஜீவசமூகங்களு மபிவிர்த்தி யடைந்தோங்கி வருமாறு, அவற்றின்மீதிடைவிடாது தஞ்சக்தியாங் கிரணங்களை வருஷித்தருளுகின்றனர்.

இனிச் சாமானியரான மன்பதைகளைக்காட்டிலும் விசேட பக்குவமடைந்த சிற்சில மானிடர்க்குத் தனியாய் உத்ஸாஹமுதவிகளைக் குருதேவன் புரிவது மிவ்வுண்ணிலைகளினின்றே! ஒருவன் உயர் நோக்கம்படிந்த வுள்ளங்கொளின், உடனே யவரது திருஷ்டிக்குப் புலப்பட்டு அவரிடமிருந்துதவியைத் தானறியாமலே யடைகிறான். நற்காரியங்களில் மிகுந்த வூக்கமடைந்து மனந்தளராத் தன்மை யுடன் அவற்றைச் சாதித்துக்கொள்ளும்படி யந்தரங்கத்தில் பரிசுத்தி தைரிய மிவற்றை யிவனுக்குக் குருநாதரே யுண்ணிலைகளிலளிக்கிறார். ஆதலின் மானிடத்திற்குரிய எவ்வழியிலாயினு மிவ்வுலகில் பிறர்க்குதவிபுரியு நற்சிந்தையுடையோர் யாவராயினு மெவ்விடத்தி லாயினு மிஞ்ஞான மூர்த்திகளின் திருஷ்டியில் தென்படாமலு மவர்களா லுபகரிக்கப்படாமலு மிருப்பவர் கிடையாரென்பதே யுண்மை.

இவ்விதமே குருதேவர் பஹிரங்கமாகவு முலகினருக் குதவி புரிய வுடன்படுஞ் சமயங்களுமேற்படும். அஃதெப்படியெனிற் கூறுவாம். ஜகத்தின் பரிபாக மார்க்கத்தி லவ்விதம் நிகழவேண்டு மெனக் கடவுளின் சங்கல்பமுமிருப்பின், இவர்களும் மானிடர் மத்தியிலவதரித்தவராகி யவர்கட்கு நீதிமுதலிய சட்டங்களை யேற்படுத்தியுஞ் சகல தர்மங்களையும் பிரத்தியக்ஷமா யுபதேசித் துத்ஸாஹப் படுத்தியும் வருவார்கள். அவ்வித மிப்பரதகண்டத்தில் வெளிப்

பட்டு மானிடரோடு மானிடராய் வசித்துவந்த மஹாபுருஷர்களே யன்றோ! மனுவும் புத்தருங் கிருஷ்ணனும். இப்படியே 'கிரீஸ்' தேசத்தில் 'பைதகோராஸ்' என்னும் பெரியோரும், 'பாலஸ்தீன்' நாட்டில் கிறிஸ்துவு நடித்துக்காட்டி வந்தவர்கள். இம்மட்டோ! இக்காலத்திலுமிப்படியே அதி சமீபத்தில் ஜகத்குருவாம் நாதனை முன்னே கொண்டவர்களாய ஞானநிதிகளிலநேகர் இவ்வுலகினிற் றோன்றி, நமக்குபதேசிக்கவும் நம்மை நன்னெறிக் குய்ப்பிக்கவுமே நம்மத்தியிற் சஞ்சரித் தருளுவார்களென்பது திண்ணம்.

இன்னுமோர் வழியிலுங் குருதேவர் தஞ்சீசாதராகு மானிடர்க் குதவிபுரிந்தருளுவர். அஃதெங்ஙனெனில் மானிடரிற்றகுதியடைந்த சிலரைத்தனது சீடராகவங்கீகரித்துக் கொள்ளலே யென்க. என்றைக்காயினு மொருநாள் குருதேவனுக்குகந்ததோர் சீடனாதல் வேண்டுமெனுமவாவு நமக்கிருத்தலால் அவ்விதமவரது அங்கீகாரத் திற்கவசியமான சாதனங்கள் யாவையென நீர் விசாரித்துணருதல் வேண்டும்.



## அதிகாரம் 6.

---

### சீடபாலம்.

ஜீவன் முக்தனும் குருநாதனிடம் சீட னுய்யடைக்கலம் புகுதல் மிக மேன்மைபொருந்தியதோர் பாக்கியமேயாயினும் அவ்விதஞ் சீடனுகாது நிற்றலொரு குற்றமாகுமென்பதாம் அதனுலுமக்குத்தண் டனையல்லது துன்பமேதேனும் விளையுமென்பது மில்லையென நீர் முதலிலறிந்துகொள்ளல் வேண்டும். ஏனெனில் நமது பரிபாகத்திற்கு நாமே அதிகாரிகளாதலின் அதை நடாத்தி வருவதிற் பூரண சுதந்தி ரம் நமக்குண்டென்பதற்குத் தடையுமுண்டோ? அஃதென்னவெனில் நமது பரிபாகம் துரிதமாய் நடந்தேறுதற்கு நமது சொந்தமுயற்சி மிகவு மின்றியமையாததேயாயினும் அதைமுழுமையும் தடுத்து நிறுத்திவிட நம்மாலியலாதென்பதுண்மையென்க; ஏனெனில் சர்வப் பிரபஞ்சவதிகாரியாகிய கடவுள் இங்குள்ள சகலமுமபிவிருத்தியடை ந்து மேற்செல்லவேண்டுமென வுத்தேசித்திருக்கின்றமையின், அவ னது இச்சைக்குமீறிநிற்றல் நமக் கசாத்திய மாகுமன்றே! இனி, ஜீவன் முக்தராகு மஹாபுருடர்களுளரென்பதை நம்பாது நின்றால் நமது பரிபாகத்திற்குத் தடையேற்படுமோவென்பது மில்லை. தம்மி டத்தில் நமது நம்பிக்கை முதலியவற்றை யெதிர்பாராமலே அப் பெரியோர் நற்குணமுள்ளோர் யாவரையும் புரப்பதுபோல் நம்மை யுமாதரித்து வருவர். ஆனால் இந் நம்பிக்கைகொண்டு அவர்களுக் கடிமை பூணுவீராகில் நமது பரிபாக மதிதீவிரமாய் மேற்செல்லு மென்பதுண்மையாகும்.

இனி குருதேவன் மானிடர் சகலரிடமும் பேரன்பு பூண்டவ ராதலின் தன தன்பிற்கிலக்காம் அம்மானிடகோடிகளின் மத்தியினி ன்றும் விசேடகாரணங்களிருப்பினன்றி நம்மைமட்டும் தனியாய் மற்றவர்களிடஞ்செலுத்தப்படாத தோரதிக வன்பிற்குரிமைகொண் ட சீடனுக்குதலெங்ஙனமமையும். ஆதலின், அதற்கேற்ற விசேட காரணத்தை நீரே முதலில் உற்பத்தியாக்கிக்கொள்ளல் வேண்டும். அக்காரணம்யாதோவெனில் கூறுவேன். உலகம் புரக்கும் அவனது தொழிலில் குருநாதனுக்குத்தக்க வுதவிகளை நீர் செய்யக்கூடியவ

ராதலே யென்க. குருதேவனும் மகாபுருஷனிடம் பேரறிவுமானந்தா னுபவமு நிறைந்திருப்பினு மவையாவற்றையும் சிறப்பித்துக்கொண் டாடியே காலங்கழித்துத் திரியாமலவர் பிரபஞ்சநாதனுங் கடவுளின் காரியாதிகளைப் பிரதிநிதிஷமும் முழுக்கவனத்துட னிறைவேற்றி வரும் ஓய்விலா உழைப்பாளியேயாவர் என நீரறிந்துகொள்ளல் வேண்டும். இப்பெரிய அதிகாரத்திற்கேற்றவாறு அவரிடமுள்ள சக்தி யுமெவ்வளவேனுங் குறைவிலாததெனை நமக்குத் தென்படினும், உண்மையி லஃது அவ்விதமானதன்று. பின்னை அவரிடமிருக்கும் சக்திக்குமோரளவுண்டெனை நாமறிதல்வேண்டும். உலகசம்ரக்ஷணார்த் தம் தன்னிடம் வைக்கப்பட்டிருக்கு மிச்சக்தியாம் தனத்தை பரம னது காரியங்களை நடாத்திவருதற்குத் தகுந்த சௌகரிய முதவிகள் கிடைப்பதாயிருந்தாலன்றி யொருநடுகளவேனுமிவர் வீணேசெல வழிக்க வுடன்படாரன்றோ. இனிமானிடனொருவனைத் தன்சீடனாக் கிக்கொள்ளற்குக் குருதேவருமவன் பொருட்டுத் தனது சக்தியைச் சிறிது உபயோகப்படுத்தி முயலவேண்டியது மவசியமாகின்றது. ஆதலால் இச்சீவனது நிமித்த மிவ்விதஞ் செலவழிக்கப்படுந் தஞ் சத்தியாம் திரவியத்திற்கு, வேறுவிதங்களிலுபயோகிப்பதைக் காட் டினு மதிகமாய்த் தகுந்த பலன் கிடைப்பதாயிருந்தாலன்றி, யிவனைக் குருநாதனு மாட்கொள்ளத்துணியார். ஆகவே குருதேவர்க்கடிமை யாக விச்சைகொள்ளுவோன் எவனுமுலகிலுள்ள வேனைய சாமானி யரைப்போல் தஞ்சுகதுக்காதிகளையேபோற்றி அவற்றிற்கு வழிகளைக் கோரி நில்லாமல் குருநாதனலங்கீகரிக்கப்படின், அவரது சுமைகளைத் தானுந்தாங்கி யவர்க்குதவிபுரியுஞ் சுபாவம் அமைந்தவனாயிருத்தல் வேண்டும்.

உலகரக்ஷணத்திலிவ்விதமாய பெரும் பொறுப்புகளைக்கொண்டு நிற்கும் ஒரு முக்தனுங்குருதேவன் தனக்குச் சீடர்களையபேக்ஷிக்குங் காரணமெதுவெனில் அவர்கட்கு ஞானத்தையூட்டி யேனையோரைக் காட்டினு மவரை மேம்பட்டவராக்கிவிடும் பொருட்டன்று; பின்னைத் தான் செய்துவரும் பெருங்காரியத்திலவர்களைப் பழக்குவித்து நாள டைவி லவர்கள் முதிர்ச்சியடைந்து வருங்காலை யதிகமதிகமாயவர் களிடந்தானிப்போது நிறைவேற்றிவருங் கடமைகளை யேற்றுவித் துப்பின்னர் மென்மேலுஞ் செய்துமுடிக்க வேண்டியதாய்க்கிடக்கு

முயர்காரியங்களைக் கவனிப்பதற்குச் சாவகாசமுஞ் சௌகரியமுந் தனக்குச் சம்பாதித்துக்கொள்ளு நோக்கங்கொண்டே யென்க. (1) ஆகவே குருதேவனுமொரு சீடனையங்கீகாரஞ் செய்துகொள்ளுவ தெல்லாமவரது உலகநோக்கும் வேலைக்குத் தகுதியடைந்தபின்னரவ னுந் தனக்குதவிபுரிவனெனுங் கருத்தைப்பற்றியேயன்றி வேறன்று.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் நாமறிந்துகொள்ளவேண்டி யது யாதெனில் குருவிற்குச் சீடனாதலைவிரும்புவோனத்தகைய மஹா புருஷனது பணிவிடைக்குதகுந்த சாமர்த்தியமல்லது பிரபாவமேதேனு மொன்றை யுடையவனாதல்வேண்டும். கேவல மிவன் தோஷமற்றவ னாய்மட்டு மிருந்து விசேடகுணம் அல்லது சாமர்த்தியமொன்றுமில் லானாய்விளங்கி னப்பெரியோருக்கு அவனாலெவ்வகைப் பிரயோஜனமு மேற்படாதன்றோ! தனது துக்கங்களின் ஒழிவையோ, தனது ஆன்ம பரிபாகலாபத்தையோ அல்லது இம்மைமறுமையிலதிகார மல்லது உலக சித்திகளையோ, நாடிக் குருவையடையவிரும்புவோனாயினிவன் குரு விற்கே யடிமைபூண்டொழுகுதலு மவருக்குச்சகாயம் புரிதலுமெங் ஙனமமையும்? இவனால் குருநாதன் தொழிற்கிடைஞ்சலுந் தடையும் விளையுமென்பதற்கையமுண்டோ! இத்தன்மையனாஞ் சீடனுக்குத் தெய்வத்தன்மையாளரான குருமூர்த்திகளை வந்தடையும், பரிபாக முதிர்ச்சி இன்னும் பன்னாட்குப்பின்னரே கிடைக்குமேயன்றிச் சமீ பத்திற்கிட்டுமோ? இவ்விதமின்றித் தன் சகோதரராம் மானிடரனை வர்க்கு முதவிபுரிந்துவந்திருக்கும் பழக்கத்தால், தன்னறிவையுமன் பையும் பன்னாட்களாய்ப் பெருக்கக்கொண்டும், மிகவுமுயர்நோக்கங் கொண்ட வுள்ளம்படைத்தவனாகி, யந்நோக்கத்தை யனுட்டிப்பதி லெத்துணைத்தீமையு மபவாதமும்வரினு மவற்றையெல்லாந்தாங்கு முறுதியுடைச் சுபாவம்பெற்றும் ஒருவன் விளங்கிவருங்காலை யின்னு மப்பாற் சிற்சில சாதனங்களையும் சாதித்துக்கொள்ளத் துணிந்தால் மட்டும் குருவானவரிவனை யேற்றுக்கொள்ளுவாரேயன்றி வேறுவித மில்லை.

---

(1) நீ ஞானவனன் மூட்டியேகனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவமதறிந்து நின்னருளான குளிகை கொடுபரிசி
த்துவேதி செய்து பத்துமாற்றுத் தங்கமாக்கியே
பணிகொண்ட பக்ஷத்தை என் சொல்லுவேன். தாயுமானவர்.

இனி யிச்சாதனங்கள் யாவையோவெனி னவற்றை யானெடுத் துரைக்கக்கூடியதைக் காட்டினும் பன்மடங்கதிகமான தெளிவுடனே னது குருதேவரே தனது சீடனுமெனது சகோதரனுமாகிய ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தியின் மூலமாய் வெளிவந்திருக்கு மரியதோர் நூலின் கண், உலகங்கடந்தேறியுய்யுமாறு திருவாய்மலர்ந்தருளியிருப்பதை நீர் விஸ்தாரமாய்க் கண்டுகொள்வீராக. "சற்குரு சரணங்களி"லெ னும் பெயர்பூண்ட அவ் வுயர் நூலின்கண்ணேவ்வொரு முமுட்சுவு முயன்று சாதகஞ்செய்துகொள்ளவேண்டிய மார்க்கம் செவ்வனே விளக்கப்பட்டிருக்கின்றது. அவற்றை யதிககவனங்கொண்டு படித் துணர்ந்துகொள்வது நங்கடமையேயாகும். அன்றியுமதிற் கூறப் பட்டிருக்குமொவ்வொருவிஷயமுங் குருநாதர் யதார்த்தமாயுள்ளபடி தங்கருத்தை வெளியிட்டிருப்பதுவேயன்றி யலங்காரமாதிசொற்க ளின் வன்மையைப்பற்றிச்சிறிது கூட்டியே யதிவருணனையாய்த்தீட்டி யிருப்பனவாகாவெனத் தெளிந்துகொள்ளல்வேண்டும். இச் சாதனங் களையே ஞானசித்திகளாகிய சகல பெரியோர்களுந் தஞ்சீடராக வேண்டு மானிடரனைவரும் கைக்கொள்ளல்வேண்டுமென வாக்குரை புரிகின்றனர் ஞானிகள் பலரும்சேர்ந்த தெய்வசபையாம் பொன் னம்பல மென்பதொன்றேயன்றோ! இவ்வுலகில் விளங்குகின்றது. அங்குநிகழும் விதிகளிவைகளே. இனி யாரம்பத்திலேயே மேற் கூறிய நற்குணங்கள்யாவும் பூரணமாய் நம்மால் கைக்கொள்ளப்பட வேண்டுமெனக் குருதேவர் கூறுகிறதில்லை. ஆயினுமென்றைக்கா யினுமொருநாள் குருதேவனது மனதிற்கினியசீடனாய் நீரும் ஏற் றுக்கொள்ளப்படவேண்டுமாயின், அக் குணங்களனைத்தையும் சம்பா தித்துக்கொள்ள நீர் முயலுதலேவேண்டும். அவற்றிற் சிறிதேனுங் குறையுமாகில் நமக்கவனதங்கீகாரப்பேறு கிட்டாதென்றே மதித் தின்றுமுதல் நம்மை யவ்வழியில் பழக்கிக்கொண்டு வரத்துணிவதே யுமது கடமை. ஆதலின் நீர் மிகவுமுழைப்புஞ் சுறுசுறுப்புமுடை யோராயொவ்வொரு நிமிஷகாலமும் மிகவும் பயனுள்ளதென மனத் திலுன்னிக் காலங்கழிக்கவாரம்பித்து, அதி சமீபகாலத்தில் குருவும் நம்மை யடிமைகொண்டு நமது சகாயத்தை நாடும் பாக்கியம் நமக்குக் கிட்டுமென்ற வெண்ணங்கொண்டு அக் காலே யவரது தொண்டைப் புரிதற்குத்தக்கவாற்றலு நற்சீலமும் நாமடைந்துநிற்குமாறு இந்நாண் முதலே யவ்வழியிற் பழகிவருத லின்றியமையாததாகுமன்றோ?

இனி முக்தி மார்க்கத்தில் பிரவேசிக்க முயலும் நமது விருப்பமும் கைகூடுமாயினக் காலை குருநாதனுெநு நமக்கேற்படுஞ் சம்பந்தஞ் சிலபருவங்கள் அல்லது படிகளுடையதாகும்; அவற்றுண் முதற் படியாவது குருவானவர் சீடனுக விரும்புவோனைச் சோதனைநிலையில் நிறுத்தியவனைப் பரீட்சித்தறிய வேற்றுக்கொள்ளலே.

(1) எண்ணிறந்த காலமாய் நீர் உயர் நோக்கங்கொண்டவரென்பதைக் கண்ணுற்று நம்மை யிதுகாறுங் கட்டிக்காத்து வந்திருப்பவரும், நம்மைத் தனக்கடிமையாய்ப் பழக்கித் தேற்றுவித்துக் கொள்ள விச்சைகொண்டிருப்பவருமாகிய ஞானமூர்த்தி யெவரோ, அவரே யிப்பொழுது நமக்கு குருநாதனுகத் தனது சித்திபெற்ற பழஞ்சீடருளொருவரையனுப்பி, நம்மைத் தனதருகிலழைத்து வரச் செய்வார். நமது சரீரம் நித்திரையிற் கிடக்குங்காலைச் சூட்சுமமல்லது காமிகப் பிரபஞ்சத்தில் நீர் குருதேவரிட மழைத்துக்கொண்டு போகப்படுவீர். அச்சமயத்திலவர் ஸ்வயமே நம்மைச் சோதனுநிலையில்வைக்கத் தீர்மானஞ் செய்துக்கூ வளிப்பார். இதனுலிப்பொழுதே நீருஞ்சீடனுய்விட்டீரென்பதில்லை பின்னை யச்சீடபாவம் நிறைவேறுதல் குருவினது சோதனைகள் தீர்ந்தபின், உம்மைப்பூரணமான வங்கீகாரத்துடனவரேற்றுக் கொண்டபொழுது தான் நிகழும். இனி யிச்சோதனு நிலையின்கண் நமக்குநிகழ்வது யாதெனிற் கூறுவேன் தஞ்சீடனுதற்கு நம்மை முதல் முதல் பரீக்ஷித்தறிய வேற்றுக் கொண்ட வந்நிமிஷமே குருதேவர் நமது சூட்சும சரீரங்களத்தனைக்கு மொவ்வினதாய பிரதிமையொன்றைச் சூட்சுமமான பிரகிருதியாலுண்டுபண்ணி அதைத் தனதாசிரமத்தில் வைத்துக்கொள்ளுவார். நிமிஷந்தோறும் நீருண்டுபண்ணிக்கொள்ளும் பலவித நினைவுகளுணர்ச்சிகள், போவாக்கள் முதலியவற்றுல் நமதுகாமிகமானசிக

(1) ஞானநெறி நிட்டை கூடவு மெந்நாளுமே,
யறிவினின்று குருவா யுணர்த்தியது மன்றி
மோனகுருவாகியே யகிலமீ துவரவந்த சீருளை
யைய வையா வினியென் சொல்வேன்
சிறிய னேழை நமதடிமை யென்
றுனது திருவுளத்தி லிருந்ததோ. (தாயுமானவர்)

நல்லன் பர்தமைச் சேயாகத்
தொழும்பு கொள்ளுங் கனகனமே
சோதிக்குன்றே! (தாயுமானவர்)

மாதி சரீரங்களிலேற்படு மாறுதல்கள் யாவற்றிற்கு மியைந்தவாறு, யாதொரு வெளித்தூண்டுதலு மின்றித் தன்படியே யப்பிரதிமையு மப்போதைக்கப்போது மாறிக்கொண்டு வருமியற்கை வாய்ந்ததாகின்றது. உயிருடைய தேபோன்ற இப்பிரதிமையைப் பிரதிதினமும் குருதேவர் பார்த்து நாடொறுமேற்படும் நுமதுவாழ்க்கையின் நிலையைக் கண்ணுற்றுத், தஞ்சீடனுதற்கு நீரெம்மட்டிற்றகுதி யடைந்து வருகிறீரென்பதையு மறிந்துகொள்ளுவர். (1)

இனி யிவ்விதம் குருதேவரு நும்மையுயருலகில் மேற்கூறிய வண்ணஞ் சோதனை நிலையிலேற்றுவித்திருக்கு முண்மையை நீர் ஸ்தூலமூளையின் விலாசமாகிய ஜாக்ராவஸ்தையில் அறிந்துகொள்ளவுங் கூடும், அல்லது அறிந்துகொள்ளாமலிருப்பது முண்டு. இஃதெப்படியிருப்பினும் பாதகமில்லை. ஆனுலிதில் நீர் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயம் யாதெனில் ஸ்ரீ குருநாதரது உலகவுபகாரமாந் தொழிலில் நீரெவ்விதமும் நும்மைப் பழக்கிக்கொண்டு வருகிறீரென்பது தவிர வேறன்று. இவ்வித மும்மைப்பழக்குவிக்கத் திருவுள்ளம் குவித்த குருநாதனும்பிற்பால் உமமை உடனே சோதிக்கவாவது, அல்ல தெக்காரியங்களிலுந் தூண்டிவாவாவது தொடங்குகிறதில்லை. பின்னையும்மையுமதுபோக்கிலே போகவிட்டு, உயர்குணங்களும் பரோபகார சீலமும் பொருந்தி நாட்கழிக்கின்றீரா வென்பதைமட்டும் பார்த்துவருவர், நுமது பிரதிதின வாழ்க்கையில் கருமவசத்தால் நேரும் இன்பதுன்பங்களை நீ ரெவ்விதம் நோக்குக்கொள்ளுகின்றீரென்பதையு, மவற்றை யனுபவிக்கும்பொழுதெல்லாம் பிறரிடம் கருணையுமன்பும் செலுத்துங் குணத்தையே விருத்திசெய்து வருகின்றீரா அல்லது தன் துக்கங்களையே நினைந்து வீணில் வாதனைகளால் நொந்து மனங்கலங்கிக் காலங்கழிக்கும் பான்மையை நீரடைகின்றீரா வென்பதையுங் கூர்ந்தறிந்து கொள்ளுகின்றனர்.

இந்நிலை தொடங்கியபின் இதனடுத்தபடி வந்து சேருதற்கு எவ்வளவு காலஞ் செல்லு மென்பது முழுமையு நும்மையே பொறுத்

(1) பேதைப்பருவத்தேபின் றொடர்ந்
தென் பக்குவ, முன் சோதித்த
வண்ணல் வந்ததோய்வாரோ
பைங்கிளியே! — தாயுமானவர்.

திருக்கின்றது. இஃது வழக்கம்போலேழாண்டளவில் நிற்பினும் நிற்கும். அல்லது நமது விசேடப் பிரயத்தனங்களால் குறையினுங் குறையும். அல்லது நமக்குக் கிடைக்குஞ் சௌகர்யங்களத்தனையும் நீர் பயன்படுத்திக்கொள்ளாது வீணே காலங்கழிக்க நேரினிக்காலவளவு மிகினு மிகும். ஆதலின் இச்சோதனை நிலையாயபடியின் காலவளவும் நமது முயற்சியையே சார்ந்து நிற்கின்றது.

இதற்கு மப்பாலுள்ள குருநாதனது பூரண வங்கீகாரத்தாலேற்படுஞ் சீடபாவமெனும் படியை யினி விளக்குவாம். மேலே கூறிப்போந்தவண்ணங் குருதேவனானவர் நம்மைச் சோதித்து நஞ் சுபாவத்தைச் சுத்தமென நிச்சயித்துக்கொண்ட பின்னரே நமக்கந்நிலையும் வாய்க்கின்றது. இத்தருணத்தில் நமக்கு மவருக்குமுள்ள சம்பந்த மிகவு மாறி யோர் நூதனத் தன்மையை யடைகின்றது. (1) நீர் அறியமுடியாத பலவித சூட்சும வழிகளி லவரும்மைத் தனது பிரக்ஞையின் விலாசத்திற் கேற்றதோர் ஸ்தானமா யாக்கிக்கொள்ளுகின்றனர். நமதியற்கையே யவரதியற்கையில கலந்து பொருந்தி நிற்பதாயினமையின், தான் விரும்பும்பொழுதெல்லாந் நமது இச்சை நினைவுகளையெல்லாந் தனதறிவி லுணர்ந்துகொண் டவற்றைத் தன் காரியங்களிலு முபயோகித்துக் கொண்டாளுவர். (2) இனிக் கள்ளங்கபடமுதலிய மாசு சிறிதாயினுங் கலந்த சீடனது கருத்துக்களாற் றனதுன்னதவ்வியவகாரங்களுக்கு இடையூறு நிகழும்படி குருதேவனு மிடங்கொடாரன்றோ! ஆதலினவ்வித மலங்கலந்த வெண்ண மோர் கணமேனுஞ் சீடனிடங் காணப்படுமாயினுடனே அஃது தன்னியற்கையிற் கலவாதவண்ணம் தனது பிரக்ஞைக்கும் அவனது சிந்தைக்கு மத்தியில் தடையாகும் திரையொன்றை குருவானவர் சிருஷ்டித்துக்கொள்ள நேருகின்றது. இத்திரையை ஒரு க்ஷணநேரத்திற்காயினு மேற்படுத்தல் தனதிடமுள்ள சக்தியை வீணே செலவழித்தே யாகவேண்டிய தாதலி னிவ்

(1) அறியா தறிந்தெனையா ளண்ணலை நாமாகக்
குறியாதவண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.
(தாயுமானவர் எந்நாட்கண்ணி)

(2) சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.
(தாயுமானவர்)

விதமடிக்கடி கவலைகொண்டு கட்டிக் காக்கப்படவேண்டிய நிலையிலுள்ளோனுமொருவனைக்குருதேவனுஞ் சீடனு யேற்றுக்கொள்ள வொருமைப்படாரன்றோ. இவ்விதமல்லாது நாளுக்குநாள் சீடனும் தூய்மையறிவு பெருமையாதி குணங்கணிறைந்த நற்சீலம் பெருக வளர்ந்து வருவானாயின் ஸ்ரீ குருநாதனும் வரவர அவனது இச்சை நினைவுகளையெல்லாங் கொள்ளைகொண்டவனையு மானந்தமயமாக்கித் தானெனுமகந்தை நீக்கி யவனது நெஞ்சினில் அவன் கனவிலு மெய்த வொண்ணாப் "போத பரிபூரண அகண்டாகாரமும்" நிறுவச் செய்தலுந் திண்ணமேயன்றோ. (1)

இவ்விதஞ் சீவன்முக்தனுஞ் சற்குருவிற்கு நேர்சீடனாய்விடினொருவனது பொறுப்பும் பாரமுமிகவுயர்ந்ததாகிவிடும். அங்ஙனமே யவனது பாக்கியமுமானந்தமும் பன்மடங்கதிகமாய்ப் பெருகிவிடுகின்றது. ஏனெனிலிவன் திருந்தசிரத்தையும் குருவினிடத்தில் தானெனுமகந்தையற்ற இடைவிடாப்பற்றுமுடையோனாய் விளங்குவானாயின், குருவுமவனதறிவை விட்டகலாதகருணைவடிவாயவனைக்கட்டிக்காத்து வழிகாட்டுவர். செய்வகையறியாது முழலநேருந்தருணங்களிலெல்லாமிவனுக்குத் தன்னினைவின் நிச்சயம் தெரிந்தறிய ஸ்ரீ குருநாதனது திருவுள்ளத்தோடொத்தை ஒப்பிட்டுப்பார்த் துண்மைகண்டறிந்து கொள்ளுஞ்சக்தியு மிப்பொழுது வாய்க்கின்றது.(2) எப்பொழுதும் குருநாதனது நாமங்கொண்டழைப்பதற்கு வழியுமிவனுக்குள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குவதால் எச்சமயத்திலு மெவ்விதமொழுகுவதென மயங்கிநிற்றலமையாது. ஆதலினிவனின்றுமுதல் ஸ்ரீ குருநாதனது கடாக்ஷமாம் பெருங்கவசம் படைத்தோனாகி மானிடர்மத்தியிற் பயம் சிறிதுமில்லானாய்த் திரிவன்.

(1) அன்னையப்பனென்னுவித்துணையெனுந்
தன்னையொப்பற்றசற்குருவென்பதன்
னென்னைப்பூரணவின்பவெளிக்குணே
துன்னவைத்தசுடரெனத்தக்கதே. (தாயுமானவர்.)

(2) அந்நாண்முதலாகநாளதுவரைக்குமுனடிமைகடவேசனனமானதோவனந்தமுண்டு, லைசனனமீது-இதனுளறியவேண்டுவனவறியலர், மோகமாதிதருபாசமானதையறிந்துவிட்டேனையுமெனையுமே, முழுதுணர்ந்துபரமானவின்பவெனமூழ்கவேண்டும். (தாயுமானவர்.)

அடுத்த நிலையாவது புத்திரபாவமெனும் பதவியாம். புத்திரனாதலுமாருக்கோவெனின் குருதேவற்கேயென்க. இத்தருணத்தில் குருவானவர் சீடனைத் தன்னொடும் விசேட நெருக்கத்துடனைக்கியப் படுத்திக்கொள்கின்றனர். இன்னணம் முதலாய்ச்சீடனது அதமமனது ஒருகணப்பொழுதாயினும் பூர்வஜென்ம வாசனையால் திடீரென எழுந்தோங்குங்காலையிலுங்கூட மதனால்நேரும் களங்கங்கள் தன்னை யணுகாதபடி தனது பிரக்ஞைக்கு மவனுடையதற்கு மத்தியிலொரு திரையை ஏற்படுத்திக்கொள்ளும் சுதந்தரத்தையும் குருநாதனிழந்து விடுகின்றனர். மகன்தந்தையாகிய இவ்விருவருக்குள்ளு மினியென் றுமழியாச்சேர்க்கையொன் றிப்பொழுதுண்டாகிவிடுகின்றது. (1) இனியிப்புத்திரபாவமெனுஞ்சம்பந்தம் வாய்க்குந்தருணத்திலேதான்

நெருங்குமடியார்களுநீயு
நின்றுநிலாவிவிளையாடு
மருங்கேசார்ந்துவரவெங்கள்வாழ்வே
வாவென்றருளாயே! (7) கோ.மூ. திருப்பதிகம். திருவாசகம்.
பரம்பரனேயுனபழவடியார்கூட்ட
மடியேன் காணவாசைப்பட்டேன்
கண்டாயம்மானே!

p. p. 352 திருவாசகம்.

திருப்பாதத்
தப்பனாண்டு தன்னடியரிற் கூட்டிய
வதிசயங்கண்டாமே! p. p. 354 திரு.

ஆதியாண்டு...—
அன்னையாண்டு,...—
நீக்கிமுன் னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன செய்து
சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்து
தூக்கிமுன் செய்து பொய் யறத்துகளறுத்
தெழுதரு சுடர்ச்சோதி
யாக்கியாண்டு தன்னடியரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே! p. p. 359 திரு.

தயக்கவைத்து
அடியார் முன்னேவந்து காட்டினாய்
கழுக்குன்றிலே! p. p. 362.

கூடிய நின்சீர் அடியிற்கூட்ட மென்றோ வாய்க்குமென
வாடிய வென்னெஞ்ச முகவாட்டமுங் கண்டிலையோ
தேடியநின் சீருனைத்திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடிய நானகண்டாய் பதியே பராபரமே.

அநேகமாய் ஸ்ரீகுருதேவனும் தன் சீடனை முக்திமார்க்கத்தின் பிரவே சத்திற்குத் தகுதியடைந்தவனென அம்முக்திநிலையினை யீந்தளிக்கும் பேரதிகாரம்பெற்ற "வெள்ளியம்பல மஹாசபையின்" திருமுன்னர்ச் சேர்ப்பிக்கின்றனர்.

இனி, கடவுளின் பழுத்தவடியார்களாகும் ஜீவன்முக்தர்கள் நிரம்பிய வெள்ளியம்பல மஹாசங்கத்தாரால் இவனுட்கொள்ளப்பட்ட பின்னர் முமுட்சுவுஞ்சம்சாரமாகுந் தீவைவிட்டப்பாலேகுவோரைச் சத்தியநிலைகளிற் கொண்டுபோய்ச்சேர்க்கும் மரக்கலங்கள் செல்லும் பேராற்றில் நுழைவோனுகின்றான்.(2) இப்பொழுது சீடனு முலகமாளுஞ்சிஷ்டர்களான வெள்ளியம்பல மஹாசங்கத்தினருள் கடைப் படியினுள்ளவனேயாகி, இப்பேருலகின் துன்பச்சுமையத்தனையுந் தாங்கும் பெரும்பொறுப்பை யடைகின்றான். ஆயினு மிப் பேதையுலகை ரக்ஷிக்கவுமதைக் கருணையுடனாசிர்வதிக்கவும் தக்கபேராற்றலு மிவனுக்கிப்பொழுது வாய்க்கின்றது.

---

(2) அலையாமல் அறிவிலே பொறையிலே நின்னடியர் கூட்டத்திலே நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான ஞேயத்திலே யுனிருதாள் மட்டிலே மனது செல நினதருளுமருள்வையோ வளமருவுதே வையாசே (2) மலைவளர் காதலி,—தாயுமானவர்.

முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம்பொருளே!

உன்னைப் பிரானகப்பெற்றவுன் சீரடியோம், உன் சீரடியார் தாள் பணிவோமாங்கவர்க்கே பாங்காவோ மன்னவரே யெங்கணவராவருகந்து சொன்னபரிசே தொழும்பாய்ப்பணிவோம், எங்கோனல்குதியேலோ ரெம்பாவாய்.—(திருவாசகம்.)

பிறவியென்னுமிக்கடலை நீந்ததன்போருடந்தருளினு ன்றவையென் றடியார்கடங்களநட்துழாம்புகவிட்டு நல்லுறவை செய்தெனையுய்யக் கொண்ட பிரானுண்மை பெருக்கமாநிறமை காட்டிய சேவடிக்கணஞ் சென்னிமன்னித்திகழுமே.

---

## அதிகாரம் 7.

### அவன் பெயரால்

'எங்கெங்கு தத்துவமல்லது பிரகிருதியுண்டோ அங்கெல்லாஞ் சத்தியுமுண்டு. அவ்விதமே யிவ்விரண்டினுள்ளும் சேதனமும் நிறைந்துலாவுகின்றது. இனி யிம்மூன்றனுள்ளுங் கடவுளின் பிரக்ஞையும் ஊடுருவிப்பாய்ந்து விலாசம் செய்கின்றது. இப்பிரபஞ்ச முழுவதையும் வாழ்விப்பதவனது வாழ்வேயன்றோ? ஆதலின் நீரும்நானு மற்றுமுள்ள வெண்ணிறந்த மானிடகோடிகளு மிப்பிரபஞ்ச மவனதுடலத்திலமைந்த மிகநுண்ணிய வங்கங்களாகியே நிற்கின்றோம். இவ்வெல்லாவற்றுள்ளு மொவ்வொன்றும் தத்தம் வாழ்க்கையிற் றனியே யமர்ந்துநிற்பதின் பயனெல்லாம், யாவற்றையும் தன்னுள்ளடக்கிநிற்கு மவனதகண்டாகார வாழ்வாகுமற்புதத்தைச் சிறிதுசிறிதாயறிந்து தெளிதற்பொருட்டேயாகுமாதலி, னிப் பிரபஞ்சத்திற் பிரதிஜீவனு மானந்தமடையும் வழியாவது மேற்கூறிய பெருவாழ்வின் மகிமையைத் தம்மட்டிற் சற்றுத் தெளிந்துணர்ந்து மேற்செல்லுதலே யென்க.

இவ்விதமா யொவ்வருவரு 'மானந்தமாக்கடலனைய' கடவுளின் பெருவாழ்வைத் தேடியலைந்துதிரியு மொழிவிலா யாத்திரையாகிய சம்சாரத்தில், ஆரம்பம் முடிவு, அல்லது பிரவிருத்தி, நிவிருத்தி யென இருபடிகளுண்டு. இதில் முதற்படியாகிய பிரவிருத்திநிலையிலே உலகினிற் பெரும்பாலார் நிற்கின்றனர். இவர்களதியற்கையாதோவெனின், எப்பொழுதும் தம்மாசைகளையே விருத்தி செய்து அவை நிறைவேறுமா றிடைவிடாது பல்வேறுபதார்த்தங்களையபேக்ஷித்துக்கொண்டுவருவதே. இவ்வொழிவற்ற விருப்பங்கள் "வருந்திக்கேட்பதனால் வாராவெனு" முண்மையை இவர்களறிந்துகொள்ளற்குப் பல்கோடியாண் காலஞ்செல்லுகின்றது. ஆனு லிவ்வாசைகளைப் பற்றும்பொழுதெல்லாம் இம்மானிடர்க்கிவை முற்றிலும் நிறைவேறுவிடினு மெங்குநிறைபொருளாகிய கடவுளின் தன்மையை மட்டும் அவரவர்க்குச் சிறிதுசிறிது காட்டிவருதற் குதவுகின்றன. மனைவி, குழந்தை, நண்பனிவரிடத்திலும், பேரினுங் கீர்த்தியிலு மிவ்வனைவரினர் கொள்ளும் பிரீதி பக்தியாலும்,

அண்டையயலார்கட்களிக்கு முபகாரத்தாலு மற்றுங் குற்றமற்ற வநேக நற்செய்கைகளிலுந் தத்தம் விருப்பத்தை நாட்டுவார்க்கோ ராநந்தம் ஜெனிக்கின்றது. இவ்வானந்தத்தை யித்தகையினர்க்குக் கடவுளளிப்பதும் ஆனந்தமே வடிவமாய்த் தனது பூரணநிலையை நோக்கி யின்னுமதிகமதிகமாய் நாட்டமுற்றுத்தேடிவரும்படி இவரது நெஞ்சங்களை யிவ் வற்பானந்தத்துள்ளுந் தானே நின்று ரஹஸியமாய்த் தாண்டிவருவது போலவேயாகும். ஏனெனில் இவ்வய நலமற்றுச் செய்யப்படுமெவ்வித நன்மையும் 'அவனருளாலேயே' யாக்கப்படுவது போலேயாகும். ஏனெனில் வீட்டிலும், வெளியிலும், ஆவணத்திலும், பூஜாக்ருஹத்திலுமப்படியே யுலகெலாம் புகழ்பெற்ற மகாக்ஷேத்திரத்தின் மத்தியிலும் எங்குமாய் நிறைந்து தங்கி, யாவற்றையுங்கண்ணுற்று வஸிப்பது இச்சர்வபரிபூரணமாம் பரமனே யன்றோ! 'கருணையினின்பக்கடலாம்' அவனிடமடங்கிநிற்கு மற்புதவதிசயங்களைக்காண்ட லிச்சன்மத்திலு மின்னுமநேக சன்ம காலங்களிலு மிப்பான்மையர்க்குக்கிட்டுவனவாகா. ஆதலின் இத்தகையினர் ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ்செனமனதை யலையவிடாமற்றடுத்து நிராசையாந் தெய்வத்தன்மையடைந்து, பிறர் எல்லார்க்குமிரங்கியுழைக்குஞ் சுபாவவியற்கையைப் பெற்றுனந்திக்கு நாள்வருமளவரையில், எண்ணிறந்த தொல்லைக்கவலையாந் துன்பக்கடலிலாழ்ந்து வருந்தியே தீருவர். பின்னர் நிவிருத்திநிலையினிற் பிரவேசமெய்திப் பாசபந்தமற்று யாவருங்காணுக்கரிய முத்திவழியிற் கூடுவர்.

இம் மகாமார்க்கத்தை நாடி யெண்ணிறந்த மானிடர் முயற்சி கொள்ளினும், அவருள்ளெல்லாஞ் சிற்சிலரே யதிற் பிரவேசமெய்தும் பாக்கியமடைவர். பலர்க்குக்கிட்டாது சிலர்க்குமட்டுஞ்சாத்தியமாகு மிவ்வழி எந்நாளுமில்லாதிந்நாளில் நூதனமாய் ஏற்படுத்தப்பட்டதோர் மார்க்கமன்று; பின்னை சகலஜீவசமூகமுங் கடவுளை நோக்கிச் சென்றடையும் தொன்றுதொட்டுள்ளது மூலகப்பிரசித்தியுமான மாப்பெருமாண்புடை யிராஜயோகமார்க்கமே இதுவாகும். இதனைக் குறுகியதுங்கூரியதுமான வழியென யான் விளக்கியதற்குக் காரணமாவது, இவ்வழியிற் செல்லவிரும்புவோர் இக்காலம் வரை யிங்குமங்குமோடிப் பலவிஷயங்களைப் பற்றிநின்றிருப்பது

போலல்லாமல், இப்பஹிருலகநாட்டமற்றுப் பரம்பொருளின் சந்நிதானத்தையே நோக்கிய திருஷ்டியுடன், வில்லினின்றுங் கிளம்பியதோர் சிலீமுகம்போன்று நேர்வழிபிறழாது முடிவைநோக்கி, மிக விரைவிற் சென்றடைதல்வேண்டுமெனனுங் கருத்தைக்கொண்டேயென்க. (1) இந்நிலையெய்திய வொருஜீவ னொருகணமேனுந் தன் வழியிலகி நடப்பானாயின் அவனுக்கு நீங்காத்துன்பம் விளையுமேயன்றி வேறன்று.

சூரியவானினுங்கடியதானவிம்மார்க்கமே நாமிதுகாறுங் கூறிப் போந்த சீடனைவான் செல்லும் வழியாகும். 'முடிவாகியபேறு,' 'முக்தி,' 'பந்தமறுதல்' எனவுலகினர் பல பெயரிட்டழைத்து வருமுயர்ந்த நிலைக்கு நம்மையேற்றுவிக்கும் பாதையாவதிதுவே. இவ்வழிதான் மெய்ப்பொருளாஞ்சாசுவத நிலையில் நம்மைச்சேர்ப்பிக்கும் ஏனெனில் ஞானமூர்த்தியாங் குருதேவனிடம் அடிமை பூண்டொழுகும சீடத்தன்மையைப் பெற்றபின்னரேயன்றோ! ஓர் ஜீவனுக்கிவ்வநித்தியவுலகின் மாயையைக்கடந்து செல்லுந்திறனும், நித்தியமானவந்தர்முகவிர்த்தியினைப் பெற்றுத் தன் கோரிக்கைகள் யாவற்றையுமீடேற்றிக்கொள்ளும் பக்குவங்கிட்டலும் வாய்க்கின்றன. இனி, இவனது கோரிக்கையினீடேற்றமாவது சகல பூதராசிகளினுள்ளுறையிலுங்காணிறைந்துநின்று அவற்றின் சுமைகளையெல்லாந்தாங்குபேராற்றலடைந்து விளங்குவதேயன்றோ!

இப்பேருபகாரத்திற்கே யுள்ளுருகி மறறப்பற்றினையுந்துறந்தோராக, இம்மானிடவர்க்கத்திற்கெல்லாந்தலைவர்களும் திருவருண் ஞானமாநிதிகளுமாகிய பெரியோர்கடமதுலகவாழ்க்கையைத்தாங்கியிப்பரிபாகமார்க்கத்திலுழைதது வருகின்றார்கள். இவ்விதமுலகெலாம் படுந்துன்பத்தைத் தாங்கிநிற்குமிப் பெரியோர்மட்டுமில்லாவிடின், ஆண்பெணடங்கிய விம்மனிதவர்க்கம் தாந்தாம் புரிந்த பாபவாஸனா மலங்களைத் தம்மனங்களினின்று மொருவாறு துடைத்து நின்று முத்தியாம் பேரின்பத்தைநோக்கி யிச்சைகொளுமுறுதியைப்பெறுதலே முடியாதென்பது திண்ணம். ஆதலினிவ்வுண்மைகொண்டு நீரு

1. தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டணலிட, த்தோவியம் போனிற்கினென்னை புன்குலோ பைங்கிளியே! —தாயுமானவர்.

மிப்புவனமுய்வதற்கே யவதரித்துழைக்குமிப் பெரியோரிடமேவல் பூண்டு சாசுவதநிலையாமளவிலாவானந்த வாழ்க்கையை யடைய விரும்புவீராயின் (1) நீருமேனைய மானிடரின் சுமைகளைத்தாங்குவ தற்குப் பழகிவரல்வேண்டும். (2) இதையன்றி வேறோர் வழியில்லை யென்பதுண்மை.

இப்படிப்பிறரெல்லா நுடைய கரூமச்சுமைகளையுந் தாங்கிநிற் றற்குத்தகுதியடையுமுன், முதலில் அச்சுமைகளை யதிகப்படுத்தா திருக்குந்தன்மையை நீருணர்ந்தறிந்துகொள்ளல் வேண்டும். நுஞ் செயல்களாலெத்துணையு முலகினரது பாரங்களை விருத்தியாக்காது ஜாக்கிரதையாயிருத்தல் நமது கடமையாகும். நமது பிரதிதின வாழ்க்கையில் மனமொழி மெய்களால் அஹிம்சையென்னுங் குணத் தையே காட்டிவரல்வேண்டும். இவ்விதமொழுகுவரின் நுஞ்செயல்க ளியாவும் களங்கமற்றனவாகி, சின்னாட்களில் நமது மனமும் பரி சுத்தமடைந்துவிடுவதால், முன் சன்மங்களினது அசுபவினையினு லுமக்கு நேருந்துன்பங்களையுமிலகுவாய்த் தாங்கிநிற்றற்கானவுறுதியு மனத்துணிவு நுமக்குத்தானே வாய்க்குமன்றோ !

நீர் சந்தோஷமடையும்பொழுதெல்லா மவ்விதமே மானிட சமூகமுழுவதுஞ் சந்தோஷமடையவேண்டுமெனு மாசையையுமிரு பித்துக்கொள்வதால் மானிடரனைவருடனுமுமையுஞ் சேர்ப்பித்து லொன்றுவித்துக்கொள்ளப்பழகுவீராக. அன்பு, அறிவு அழகு இவை முதலியவற்றுலுமக்கானந்தங்கிட்டுமாயினந்தருணத்தில், நுமக்கு

(1) அழியாத நிலையாகி யாதின்பாலும் பிரியாமற்றண்ணருளே கோயிலான பெரியபரம்பதியதனைப் பெறவே வேண்டி நெறியாகக்கூறு வேன்.—(தாயுமானவர்)

(2) ஆகவேதான், தேனென ருசிக்குமன்பாற் சிந்தைநைந்துருகும் வண்ணம் வானெனநிறைந்தானந்த மாகடல் விளைவதின்றே !

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள், செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ? எந்நாட்கண்ணி —(தாயுமானவர்.)

நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந், தன்மை தானெனவுண்மை தனைச் சாருநாளெந்நாளோ? எங்ஙனே யுய்ய யானென தென்பதற், றங் ஙனே புன்னருண் மயமாகிலேன். பொன்னை மாதரை—(தாயுமானவர்.)

மிகப்பிரீதியுள்ளார்களையு மனதில் நினைந்துகொண்டும்முடனவர்களை யுமுமதானந்தானுபவத்திலொன்றுவிப்பதுமுமது கடமையாகும். ஏனெனிலுண்மையான வானந்தமாவது நம்மையு நம்மனதிலுள்ளாரையு மொன்றுவிக்கும் பான்மையுடையதேயாகும். நமக்கு வேண்டியவரொடும் பகிர்ந்தனுபவிக்கமுடியாததெதுவும் சுகமெனப்படல் பொருந்தாது. மற்றச்சமயங்களைவிட நாம் சந்தோஷமனுபவிக்குந்தருணங்களிற்றான் பிறரொடு மொன்றுபடுவது நமக்குச்சுலபமாகும். ஆதலின் இககுணம் நுமதியற்கையேயாகுமாறு சாதகம்பண்ணிக்கொள்ளுவீராக. அதனாலுமக்குப்பிறரிட மன்புகொளுஞ்சிந்தையும் விருத்தியடைந்தங்ஙனமே எவ்வித வழகையுமறிந்தனுபவிக்குங்குணமும் கூர்மையாகிவிடும். இவ்விதமே யொழுகிவரின் காலக்கிரமத்தில் விசேடபொறுப்பு பாரங்களையுந் தாங்குமாற்றலு நும்மிடமிகப்பெருகி விளங்கும். தற்காலம் சுற்றத்தார் உறவினர் முதலிய சிலரைமட்டுமே நேசித்துவரு நும்மிடம நாளடைவில் அதிகமதிகமாய் மானிடர்மீது அன்புசெலுத்துமியற்கை மிக விஸ்தாரமாய் விரிந்து, முடிவில் நுமது சந்தோஷத்தால் மனிதவர்க்கமுழுவதையுமே நும்மொடொன்றுவித்துககொள்ளும் பக்குவமும்முள் ஜனிக்கலாகுமன்றோ!

இனியப்பாலுமது துன்பத்தாலுமுலகத்தாரின் துன்பங்களையெல்லா நும்மிடஞ்சேர்ப்பித்துக்கொள்ளக் கற்றலுமவசியமாகும். நமது வாழ்வின் பயனவைதெல்லாம் நாம் மென்மேலும் பிறரிடமன்பு பற்றுதலு, மவ்விதமே சமயம்நேர்ந்துழிப் பிறர்பொருட்டவர் துன்பத்தையுமேறறுக்கொள்ளலுமேயாகும்.(1) ஆனலிவ்வின்பமுந்துன்பமு மேனிலையாம் நித்தியவுலகத்தின் ஸ்வரூபங்களாய் விளங்கினலன்றி உயர்வடைவனவாகா. மனிதனனுபவிக்குந்துன்பம் யாவும் கடவுளின் துன்பமேயாகுமன்றோ! ஆதலின், பரமன் எவ்வாறு இத்துன்பத்தை யனுபவிக்கிறானே, அவ்வாறே நீருமதையனுபவிக்குந்திறமை யடைவீராகில் உடனே அவனது தன்மையைச் சிறிது நீருமடைந்தவராகிப் பிறருடனனந்தத்தா லைக்கியப்படும்பொழுது எப்படிக்கடவுளினனந்தமயநிலை யுமக்குவிளங்கிற்றோ, வப்படியே

(1) இவ்ய வன்புருவ மாகி யன்பரொடு, மின்பவீட்டிலிருப்பனே தெரிவதற்கரிய பிரமமே.—(தாயுமானவர்.)

சகல மானிடவர்க்கத்தின் துன்பமூட்டைகளை யனுபவிக்கும்பொழுது மவனதியற்கை நமக்கு விசதமாகின்றது.

மானிடர் ஒவ்வொருவரும்படுந் துன்பமெதையேனுங்காணி னுங் கேள்வியுற்றவி.த்து மதற்குக்கருணையால் நீர் சிந்தையிளிரக்க முறல்வேண்டும். துன்பமுறுவோர் மிகத்தீயர், கடையராயினுஞ்சரி அவரின்னல்களை யெல்லாங் கிரஹித்துக்கொள்ளற்கு நீர் கூசுதல் கூடாது. மிகப்பழிப்புடையராயினுந் துன்பமுற்றவர், அவரை யணுகி அவற்குதவிபுரிதலால்நமக்குமிழிவுண்டைப்பினும்பாதகமே யில்லை. அவ்விதமின்றி யிப்பழிப்பிற்கஞ்சி யவரை நீக்கிநிற்றலா லவ்விழிவு நம்மை அணுகாதுநீக்கப்படினுமிதுவே கொடிய பாப மாகும். இனி, துக்கம் விளைவிக்குங் காரணங்களையும் கருமமுற் பத்தியாகி வியவகரிக்கும் வழிகளையும் நீர் செவ்வனே படித்துணரு தல் வேண்டும். ஏனெனில் கருமமென்பது கடவுளதிச்சையினோர் பிரகாரமல்லது ஸ்வரூபமேயாகும். கருமமானது யாவருக்காவது மிகவுநிர்த்தயவாய்த் தாங்குதற்கரிய துன்பங்களை யளித்திருப்பினு, மதனிருதயமல்லது கருத்து மிகக்கருணை பொருந்தியதே யாதலா லஃதுபகாரத்தையே செய்யப்புகுந்திருக்கின்றதென்பதை நீர் நம் மட்டில் நம்புதல்வேண்டும். இத்தகைய திருடமான நம்பிக்கை கொண்டுநம் கருணையைத் துன்புடையோரிடத்துக்காட்டுவீராயி, னுமது மனோவலிமையினலவர்களுக்குந் தன் துன்பங்களைத்தாங்கு முறுதியுமுண்டாகும்.

இனி யெவ்வகைத்துன்பங்களுமக்கு நேரிடினுமவற்றைக்கண்டு நீர் நடுக்கமுறல்கூடாது. துன்பமடைதலெனும் நரகத்தின் வாச னையேயிம்மண்ணுலக வாசனையினு மதிகமாய் இப்பிரபஞ்ச வியற் கையின் திறத்தையும் அதன் உண்மையழகையு நமக்குத் தெரிவிக் கும். ஆதலின் மானிடரின் தற்கால நிலைமையை யோர்ந்துபார்க் கின் கேவலமானந்தத்தால் மட்டும் அவர்களோடு நாம் ஒன்றுபட வெவ்வாற்றானு மியலாது. பின்னைத் துன்பங்களின் வழியாகவுஞ் சகலமன்பதைகளோடு மொன்றுபடற்கு நீருந்துணிவீராயின், அத னால் ஆனந்தத்தி லவர்களோடு ஐக்கியமுற விச்சிக்கும் நமது கருத் தும் மிகத்தீவிரமாயும் இலகுவாயும் நிறைவேறுமென்பதற் கைய மில்லை.

உலகவாழ்க்கையிலமர்ந்து மனதைக்கடந்து செல்லற்கியலாமலு நிற்கும் நம்பொருட்டு யானிதுகாறு மியம்பிவந்திருக்குமிவ் வசனங்களின் கருத்து யாதோவெனிலிவ்வுலகியலில் நிற்கும்பொழுதே உயர்விவேகமாம் விளக்கத்தைத் துணையாக்கொள்வதால், ஸ்ரீ குருதேவனது நாமத்தையுன்னி யெப்பொழுது மன்புநிறைந்த செயல்களைப் புரிந்து, பின்னர் முடிவில் குருதேவனைப் பிரத்தியக்ஷமாகவுங் காணும் பாக்கியத்தை நீரடையலாமென்பதை நமக்கறிவித்தற்பொருட்டேயென்க. இனிவருநாட்களில் நமக்குத் துன்பமிகுதியு முண்டாகும். ஏனெனில் பூர்வகாலங்களில் நீர் பிரவிருத்தி மார்க்கத்தில் நின்றபொழுதெல்லாம் நஞ்சகோதரராகிய வேனைய மானிடர்க்கு நமது பாபகர்மங்களாற் றுன்பங்களை விருத்திசெய்து வந்ததாலேற்பட்டிருக்குங் கடன்களை யொருசிறிதுங் குறையாமல் நீரிப்பொழுது திருப்பியளிக்கக் கடமை பூண்டவரேயாவீர். ஆனு லிக்கருமச் சுமையாங் கடனை நீருமனுபவித்தே தீர்க்கவேண்டுமாயினும், உமது ஒழுக்கத்தாலு மனோநிலையாலு மிவ்வுயர் பாவனையற்ற வேனைய மானிடர்க் கெக்காலத்திலு மெட்டாத் தைரியமுஞ் சிந்தையின் தெளிவும் நமக்கு வாய்க்குமென்பதற் கையமுமுளதோ?

ஆதலின் நீரும் ஸ்ரீகுருநாதனைத் தேடி யடையும் பெருந்தொழிற்கே நம்மை யர்ப்பணஞ்செய்துகொள்ளுவீராயின் நிச்சயமாயவரும் நமக்குக் கிட்டுவரன்றோ! இனி ஸ்ரீ குருமூர்த்தியினது தரிசனமுங் கிட்டியபின்னதற்குமப்பாற் படிப்படியாயநேக ஜன்மங்களில் நீருமேனிலைகளிலோங்கச் சென்று முடிவில் கடவுளதம்சமேயாகு முலகம் புரக்கவல்லதோ ரவதார புருஷனுகுவீர். இந்நிலையிற் பிரபஞ்ச முழுமையும் நமக்குச் சின்மயவடிவமேயாகி விளங்குவதால், பூர்வகாலங்களில் நீரனுபவித்த துன்பமும் அவாவும் தம்மியற்கையெல்லா மிழந்தானந்த வடிவமாய் மாறி நிற்கும்வண்ணம் அவற்றை யெல்லாம பேரறிவால் நவமாக்கிக்கொள்ளும்படி கடவுளே நமக்கு வழிகாட்டுவர். பேரறிவுதோன்றிய பின்னர் வருங்காலமெப்படி நமக்கு சுவாதீனமாய்விடுமோ அவ்விதமே யிறந்தகாலமு மிந்நிலையில் நமக்கு வசப்பட்டதாகின்றமையின், இவ்விரண்டுகாலவளவுகளு மிப்'போதபரிபூரணவாழ்வில்' தற்காலமய ரூபங்களையிழந்த 'வதீத'வடிவங்களாகின்றன. ஆத

லால் இப்பொழுது சம்சார வாழ்வில் நாமடையுந்துன்பங்கள் யாவும் நாம் பன்னாட்களின் பின்னடையவிருக்கும் 'போக்குவரவற்ற' பெரிய பதவியின் வாழ்வைப் பெற்றுய்தற்கென நாமிம்மையிற் கற்கும் கல்வியின் அரிச்சுவடிபோன்ற வாரம்பமுயற்சியேயாகுமன்றோ!

ஆதலின், ஐய, சீடபாவந்தாண்டி முத்திநிலையெய்தப்பெற்ற பேரறிவாளனுக்குச் சென்றகாலமெனும் பொய்ப்பிசாசின் றோற்றங்கள் யாவுமாண்டுபோகின்றன. இனி நமக்குமிவ்வருணிலை கிட்டுமாயின் பின்னரிவ் விறந்தகாலத்திய துன்பவனுபவங்களின் 'ஞாபகம் சிறிதாயினும் தோன்றுமிடத்து, அஃது பூர்வமிருந்தவாறிராமலிப்பொழுது ஆனந்தமயமாகி விளங்குமாதலால், அவ்விறந்தகால வனுபவங்களையும் நீரு' மிளநிலாவென விலங்கியசிறுநகை 'யொடு மனுபவிப்பவரேயாவீர். (1)

சென்றகாலத்தினு நிகழ்காலத்தினு மொரேவிதமாய்ச் சகநடம் புரியுந் தொழிலாளருமாகிவிடுவீர். இதுவே நாமனைவருமடையவிருக்கும் வருங்காலத்தின் பெருமையாகும். இஃதே நமக்குதயமாகவிருக்கும் உணர்வரிய மஹிமைபெறு புருடார்த்த நிலையின் மாட்சிமையாகுமன்றோ! (2)

(1) எனதாவியுடல் பொருளு மௌனியாய் வந்து கையேற்று நமதென்றவன்றே, பொய்க்காலதேசமும், பொய்ப்பொருளில் வாஞ்சையும், பொய்யுடலை மெய்யென்னலும், பொய்யுறவுபற்றலும், பொய்யாகுநானென்னல் பொய்யினும் பொய்யாகையான், மைக்காவிருட்டனையவிருளில்லை யிருவினைகள் வந்தேறவழியுமில்லை, மனமில்லை யம்மனத்தினமிலை வேறுமொருவரவில்லை போக்குமில்லை, யக்கால மிக்காலமென்பதிலை யெல்லா மதீதமயமான தன்றோ! வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகியானந்தமானபரமே.—தாயுமானவர்.

(2) இன்பமுறவன்பர் பக்கலிருத்தி வைத்துக்கனந்தருமாகனமே, தண்ணருளிற்றேனே கனிபலித்த வானந்தக்கட்டிப்பேறே!—தாயுமானவர்.

ஓம்

# நோட்டீஸ்.

---

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்தில் ஆஸ்திகசீலமும் தேசாபிமானமும் பொருந்திய சகல கனதனவான்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்:—

இத்தென்னாட்டின்கண் இராஜபாஷையாம் ஆங்கிலந்தோன்றிய நாண்முதலாய் வடமொழியாகிய ஆரியமும், தென்மொழியாகிய தமிழும் வரவர க்ஷீணதசையடைந்துவருவதும், அருமையாய் இவை எங்கேனும் கற்கப்படினும், இராஜபாஷையின் கலப்பில்லாததால், கற்கும் மாணாக்கர்களின் காலக்ஷேபத்திற்கு அவை அதிகமாய்ப்பயன் படாமற்போவதும், நமதுநாட்டின் தற்காலநிலைமையைக் கவனித்து வருவோர் யாவருக்கும் தெரிந்தவிஷயமே. இப் பெருங்கேட்டையகற்றிநம் நாட்டிற்கு நன்மையை விளைவித்தற்குப் பலவித உபாயங்களைத்தருந்த அவகாசமும் திறமையும் பதவியுமுள்ள கனதனவான்கள் எண்ணிறந்தவகைகளிற் செய்யவேண்டியதவசியமென்பது திண்ணம். ஓரேமாதிரியான ஒரு சொற்ப ஏற்பாட்டினால் இவ்வித பெரிய ஆபத்து நீங்கிவிடுமென்பது கொள்ளற்பாலதன்று. ஆயினும், அதற்குற்ற வழிகளத்தனையும், தக்கநிபுணர்களால் யோசிக்கப் பட்டபின்னரே அதில் ஏதேனுமொன்றை யாவராயினுஞ் சாதிக்கப் புகுதல் வேண்டும் என்பது நியாயமில்லை.

இக் கருத்துக்கொண்டு திருவீயச்சூரெனும் இச்சிறுகிராமத்தில் இங்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் பிரம்மவித்தியா கிளைச்சபையின் ஆதரவின்கீழ், இந்த மூன்றுபாஷைகளின் பயிற்சியும், நடந்தேறும் படியான ஓர்கல்விச்சாலை ஸ்தாபிக்கவேண்டுமெனுமெண்ணம் சின்னாட்களாய் எங்கள் மனத்திற் குடிகொண்டுவந்ததை கடவுளின் அரு

ளால் பகிரங்கத்தில் நிறைவேற்றிக் காட்டல்வேண்டுமென உறுதி கொண்டு, சென்ற ஜூலைமாதத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. அதில் ஐந்து ஸ்டாண்டர்டு வரை இப்பொழுது ஏற்பட்டு நடந்து வருகிறது அவற்றில் 120 பிள்ளைகள்வரை சேர்ந் திருக்கிறார்கள். இப்பெரும் திருத்தொண்டின் ஓர் சிறு ஆரம்பமாக மேற்கூறிய பாடசாலையை ஸ்தாபனஞ்செய்ய முன்வந்த எங்க ளுடைய கருத்தும் பெருவிசாலமும் மிகவுமுயர்ந்ததுமாவிருப்பினும், அவ்விசாலமான உயர்ந்த மனக்கோட்டைகளுக்குத்தக்கபடி இவ்வுலகத் தில் இடம், பொருள், ஏவல் ஆகிய சாதனங்கள் போதுமானவைகளா யில்லை. இப்பாடசாலையில் வந்துசேரும மாணாக்கர்களிடம் சம் பளம் பெற்றுக்கொள்ளாமல் தர்மக்கல்விகற்பித்தலே நிகழவேண்டு மென்பது கருத்து. தவிரவும், இவ் வொவ்வொருபாஷையிலும் தகுந்த திறமையடையும்படி மாணாக்கர்களைச் செய்துவரவேண்டு மாயின் அதற்குத்தக்கதாய பெரியதோர் புஸ்தகசாலையும் அவசியம் வேண்டுமென்பதும, கல்விகள் கற்பிக்கும் முறைகளைப்பற்றி இக் காலத்திய்நிபுணர்கள் ஆழ்ந்தகருத்துடன் வெளியிட்டிருக்கும் மேன் மைதங்கிய அபிப்பிராயங்களைத் தழுவி, கல்வியின்பயிற்சியை நடத்து வதற்குவேண்டிய சௌகரியங்களையும் சாதனங்களையும் ஏற்படுத்திக் கொள்ளும்பொருட்டுத் தகுந்த கட்டடங்களும் இன்றியமையாதன வாகும என்பதும் யாவருக்கும் விசதமாகும். ஆதலின், இந்நன் முயற்சி நிறைவேறும்படி சகலதேசாபிமானிகளும் தங்கள் நல் லெண்ணங்களையும் தங்களாலியன்ற திரவியசகாய முதலியவற்றை யும் தட்டுத்தடையின்றி ஈந்து எங்கள் பெருந்ஸாகத்தை விருத்தி செய்து வரல்வேண்டும்.

இத்தகைய பரோபகாரங்களைச் செய்துவரும்படி தூண்டிவரு வதும், தற்காலத்தில் உலகமெங்கும வியாபித்து நிலைத்திருப்பது மான 'பிர்ம்மவித்யா' மகாசங்கத்தின்உயர்ந்தஅநுபவிகளாற் கூறப்

பட்டுள்ள அரிய விஷயங்கள் யாவும் இங்கிலீஷ் பாஷையிலேயே இருத்தலால் அவை நந்தமிழுலகுக்கும் பயன்படுமாறு அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தச்சிடும் நன்முயற்சியையும் இத்துடன் ஆரம்பித்து, மாதமொன்றுக்கு ஒரு சஞ்சிகையாய் வருஷம் 1-க்கு ரூ. 1—8—0 விதம் சந்தாதொகைக்குப் பிரசுரஞ்செய்துவருகிறோம். இப்புஸ்தகங்களாற் கிடைக்கும் சகல வருமானத்தையும் மேற்கூறிய தருமபாடசாலையின் பிரயோஜனத்திற்கே உபயோகப் படுத்திவருகிறோம். இதனால் பாடசாலையில் உழைத்துவரும் உபாத்தியாயர்களுக்கு இப்'பிரம்மவித்தியா' சங்கத்திலுள்ள கல்வி கேள்விகளின் அனுபவம் ஏற்படுவதுடன் அவ்வாசனைகொண்டே அவர்தங் கிழமையும் மாணாக்கருக்குக் கல்வியைப் போதித்தலும் தாமும் ஒழுகிவருதலும் அமையுமன்றோ! இவையெல்லாம் ஒருங்கேசேரும் படிக்குஉதவுகின்ற இவ்வித தருமக்கல்விச்சாலையாம் பெரியகாரியம் நிறைவேறுவதற்கு எல்லாம் வல்ல கடவுளின் திருவருள் மாத்திரம் கிட்டுமாயின் இவ்வுலகத்திய சாதனமாகிய திரவியமெனும் உதவி கிடைப்பது அரிதாகாதென்பது எமது ஆழ்ந்த கருத்து. இந்நற்காரியத்தைப்பார்க்கிலும் பெரியதோர் காரியமும் உலகத்திற்கு உதவிபுரியும் நோக்கங்கொண்ட பெருங்கொடையாளருக்குக் கிட்டுமோ? இப்பெரிய காரியத்திற்கு ஒரு சிறிய துரும்பேனும் உதவி ஈந்து அளிக்கும் ஆற்றல்பெறாத மானிடரும் இருப்பரோ? இருக்கவேமாட்டாரென்பது எமது துணிபு! பெரும் பெருங்கொடைகளை ஒரே காலத்தில் செய்து அதனால் தக்கபேரும் கீர்த்தியும் படைத்துக்கொள்ள வேண்டுமென்னும் ஆசையுள்ளார்க்கும் இதில் இடமுண்டு. சுவல்பமாகிய வருவாயுள்ளவராகி தம் காலங்கழிப்பதே சிரமமாய் நாட்கழிப்பார்க்கும், இப்பெரும் கல்விச்சாலையின் தருமத்தில் அற்பஉதவியாயினும் செய்து புண்ணியஞ்சம்பாதித்தற்கும் வழியுண்டு. ஆதலின் நம் தேசாபிமானம் சிறிதாயினும் கொஞ்

சிற்குடிகொண்டார்யாவராயினும்சரி. இக்நற்காரியத்திற்குத் தம் மாசியன்ற உதவியைச் செய்தேதீருவாரென்பது திண்ணம். அற் பக்கிரயமுள்ள புஸ்தகங்களோ, பல்வித அபூர்வமான கிரந்தங்களோ, இங்குள்ள புஸ்தகசாலைக்கு அனுப்பப்படலாம். அப்படியே கட்ட டங்கட்கென்றும், மேஜை, குரிச்சி, நாற்காலி, பெஞ்சி முதலிய சாமான்களுக்கென்றும், முற்றிலுமேழைகளாகிய குழந்தைகளின் சாப்பாட்டுக்கென்றும, மற்றும்பெரிய காரியத்திற்கவசியமான பலவகை விஷயங்களுக்கென்றும், சிறியது பெரியதான நன்கொடை களை எம்மட்டிலாயினுமடியிற் கையொப்பமிட்ட விலாசத்திற்கு அனுப்பலாம். இது மிகவும் பெரியதோர் திருத்தொண்டாதலின் எங்கள் அந்தரங்கத்திலுள்ள சிரத்தைக்குத் தகுந்தபடி வரவரமிகப் பெருகி விஸ்தாரமடைவதற்காக்ஷேபமில்லை.

இப்பாடசாலையிலேழு ஸ்டாண்டார்டுகள் வரை நிறைவேறின பின்னர் அப்பால் மூன்று அல்லது நான்கு வருஷங்களுக்குள் தமிழி லும் சமஸ்கிருதத்திலும் உயர்தர பாண்டித்தியமும், இங்கிலீஷ் பாஷையிலும் பத்திரிகைகளைப் படித்துக்கொள்ளவும் கடிதங்களை யெழுதிக்கொள்ளவும் போதுமான திறமையும், வரும்படி கல்வி கற் பிக்கப்படவேண்டும். அன்பே நிறைந்தவுள்ளமுடையவர்களான உபாத்தியாயர்களாலும, அவ்வன்பின் வலிகொண்டு துர்க்குணங்கள் எவையிருப்பினும் நீக்கப்படுமாறும, இவ்வித்தியாசாலையில் கல்விகற்பிக்கப்படுமென்று துணியாய்ச் சொல்லுகிறேம். மற்றும் மாணாக்கர்கள், நன்னடக்கை, தெய்வபக்தி, ராஜவிசுவாசம் முதலிய வற்றில் விசேட சிரத்தையுடன் பழக்கப்படுத்தப்படுவார்கள். இப் பாடசாலை யாரம்பித்துச்சொற்பநாட்களேசென்றிருப்பினும், இதற் குள்ளேயே யீதற்கீசனது கடாட்சமிருப்பதை விளக்கும்படி தகுந்த நற்சீலமுள்ள வுபாத்தியாயர்களும் வெகுதூரமிருந்து வந்துசேர்ந் திருக்கிறார்கள்.

இவ்வாரம்பத்தி லிதற்குமேலிப் பெருங்காரியத்தைப்பற்றிக் கூற எங்ளாலியலவில்லை. உண்மையில் இவ்வித்தியாசாலையானது பரமனது விலாசம் விளங்கப்பெற்றதாய், கல்விகற்பது மலைதக் கற்பிப்பதும் கடவுளது திருவழிபாடே தவிர வேறன்றென்பதை யொருவாறு பார்ப்பவர்க்குக காட்டிவருவதாய், நிறைவேறிவர வேண்டுமென்பதெங்கள் கருத்தாகும். இப்பேருபகாரமாந் திருத் தொண்டிற்கு நந்தேசாபிமானிகள் யாவரு முன்வந்து தகுந்தவாதர வுகளைப் புரியத்துணிவார்கள் என நம்புகிறோம்.

நாளடைவி லிக்கலாசாலை யடைந்துவரும் விருத்தியைப்பற்றி யும், இதற்களிக்கப்படும் நன்கொடைகளைப்பற்றியும, மற்றுமிக்கலா சாலையின் நடபடிக்கைகளைப்பற்றியும் வருஷந்தோறும் தகுந்த கணக்கு முதலிய விபரங்களுடன் வருஷாந்த ரிபோர்ட்டு அல்லது அறிக்கைப் பத்திரம் வெளிப்படுத்தப்படும்.

இங்ஙனம்,

அ. ரத்தினசபாபதி முதலியார்,

சாந்தியாச்சிரமம், திருமீயச்சூர், போஸ்ட் போஸ்டு,

தஞ்சாவூர் ஜில்லா.



# "எனது பிரதிக்ஞை"

எனுமிவ்வரிய சிறு நூல்.

சீடராகப்பெற்ற சில சிறுவர்களை நோக்கி,

ஸ்ரீமான். ஜினராஜதாஸர் அவர்களால்

உரைத்தருளப்பெற்ற வசனங்கள்

நிரம்பியது.

Translated by

Messers. K. S. Ramachandra Iyer

Retired Tasildar, Alangudi, and

P. R. Sundara Rajam Iyer, T. S. Worker.

எம்மகாபுருடனுக் கியான், மலர்ந்த பார்வைகள், தீரமான மொழிகள், சந்தோஷநிறைந்த நினைவுகள், வீரச்செயல்களிற்றை முந்நாளில் வாக்குத்தத்தஞ் செய்தேனோ அதுவே யிவ்வெனது நூலும் அர்ப் பணமாகுக.

# அடக்கவட்டவணை

---

1. மலர்ந்த பார்வைகள்.
2. தீரமொழிகள்.
3. சந்தோஷ நிறைந்த நினைவுகள்.
4. வீரியமுடைய செயல்கள்.
5. முடிவுரை.

கவனியுங்கள்! கவனியுங்கள்!! கவனியுங்கள்!!!

# பிர்ம்ம வித்தியா பிரஸ்,

திருமீயச்சூர், பேரளம் போஸ்ட்,

தஞ்சாவூர் ஜில்லா.



இப்பெயர்கொண்ட அச்சாபீசு ஒன்று இவ்விடத்தில் இப்பொழுது ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அதில் ராஜரீகசம்பந்த மற்ற சகலவிதமான பத்திரிகை, புஸ்தகங்கள், விசித்திரமான கலர்வேலைகள் முதலியன மிகவும் நயமாய் அச்சிட்டுக் கொடுக்கப்படும். சார்ஜுகள் மிகக் குறைந்தனவே. குறிப்பிட்ட காலத்திலும், ஒழுங்காயும் வேலைகள் முடித்துக்கொடுக்கப்படும்.

இவ்வச்சாபீசு இவ்விடம் திருமீயச்சூரில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற கல்விச்சாலையின் தருமத்திற்கெனவே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாதலின் இதன் வரும்படி முழுமையும் அக்கல்விச்சாலையின் அபிவிர்த்திக்கே உபயோகிக்கப்பட்டு வருகிறது. இதைப் படிக்கும் நந்தேசாபிமானிகள் யாவரும் இவ்வச்சாபீசில் மிகுந்த வாதரவுவைத்து தங்களாலியன்ற வேலைகளைக் கொடுத்து, பிறருக்குஞ்சொல்லி வேலைகளை இங்கனுப்பச்செய்து, இங்கு நடத்தப் பட்டுவரும் கல்விச்சாலையை யபிவிர்த்திசெய்யும் புண்ணியத்தை யடைய முயலுவார்கள்.

பிர்ம்ம வித்தியா பிரஸ், திருமீயச்சூர்; பேரளம்.

# 1. மலர்ந்த பார்வைகள்.



ஸ்ரீ குருநாதனிடம் நீவிர் சீடர்களாய் அடிமைபூண்ட சிறுவர்களாதலின் உங்கள் ஒழுக்கம் அக்குரு தேவனது கருத்திற்கு இன்னுமதிகமாய் இணங்கியே நடைபெறுமாறு, அச்சீட பாவமென்பது யாதென்பதை முன்னிலும் விசேஷமாய் உங்கட்கு விரித்துரைப்பேன். உலகிலுள்ள பல்கோடியாம் சிறுவர்களுள் உங்களைமட்டும் குறிப்பிட்டு குருவானவர் ஏற்றுக்கொண்டிருப்பதற்குக் காரணம் யாதென்பதை நீங்கள் உணர்ந்து அறிதல்வேண்டும். குருவும் தனதிஷ்டப்படி எவரையும் தன் சீடனாய் அங்கீகரித்துக்கொள்ளல் முடியாதன்றோ! ஏனெனில் ஜகந்நியதியாம் கருமத்தை மீறுதல் அவருக்கும் அசாத்தியமேயாகும். ஆதலின் அவர் உங்களை அங்கீகரித்திருப்பதற்கு காரணங்கள் யாவையெனவிளக்குவேன். முதலாவது நீங்கள் யாவரும் பூர்வ ஜன்மங்களில் ஆண் பெண்களில் உத்தமர்களாய்ப் பிறந்து காலங் கழித்து, என்றைக்காயினும் ஜீவன் முக்தரான குரு ஒருவருக்கு சீடராதல் வேண்டுமென அவாக்கொண்டு நின்றமையின், இவ்விதமான சீடர்களாகும் உரிமையை கருமத்தால் நீங்கள் சம்பாதித்துக்கொண்டிருத்தலேயென்க. இதுவுமன்றி குருதேவனும் தனது வாழ்க்கையாம் கருணைப்பிரவாஹம் இவ்வுலகிலெங்கும் ஓடிப் பாய்வதற்கு இப்பொழுது உங்களிலொவ்வொருவரையும் தக்க கால்வாயாக்கிக்கொள்ளும் நோக்கங்கொண்டதாலுமென்க. * இனிக் கால்வாயென்பது என்னை? ஓர் நதியினின்றும் ஜலத்தை கிரஹித்துச் செல்லும் சிறு வாய்க்காலேயாகும். ஓர் நதியானது எப்புறத்திலும் செல்லுதற் கியலாதாதலின், அதனின்றும் ஜலத்தை அப்புறப்படுத்தி வேண்டிய ஸ்தலங்களுக்குக் கொண்டு

---

* அன்பருக்கன்பான மெய்யன்—ஐய
ஞனந்தமோன னருட்குருநாதன்
தன்பாதஞ் சென்னியில்வைத்தான். தாயுமானவர்.

நாட்படகமலமென்ன விதயமேவுநறுந்தேனே தாயுமானவர்.

போவதற்கென சிறு கால்வாய்களை மானிடர் நிருமித்துக்கொள்ளு கின்றனர். இவ்விதமே ஸ்ரீகுருதேவனது சக்தியும் மேற்கூறிய நதியின் பிரவாஹத்தைப் போன்று அவர் வேண்டுமிடங்கள் யாவற்றிற்கு மோடிப் பரவமுடியாது நிற்கின்றது. ஆதலின் குரு வானவர் உலகில் மானிடர் மத்தியில் எங்கும் செல்லமுடியாதபடி யாலும், அவ்விதமல்லாது சீடராவோர் எவ்விடத்தும் சஞ்சரிக்க முடியுமாதலாலும், குருவுக்குப் பல சீடர்களிருப்பின் அவர்கண் மூலமாய் குருவினது சக்திகள் யாவு மிலகுவாய்ப் பரவிவரலாகு மன்றோ!

இனி நீங்களொவ்வொருவரும் சூரியனது ஒளிக்கு ஜன்ன லெப்படியோ அப்படியே குருதேவனது பிரகாசத்திற்கும் ஏற்ற ஜன்னலாய் நிற்றல்வேண்டும். வெளிச்சமற்றதோர் அறையின் கண் உள்ள ஜனங்கள் ஒருவரையொருவர் அறியாது ஒருவர்மேல் ஒருவர் விழுந்து துன்புறுத்திக்கொள்ள நேருமன்றோ! பின்னை அவ்வறையில் வெளிச்சமிருந்தால் அங்கிருக்கும் ஜனங்களும் ஒருவரையொருவர் பார்த்து ஒருவருக்கொருவர் ஹிம்சையின்றி அன்பொடும் பழகுவார்கள். இவ்விதமே இவ்வுலகிலும் மானிடர் ஒருவரையொருவர் செவ்வனேயறிந்து அன்புடன் நடித்துக்கொ ள்ளுமாறு பிரகாசிக்கும் ஸ்ரீகுருநாதனது ஞானரூபமாம் சோதிக் குத்தகக ஜன்னல்களாய் நீங்களும் ஆதல்வேண்டும். * இனி ஜன்னலொன்றின் வழி பிரகாசிப்பது சூரியனது ஒளியேயன்றோ! † அஜ்ஜன்னலின்வழி அஃது தோன்றி சூரியனது பிரகாசமாம் யான்தான் உங்கண்மீதெல்லாம் பிரகாசிக்கிறேன் எனக்கூறுவது போலிருக்கின்றது. அவ்விதமே நீங்களும் பரிசுத்தமடைந்து

---

* ஏதுந்தெரியா தென்னைமறைத்த வல்லிருளை
நாதநீக்கவொரு ஞானவிளக்கில்லையோ?
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவேறுண்டோ?
என்ஞானநாயகனே நின்மோனஞான
நாட்டமுற்றுவாழ்ந் திருக்குநாளெந்நாளோ?

† அருளாலெவையும் பாரென்றான்—அத்தை
யறியாதேசுட்டியென் னறிவாலேபார்த்தேன்
இருளானபொருள் கண்டதல்லால்—கண்ட
வென்னையுங்கண்டில னென்னேடிதோழி! தாயுமானவர்.

குருதேவனுக்கு யதார்த்தமான சீடர்களாய் நிற்பீராயின் குருதேவனது சோதியும் உங்கண்மூலமாய் வெளியுலகெல்லாம் பிரகாசிக்குமென்பதற்குத் தடையுமுண்டோ? * இனிக் குருதேவனும் தன் சீடர்களின் மூலமாய் உலகின்மீது தனது கருணைப்பிரகாசத்தை எண்ணிறந்த விதங்களிற் பொழிந்து வருகிறார். அவற்றுள் யானிங்கு நான்கு வழிகளைப் பற்றிமட்டும் கூறுவேன். அவையாவன:—நுங்கள் முகங்கள் அல்லது பார்வைகள், மொழிகள், கருத்துக்கள், செயல்களாகிய இந்நான்கேயாகும். † இத்தொழிலொன்றும் உண்மையில் நுங்களிடமுள்ள ஒவ்வொரு ஜன்

* இன்பம்பெருக்கி யிருளகற்றியெஞ்ஞான்றுந்
துன்பந்தொடர்வறுத்துச் சோதியா—யன்பமைத்த
மூலவிருள்கால்வாங்க மூதறிவுதோன்ற—வருட்
கோலம்வெளியாகவெந்தை கூடுவித்தலாகாதோ? தாயுமானவர்.

தேசோமயந்தந்தினியொருகாற்
சித்தத்திருளுந்தீர்ப்பாயோ! தாயுமானவர்.

போதமென்பதேவிளக்கொவ்வு மவித்தைபொய்யிருளாந்
தீதிலாவிளக்கெடுத்திருட்டேடவுஞ் சிக்காதாதலாலறிவாய்
நின்றவிடத்தறியாமை யேதுமில்லையென்றெம்பிரான்
சுருதியேயியம்பும். தாயுமானவர்.

† வைத்தபொருளுடலாவி மூன்றுநின்கை
வசமெனவேயான்கொடுக்க வாங்கிக்கொண்டு
சித்தமிசைப்புகுந்ததுதான் மெய்யோபொய்யோ
சிறியேற்கிங்குளவுரையாய் திகையாவண்ணம்
விளங்கவெனக்குள்ளுள்ளே விளங்காநின்ற
வேதகமேபோதகமே விமலவாழ்வே
களங்கரகிதப்பொருளே! தாயுமானவர்.

நீயேயிங்கெளியேற்கு தாகமோக
நினைவூடேநின்றுணர்த்தி நிகழ்த்தலாலே
பேயேற்குந்தனக்கெனவோ ரன்புமுண்டோ
பெம்மானேயின்னமன்பு பெருகப்பாராய்!
அடியார்நினைவினிடை யாறுய்ப்பெருகும்
பெருங்கருணையரசே யென்னையாள்வானே! தாயுமானவர்.

எத்தனுகிவந்தில் புகுந்தெமையாளுங்
கொண்டெம் பணிகொள்வான்
வைத்தமாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னிமன்னத்திகழுமே! திருவாசகம்.

னலே போன்று நிற்கின்றது. ஒரு ஜன்னல் அசுத்தமற்று நிற்கின் அதன்மூலமாய் உட்புகும்பிரகாசமும் சூரியனது யதார்த்தமான சோதியேயாகும். அவ்வாறே நுங்கள் பார்வை, மொழி, கருத்துச் செயற்களாகும் ஜன்னல்களும் தூய்மைபொருந்தி விளங்குமாயின், அவைகள் மூலம் ஸ்ரீகுருநாதரே பிரதிபிம்பிதமும் யதார்த்தமாய்ப் பிரகாசிப்பரென்பது உண்மையே யாகுமன்றோ! *

இனி ஸ்ரீகுருதேவர் ஜீவித்திருப்பதெல்லாம் உலகினரை உய்விக்கும் ஓரேநோக்கங் கொண்டேயன்றி வேறன்றென்பதை நீங்கள் யாவரும் அறிவீர்கள். இவ்வுலகில் துன்பமும் துக்கமும் மிகுதியுண்டென்பதை நீங்கள் சிறுவர்களாயினும் நன்கு அறி

---

சோதியாயிருட்பிழம்பைச் சூறையாடுந்
தூவெளியேயெனைத்தொடர்ந்து தொடர்ந்தெந்நாளும்
வாதியாநின்றவினைப் பகையைவென்றவாழ்வே
யிங்குனைப்பிரிந்து மயங்குகின்றேன். தாயுமானவர்.

* மயக்குறுமென்மனமனுகாப் பாதைகாட்டி
வல்வினையைப்பறித்தனையே வாழ்வேநானென்
செயக்கடவேன் என்செயலெலாநினதேயென்று
செங்கைகுவிப்பேனல்லாற் செயல்வேறில்லை.

எத்திக்குந்தானாகி யென்னிதயத்தேயூறித்
தித்திக்குமானந்தத் தேனேபராபரமே!

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர்நெல்லிக் கனியேபராபரமே!

ஆனந்தமோனகுரு வாமெனவேயென்னறிவின்
மோனத்தனக்கிசைய முற்றியதாற்றேனுந்து
சொல்லெல்லாமோனந் தொழிலாதியுமோன
மெல்லாநன்மோனவடிவே! தாயுமானவர்.

பொய்ப்பணிவேண்டேனைப் பொருட்படுத்தியண்ணலென்பான்
மெய்ப்பணியுந்தந்தொருகான் மேவுவனோபைங்கிளியே?

என்னதியானென்பதற வெவ்விடமுமென்னுசான்
சந்நிதியாக்கண்டுநிட்டை சாதிப்பதெந்நாளோ? தாயுமானவர்

சித்தமும்வாக்குந் தேகமுநினவேசெ..................
வைத்திட்டிங்கென்னை நின்னடிக்குடியா
மறைமுடியிருந்த வான்பொருளே!

வீர்கள். சகல மன்பதைகளின் துன்பமூட்டைகளைச் சிறிது சிறிதாகவாயினும் குறைத்துவர வேண்டுமென்பதுவே குருதேவர்து கருத்தாகும். இஃதொன்றே அவர் மனதிற் குடிகொண்ட பேராசையாகின்றது.* இனி நீங்களும் அக்குருதேவர்க்குச் சீடர்களாதலின் அவர்மாட்டு நீங்கள் புரியவேண்டும் கடமையுமொன்றுண்டு. அதாவது அவரது பெருந்தொழிலில் அவர்க்கு நீங்கள் உதவிபுரிதலே யென்க. இனி குருதேவனும் மகாபுருடனுக்கு மிகச்சிறியோராகிய நீங்கள் எவ்வகை உதவியைப்புரிதல் கூடுமென வினவுவீர்கள். ஓர் முறையில் நீவிர் யாவரும் வாலிபப்பருவத்தினரேயாயினும் மற்றோர் திருஷ்டியில் நீங்கள் அனைவரும்

என்னுடையுயிரே யென்னுளத்தறிவே
யென்னுடையன்பெனு நெறியாய்—
கன்னன்முக்கனிதேன் கண்டமிர்தென்னக்
கலந்தெனை மேவிடக்கருணை—
மன்னியுவுறவே, யுன்னைநான்பிரியா
வண்ணமென்மனமெனுங்கருவி
தன்னதுவழியற் றென்னுழைக்கிடப்பத்
தண்ணருள் வரமதுவேண்டும் தாயுமானவர்.

ஊனாகநிற்குமுணர்வை மறந்தையாநீ
தானாகநிற்கவொரு தந்திரந்தானில்லையோ?
எல்லாருமின்புற் றிருக்கநினைப்பதுவே
யல்லாமல்வேறொன் றறியேன்பராபரமே.

* எவ்வுயிருந்தன்னுயிர்போ லெண்ணுந்தபோதனர்கள்
செவ்வுயிரைநாடிமிகச் சிந்தைவைப்பதெந்நாளோ?

விண்கருணைபூத்ததென மேவியுயிர்க்குயிராய்த்
தண்கருணைதோன்றவருள் தாய்நீபராபரமே!

இன்பமயமாயுலக மெல்லாம்பிழைப்ப
தற்குன்னன்பு நிலையென்பார்!

திருவருண்ஞானஞ் சிறந்தருள்கொழிக்குங்
குருவடிவான குறைவிலாநிறைவே
குன்றுப்பொருளே குணப்பெருங்கடலே
சீர்மலிதெய்வத் திருவருளதனாற்
பார்முதலண்டப் பரப்பெலாநிறுவி
இமைப்பொழுதேனுந் தமக்கெனவறிவிலா
ஏழையுயிர்த்திரள் வாழவமைத்தனை! தாயுமானவர்.

ஆன்மாக்களேயன்றிச் சிறுவர்களாதல் எங்ஙனம்? உலகபரிபாக மார்க்கத்தில் இச்சமயத்தில் நீங்கள் சிறுவர்களின் சரீரங்களில் பிறப்படைந்திருப்பினும், குருநாதன் தனக்குச் சீடர்களாய் ஆட் கொண்டிருப்பது உங்களுடை யதார்த்த ஸ்வரூபங்களாம் ஆன் மாக்களையேயன்றி உங்கள் சரீரங்களையே யல்லவன்றோ! ஆதலின் நீங்கள் யாவரும் ஆன்மாக்களே எனும் உண்மையை எப்பொழு தும் மறவாதிருத்தல்வேண்டும்.

இனி இத்தகைய குருமூர்த்தியினது சேவைக்குரிய விசேட குணம் ஒவ்வொன்று நம்மொவ்வொருவரிடத்திலும் இருக்கின் றது. நம்முள் ஒருவரிடம் மிகவதிகமான வீர்யம் அல்லது பலம் காணப்படுகின்றது. இன்னுமொருவரிடத்து மிகுதியான அன் பும், மற்றுமொருவரிடத்தில் சந்தோஷ நிறைவும், விசேடமாய் விளங்கிநிற்கின்றது. இவையத்தனையும் ஸ்ரீ குருநாதனிடமுள்ள

சகமெலாம்பெற நல்லருளுதாரமாச்சமைந்தோய். தாயுமானவா

விரியுநல்லன்பு விளைத்திடும்விளைவு,
தன்னுயிர்போலத் தரணியின்மருவிய
மன்னுயிரனைத்தையும் வளர்த்திடும்வேந்தன்,
தான்பெறும்பேறு சகமெலாம்பெறவே
வான்பெருங்கருணை வளங்கியமாரி,
மண்டலமூன்றிலு மன்னியவுருவிலுங்
கண்டவையத்திலுங் கடவுளாய்நின்றோன்.

நேசயோகத்துறு நிருபரெல்லாந்தொழு
மிராஜயோகத்திரை..........................
பொறுமை,தெளிவு புனிதவாசார
மறுவிலாவண்மை வாரமியற்கை
தண்ணமர்சாந்தந் தயங்கியகீர்த்தி
யெண்ணெண்கலைபயி லிணையிலாக்கல்வி
நல்லவிரக்க நடுநிலைசத்திய
மில்லையென்னும லெவர்க்குந்தருங்கொடை
நற்குணனெல்லா நண்ணியபெருந்தகை.

குணங்களையாதலின், நீங்கள் ஒவ்வொருவரும் தத்தம் விசேஷ குணத்தையே மாசு சிறிதுமில்லாத் தூய்மை விளங்கச்செய்து கொள்வீராயின், உங்களுடைய வீர்யம், அன்பு, சந்தோஷங்கள் மூலமாய் குருநாதரே தன்னைப் பிரகாசித்துக்கொள்ளுவர். ஆனால் இவ்விதமாக்கிக்கொள்ளற்கு வழியாதெனில், குருதேவனிடம் இக்குணங்கள் எப்படி விளங்குகின்றனவோ அவ்விதமே நும்மிடத்தும் அவை பிரகாசிக்குமாறு செய்துகொள்ளல்வேண்டும். * அஃது எவ்விதமெனில் விளக்கிக்கூறுவேன். இவற்றுள் வீரியமெனும் குணத்தை முதலில் விரிப்பேன். குருநாதன் தன்னிடம் நிறைந்துநிற்கும் வீரியத்தை நோக்கிப் பெருமைகொள்ளுகிறதில்லை. பின்னைக் கடவுளது இயற்கையான வீரியமாங்குணத்தை ஒவ்வொரு ஜீவனும் தன்னிடம் உணர்ந்து அறிந்து கொள்ளும்படி செய்வதற்கே † குருநாதனும் அக்குணத்தைத் தன்னிடம் போற்றி வளர்க்கிறார். அவ்விதமே அன்பும் குருதேவனது உள்ளத்தில் நிறைந்து நிற்கின்றது. தான் ஆனந்தமடைவதற்கெனவாவது, அல்லது பிறரைத் தன்னிடம் அன்புகொளச் செய்வதற்கெனவாவது அல்லாமல், குருதேவன் பிறர் யாவரும் தத்தம் நண்பர்களை நோக்கியும் பகைவர்களை நோக்கியும் அன்பேகொள்ளும்வண்ணம் செய்து வருவதற்கெனவே, இவ்வன்பாம் குணத்தைத் தன்னிடம் போற்றி வளர்க்கின்றனர். இவ்வாறே அவரிடமுள்ள சந்தோஷமெனுங்குணமும் அன்னியர் தன்னைநோக்கி அன்பும் மரியாதையும் பாராட்டிவருவதால் ஏற்படுவதன்று; பின்னை கடவுளின் சிருஷ்டியாம் இவ்வுலகவாழ்வை குருநாதன் தனது பேரறிவுடை திருஷ்டிகொண்டு நோக்கி, உண்மையில் அஃது மிகவும் உசிதமானதும் ஆனந்த நிறைந்ததுமாமென அறிந்து கொள்வதால், அக்குணம் ஏற்படுகின்றது; ஆதலினவ்விதமே நீங்களும் அக்குணத்தைக் காட்டி வரல்வேண்டும்.

* அங்கிலேபதிந்த நின்பழவடியர்தஞ்
சீராயிருக்க நினதருள்வேண்டுமையனே! ' தாயுமானவர்.

அன்னைபோலவருண்மிகுத்து மன்னுஞானவரதனே
என்னையேயெனக்களித்த நின்னையோநானுநினைவனே!
தாயுமானவர்.

ஏனெனில் குருதேவனும், தனது சீடர்களிடம் தன்னையே கொடுத்துக் காட்டி, அவர்கள் ஒவ்வொருவரையும் தனது பிரகாசம் விளங்குவதற்கேற்ற ஒவ்வொரு கண்ணாடியாக நிரூபித்து விடவு மிச்சிக்கின்றனரன்றோ!

குருதேவனுக் குகந்த உண்மைச் சீடர்களாதலை நீங்கள் விரும்புவீர்களாயின் மேற்சொன்னவைபோன்ற பல நற்குணங்களையெல்லாம் நீவிர் சம்பாதித்துக் கொள்ளல்வேண்டும். அவற்றுள்ளெல்லாம் இப்பொழுது நீங்கள் சாதனம்செய்துகொள்ளும் வண்ணம் நான்கு குணங்களை இங்கு எடுத்துரைக்கத் துணிவேன். அவற்றுள் முதலாவது 'முகமலர்ச்சி'யென்பதாகும், இரண்டாவது தீர்மான வசனங்கள், மூன்றாவது சந்தோஷமான நினைவுகள், நான்காவது உதாரமான செயல்கள் ஆகிய இவைகளேயென்க.

இந்நான்கனுள்ளும் முதலாவதான 'முகமலர்ச்சி'யென்னும் குணத்தை இன்று விளக்குவேன். குருதேவனது திருஷ்டி செல்வதற்கேற்ற ஜன்னல்களாய் நீங்கள் ஆகிவிடவேண்டுமென யான் முன்னமே கூறினேனன்றோ! ஏனெனில் குருதேவரும் கடவுளின் பிரகாசத்திற் கேற்றதோர் ஜன்னலேயாகி நிற்பவரன்றோ! கடவுளது நினைவே குருதேவனது சிந்தையிற்றங்கும் நினைவாகின்றது. அவ்வண்ணமே கடவுளது ஆசைகளையே குருதேவர் மானிடர் விஷயத்தில் பாராட்டுகின்றனர். இனி கடவுளும், சந்தோஷமும் வீரியமும் அன்பும் நிறைந்த பூரணமேயாதலின், அவனது சாயையேயாகும் குருதேவனும் இவற்றையெல்லாம் பெற்றவரேயாகி, பிரபஞ்சத்தின் க்ஷேமத்திற்கு ஓர் திவலையேனும் மோசமென்பது வாராதென்பதை நன்குணர்ந்து, சதாகாலமும் தானும் அவ்விதமே ஆனந்தம் நிறைந்துவிளங்குவர். இனி உலகில் எப்புறத்திலும் துக்கமும் துன்பமுமே செறிந்துநிற்க, அவற்றை குருநாதரறியாது ஆனந்தமயமாய் நிற்றல் எங்ஙனமாகுமென நீங்கள் வினவுவீர்கள். மானிடரைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான தெளிவுடன் குருநாதர் இவை யாவற்றையும் அறிந்துகொண்டவரேயாயினும் மேற்கூறியபடி தனதானந்தானுபவத்தில் ஒரு சிறிதும் குறையாமல் வாழ்பவரேயாவர். இவ்வுலகமுழுவதும் துக்கத்துள்

ஆழ்ந்து நிற்பதைச் செவ்வனேயறிந்தும் குருதேவன் சந்தோஷம் நிறைந்துநிற்பது எங்ஙனமெனும் இவ்விரகஸ்யத்தை அறிந்து கொள்ளற்கு தற்காலம் நீங்கள் திறமையுள்ளவர்களல்லீர். இனி வருங்காலத்தில் கருமமெனும் ஜகத்தின் நியதியையும், கடவுளால் வகுக்கப்பட்டிருக்கும் இஜ்ஜகத்தின் பரியாத மார்க்கத்தையும், நீவிர் அறிந்துகொள்ளுங்காலே, உலகின் துன்பத்தை உணரும் பொழுதும் கருணைநிறம்பிய குருதேவன் போல்வாருக்குந் தம் ஆனந்தம் குன்றாமலே நிற்பதும் சாத்தியமாகுமென்பது உங்களுக்கு விசதமாகும். ஆதலினிப்பொழுது அத்தகைய பெரும் ரகசியத்தையறிய முயலாமல், கேவலம் குருதேவன் நடக்கும் வழியையே பற்றி நீங்களும் நடக்கப் பழகிவருதலே உங்கள் கடமையாகுமன்றோ!

ஆகவே மூதறிவுடையோனும் குருநாதன் எப்பொழுதும இன்பமுமானந்தமும் நிறைந்தவராய் விளங்குவதுபோல, நீங்களும் சதாகாலமும் மலர்ந்த பார்வைகளும் குளிர்ந்த மனமும் உடையீராய் நிற்றல்வேண்டும். இனி எப்பொழுதும் இவ்விதமிருத்தற்கு இயலவில்லையோ, என்செய்வது என நீங்கள் மயங்கலாம். அனேக சமயங்களில் நாம் இவ்விதம் கவலையற்றுச் சந்தோஷமுற்றவர்களாய் நிற்றற்கு முடியாமற்போவதும் சத்தியமே. ஆதலாற்றான் உங்கள் பழக்கத்தை மாற்றிக்கொள்ளவேண்டியது அவசியமென்பதைப் பற்றி யானிப்பொழுது இயம்பலுற்றேன். மனது கலங்கும்பொழுது என்ன செய்யவேண்டுமென்பதை முதலில் யோசிப்போம். நமக்கு ஏனிவ்விதக் கலக்கம் வந்ததென்பதை அப்போதைக்கப்போது ஊகித்தாலோசிக்கத் தொடங்கல் நமது முதற்கடமையாகும். இவ்விதம் சிந்திக்கின் அதற்குக் காரணங்கள் இருவகையாகுமென நமக்குத் தெள்ளிதின் புலப்படும். முதலாவது உங்கள் ஸ்தூலசரீரங்களை பாதிக்கும் வியாதிமுதலிய வேதுக்களேயென்க. இரண்டாவது முதலில் நும்மனங்களைச் சம்பந்தித்துப் பின்னரவற்றின் மூலமாய் நுங்காமிக வியற்கையையும் பாதிக்கும் காரணங்களேயாகும். இவற்றுள் நுங்கலக்கத்திற் காதாரமான ஸ்தூலவேதுக்களைப் பற்றி முதலிற் பேசுவேன். சாதாரணமாய் வியாதியை உற்பத்திபண்

னும் நுண்ணிய அணுக்கள் முதலிய விஷாம்சங்கள் நமது ஸ்தூல சரீரத்துள் நுழைந்து அதற்கு அசௌகரியத்தை உண்டுபண்ணி விடுவதாலேயே நமது சூக்ஷ்மமான சரீரங்களும் உடனே அசௌக்கியமடைந்து, முடிவில் நமது இச்சை நினைவுகளும் கலங்கி துன்பம் விளைகின்றது. ஆனால் துன்பமல்லது துக்கமென்பது நமது சரீரங்களின் தன்மையேதவிர நமது ஆன்மாக்களுக்கு எவ்விதத்திலும் சம்பந்தமுடையது ஆகுமோ? ஆயினும் ஆன்மாவும் சரீரமும் சேர்ந்திருக்குமுண்மையால், சரீரத்தை எது பாதிக்குமோ அதுவே ஆன்மாவையும் பீடிக்கின்றது; அதாவது ஆன்மவியற்கையான பாவனையை அசுத்தப்படுத்திக் களங்கமாக்கிவிடுகின்றதென்க. ஆதலின் எப்பொழுதாயினும் உங்கட்கு சௌகரியக் குறைவின் உணர்ச்சி ஏற்படின், உடனே அக்குறைவுகளை நீக்கிக்கொள்ள முயலாது, இத்துன்பததை யாம் தாங்கவேவேண்டுமென நினைத்தல் கூடாது. ஏனெனில் இவ்வல்லலைத் தாங்க முயலுதல் நுமது சக்திகளை வீணே சிலவழித்தலேயாகும். பின்னையதன் காரணமின்னதென வோர்ந்து அஃதை நிவிர்த்தித்துக் கொள்ளலே உங்கள் கடமை. உங்களது சகல சக்தி உற்சாகத்தையும் வீணாக்காது குருநாதனது தொழிலைப் புரிதற்கெனச் சேகரித்துக் காத்துக்கொள்வதே மேன்மை. துன்பத்தை சகிப்பதால் நுங்கண் மனோவலிமையைப் பாழாக்குவது எவ்வாற்றானும் பொருந்தாது. அவ்விதம் துன்பத்தைச் சகிப்பது உங்களால் இயலாதென யான் சொல்லவில்லை. ஆனால் அவ்விதம் செய்வீர்களாயின் பிரதிநிமிஷமும் குருவினது பணிகளை நிறைவேற்றும் ஓரே நோக்கத்தால் நிறப்பிக்கொள்ளவேண்டிய நுங்கள் மனதை, சதாகாலமும் துன்பவாசனையின் உணர்ச்சிகொண்டே நிறப்பிக்கொள்வீராவீர். ஆகவே ஏதேனும் உங்கள் தேகங்களில் அசௌக்யம் நேரிடின் உடனே அதற்குக் காரணத்தைக் கண்ணுற்று அஃதை விலக்கிக்கொள்வதே குருதேவனது சேவையைப் புரிய நோக்கங்கொண்டோர் யாவரும் கொள்ளுங் கடமையாகும்.

ஆனால் இவ்வித மனோநிக்கிரகத்தைச் சாதித்துக்கொள்ளற்கு நுங்கட்குச் சிறிதுகாலமும் பழக்கமுஞ் செல்லும். ஆதலின் இவ்வாரம்பத்தில் நுங்கட்குத் துன்பம் நேரும்பொழுதெல்

லாம், அவ்விதம் துன்பமடைவது சரீரமேதவிர ஆன்மாவன்றென் பதை மறவாதிருத்தல் வேண்டும். இக்கருத்தையே மனத்தி லுன்னி, ஆன்மாவை சரீரபாவனையிற் செல்லாவாறு தடுத்துக் கொண்டு, நீங்கள் யாவரும் நம்மாற்கூடியவரை ஆன்மாக்களாய்த் தனித்துநிற்க முயன்றுவரல்வேண்டும். *

இனியுங்களது சாந்தி சந்தோஷம் இவைகுறைதற்கு இரண் டாவதான காரணத்தை யுற்று நோக்குவாம். இவை மனோ மயமானவை. சில சமயங்களில் நுங்களொடு பழகுவோர் நுங் கண்மீது அன்பின்றி ஒழுகுதலால் உங்களுக்குத் துன்பமும் விசனமும் உண்டாகின்றது. இவர்களிவ்வித மிருத்தற்குக் கார ணம் யாதோவென்பதை ஆராய்வோம். அனேகமாய் பூர்வஜன் மங்களில் நீங்கள் இவர்களை அவ்விதம் துன்புறுத்தி யிருப்பதாற் றான் நுங்களுக் கிஜ்ஜன்மத்தில் அவர்களோடும் கருமசம்பந்த மேற்பட்டு அவர்களால் இடுக்கணும் நேருகின்றது. ஆதலினிஃது நீங்கள் அனுபவித்துத் தீர்க்கவேண்டியவற்று ளொன்றே யாத லால், அவர்களிடமிருந்து வரும் துன்பத்தை நீங்கள் சகித்துக் கொள்ளலே வேண்டும். இதனால் நீங்கள் செலுத்தவேண்டிய கருமக்கடன் சுமையும் ஒழிந்துவிடுகின்றது. இஃதன்றியும் சிற் சில வேளைகளில் நுங்கட்குத் துன்பம்செய்வோர் தாங்களே மனச்சஞ்சலமுங் குழப்பமு முடையோராயிருப்பதால், தாமடை யுமவ்வல்லலை தாங்களறியாமலே சிறிது நுங்கண்மீது சுமத்திவிட எத்தனிக்கிறார்கள். பானிடருட் சாமானியர் பலர் தங்கண்மீ துள்ள பாரத்தை ஒருவாறு அகற்றிக்கொண்டு சமீபத்திலிருக்கு மயலாரிட மஃதைச் சிறிது எறிந்துவிட முயன்றுவரும் பழக்கமே இதுவாகும். இத்தகையினர் தமது சுமைகளை அன்னியரின்மீது மேற்கூறிய வண்ணம் சுமத்திவிடுவதால், தஞ்சுமைகளின் பளுவுஞ்

* ஊனாகநிற்கு முணர்வைமறந்தையாநீ
தானாகநிற்கவொரு தந்திரந்தானில்லையோ?

பின்னுமுடற்சுமையாப் பேசும்வழக்கதனு
லென்னபலனுமுற் றிருந்தோமே—அன்னதனு
லாநந்தந்தானேதா னுகுமெம்மையனே
யேனிந்தத்துன்ப மினி.

தாயுமானவர்.

சிறிது குறையுமென நம்புகிறார்கள். இவர்கள்மீது நீவிர் இரக்க முறுதலே வேண்டும். நல்வழியிற் பழக்கமற்ற சிறியோர் சிலர் நுங்களிடம் குற்றஞ்செய்யின் அவர்கண்மீது கோபம்செய்யாமை எப்படி அழகாமோ அவ்விதமே இவ்வியற்கையினோரையும் நீவிர் இரக்கத்துடன் பாவித்தல்வேண்டும.

இனியுங்கட்குத் துன்பநேருதற்குள்ள மற்றுமோர்வழியா தெனில்: அன்னியரிற் சிலர்மீது நீர் அன்புசெலுத்தும்பொழுது அவ்விதம் அவர் நுமமீது அன்புடன் நடவாதிருத்தலே யென்க. நாமொருவரை நேசிக்கும்பொழுது அவரும் நம்மை நேசித்தால் அஃது நமக்கெப்பொழுது மின்பத்தை விளைவிக்குமாதலின், அவ் விதம் நமது அன்பிற்கு விஷயமாவோர் நம்மீதும அன்புசெலுத் தினாலன்றி நமக்குத் துன்பட தோன்றுவது சகஜமேயாகும். ஆயி னும் எப்பொழுதாவது பிறரிடமிருந்து உங்களுக்குத் துன்பந் தோன்றுமாயின், அதற்குக் காரணம கடவுளின் ஆனந்தம் உங் கள் நெஞ்சிற் றோன்றாமாறு* தனிய ஜன்னலொன்று இத்தருணம் அடைபட்டோ, அல்லது பங்கலாகியோ நிற்கின்றதென்பதைத் தவிற வேறில்லையெனும உண்மையை நீங்கள் உணர்ந்தறிந்து கொள்ளல்வேண்டும. இத்தன்மையதான துன்பத்தின் ஏதுக்கள் யாவும் உங்கள் உள்ளுறையினின்றும் கிளம்புவனவேயன்றி, வெளி யுலகத்தைச சேர்ந்தன வாகாவென்பதே உண்மை. ஓர் ஜன்ன லின்கண் கருமையுடைய தடையொன்று தங்கும்படி விடுவோ மாயின், அஃது வெளிச்சத்தைப் பூரணமாய் பிரகாசிக்கவொட் டாமற்றடுக்கும் நிழலொன்றை வீசுமன்றோ! இத்தன்மையைப் போல் நமமிடமிருக்கு மேதோவொரு மலரூபமான அம்சமே இவ்வகையான துன்பமாம் திரையொன்றை நம்மிடம் நாட்டுகின் றது. ஆதலின் அதை நீக்கிக்கொண்டு நாம்மட்டும் ஒருவரை உண்மையுடன், அவரும் நம்மை நேசிக்கவேண்டுமெனும் கைம் மாறை எதிர்பாராமலே, சுவயநலமின்றி, அவர் பொருட்டுதவும் நோக்கங்கொண்டே, நேசிப்போமாயின் அவ்விதமே அவரது உத் தம மனது நம்மையும் திரும்பி நேசிக்குமென்பதற்கு ஐயமே

* ஆராவமுதனைய வானந்தவாரியென்பாற்
றூராமலேயாரீ தள்ளிவிடவந்ததென்னோ? தாயுமானவர்.

யில்லை. அவரவ்விதம் நம்மிடம் அன்புசெலுத்தாமல் இருக்கவே முடியாது; எனெனில் அவரது ஆன்மாவின் இருப்பிடமான உத்தமமனதானது, அவ்விதம் தனக்குக் கிடைக்கும் அன்பு, உபகாரம் இவற்றைப் பெற்றுக்கொண்டு அவற்றிற்கு நன்றிபாராட்டாமலேயிருத்தல் ஒருபோதுமமையாது. பின்னைத் தன் உயர்சுவபாவத்திற்றங்கி நிற்கும் இவ்வெண்ணத்தை அவர் தானே வெளியிற் காட்டுவதற் கியலாவண்ணம் பலதடைகள் நேரிட்டிருக்கின்றனவேயன்றி வேறன்று. ஆதலின் நீங்கள்மட்டும் உண்மையான அன்பை அவரிடம் செலுத்துவீர்களாயின், அவர் வெளியுலகில் உங்கள்மீது காட்டும் அசிரத்தையை நீங்கள் லக்ஷியம் செய்ய வேண்டிய தவசியமில்லை. எனெனில் அவரது ஆன்மாவாகும் அந்தரங்கநிலை உள்ளபடியே உங்களது உபகாரத்திற் கிணங்கி, அன்பையு நன்றியறிதலையுங் கொண்டதுவாகி, உங்கண்மீது அவற்றைக் காட்டியே நிற்கின்றதென்பதற் கையமில்லையென நீவிர் உணர்ந்திருத்தல் வேண்டும். மாயையாகும் அந்தகாரம் நிறைந்த இப்பூவுலகில் நீங்கள் அன்புசெலுத்தியும் அவ்வன்பைத் திருப்பிக் காட்டாத மாந்தர் பலரிருப்பினும், அஃதை நீங்கள் மனத்திற் கொள்ளல் அழகாமோ? எனெனில் நீங்கள் பிரீதியைச் செலுத்துவது ஆன்மாக்களின் மீதேயன்றி, அவற்றின் கோசங்களாய சரீரங்களை நோக்கியன்றென்பதை நீங்கள் மறத்தல் கூடாது. அவ்விதம் பிறர் நமக்களிக்கும் அன்பை எதிர்பாராமலே, நாம் பலாபேக்ஷையற்றதோர் அன்பை அவர்மீது செலுத்தும் பாக்கியம் நமக்குக் கிட்டியதென நீவிர் எண்ணலே மேன்மையாகும்.

இனிச் சில சமயங்களில் சிறுவர்கள் தாங்கள் ஒருவரிடத்தில் மதிப்பைப் பாராட்டும்பொழுது, அவர் அச்சிறுவர்களை லக்ஷியம் செய்யாதுவிட்டு வேறு சிலரை கவனிப்பாராயின், முற்கூறிய சிறுவர்க்கு வருத்தமுண்டாவதைக் காண்கிறோம். இங்குதாம் உபேக்ஷையை யடைந்தோமென இவ்விதம் வருத்தத்தை உணர்வோர்க்கு, மற்றவர்கள்மீது பொறாமையும் சிறிதுண்டாகின்றது. இஃது சாமானியரிடம் தோன்றுவது சகஜமேயாயினும், நீங்கள் யாவரும் முக்தனும் குருதேவனது சீடர்களாதலின், உங்களிடம் அமைதல் பொருந்தாது. எவராவது மற்றொருவரிடம் அன்பு

செலுத்தினால் நீங்களவ்வளவைக் கண்ணுற்று ஆனந்தித்தலே வேண்டும். இவ்வன்பிற்கு நீங்கள் இத்தருணம் பாத்திரங்களாகாது நிற்பினும், அதற்காக நீங்கள் மனங்கோணுதல் அல்லது பொறாமை, விசாரம் இவற்றைக்கொள்ளல் எவ்வாற்றானும் அழகாகாது. பின்னை உலகினில் இத்தருணம் அன்பின் அளவு கடுகளவாயினும் அதிகமாயிற்றேயென வியந்து மகிழ்தலேவேண்டும்.

பாடசாலை, உயர்தரகல்லூரி முதலியவற்றுள், பலகாலம் கல்வியைப் பயிலவிருக்கும் சிறுவர்களாம் நுங்கட்கு, துன்பமுண்டாவதற்கு மற்றுமோர் ஏதுவுமுண்டு. அஃதியாதெனில், நீங்கள் பயின்றுவரும் கல்வியின் பரீக்ஷையொன்றில் ஒருசமயத்தில் நீங்கள் தேர்ச்சியடையாமற் போனாலும், அல்லது ஆசைவைத்த விளையாட்டில் நீங்கள் சேர்ந்துகொண்ட கக்ஷிக்கு ஜயமுண்டாகாதுபோயினும், உங்கட்குக் கவலை ஜனித்தலே யென்க. இவ்விதமே கல்விச்சாலையில் வாழும்பொழுதும் அதைவிட்டு வெளியேறிய பின்னரும் சின்னாள்வரை நுங்கட்கு மனத்துயரை உண்டாக்கும் வழிகள் பலவுளவேயன்றோ! இவற்றை எவ்விதம் மாற்றிக்கொள்வதெனிற் கூறுவேன். இச்சாலைகளில் உங்கட்கு மேலுள்ளார்களான பெற்றோர் உபாத்தியாயர் முதலானோரிடம் நீவிர் காட்டவேண்டிய கடமையாவதுயாதென ஓர்ந்து பார்ப்போமாயின், உங்கட்களிக்கப்படும் கல்வியைச் செவ்வனே கவனித்துப் பயின்றுவருதல் மட்டேயாகும். அவ்விதம் உங்களாலியன்றவளவு நீவிர் முழுமனதுடன் உழைத்தபின்னரும், அப்பெரியோர் திருப்தியடையாம விருப்பாராயின், அஃது உங்களது குற்றமாகாதென்பது உண்மையாதலின், அதற்காக நீங்கள் மனத்தாழ்ச்சியடைதலும் அவசியமாகாது. ஏனெனில் உங்கள் உழைப்பை உள்ளபடி மதிப்பிட்டுத் திருப்தியடையவேண்டியவர் உங்களது உபாத்தியாயராவது, தாய்தந்தையராவது அன்று. பின்னை உங்களை ஆட்கொண்டருளும் குருவாகும் பெருமானேயன்றோ! * ஆதலின் நீங்கள் கடமைபூண்டிருக்கும் தாய்தந்

---

* சிற்றரும்பன்சிற்றறி வாளனேதெளிந்தான்
மற்றரும்பன, மலரெனப், பேரறிவாகிக்
கற்றரும்பியகேள்வியான் மதித்திடக்கதிச்சீர்
முற்றரும்பியமௌனியாய்ப் பாத்திடைமுளைப்பான்.

தையர் முதலினோர்க்குச் செய்யவேண்டிய காரியாதிகளை உங்களாலியன்றவளவு இயற்ற முயலுங்காலை, அதனால் அவை பழுதுபடுமாயின் அவ்வபஜயத்தையும் குருதேவர்க்கே அர்ப்பணமாக அளித்துவிடுவதே உங்கள் கடமையாகும். ஆகவே ஏதேனும் உயர்ந்ததோர் பரீக்ஷையில் நீவிர் தோர்சபடையர்விடினும் அதற்காக நீங்கள் கவலைகொள்ளல் அவசியமாகாது. ஏனெனில் உங்களுக்கு அப்பரீக்ஷைகள் மிகவுயர்ந்ததுவாத் தோன்றிடினும், குருதேவரது உயர் திருஷ்டியில் அவற்றிற்கு அத்தனை மதிப்புண்டாகாது. நீங்கள் பரீக்ஷைதேறித் தகுந்த பட்டங்கள் அடைந்து வரல்வேண்டுமென்பது குருதேவனது முக்கிய நோக்கமாகாது. பின்னை நீங்கள் யாவரும் அன்புநிறைந்த நற்சீலம் பெற்றுராதல் வேண்டுமென்பதுவே அவரது கருத்தாகும். ஆகவே எவ்வித அபஜயம் நேரிடினும் நீங்கள் மனத்தளர்வடைதலே கூடாது. ஏனெனில் நுஞ்செயற்கள் யாவற்றையும் மதிப்பிட்டுத் திருப்தியடையவேண்டிய அதிபதியாவார் ஸ்ரீகுருதேவரேயாதலாலும், அவர் நீங்கள் செய்து முடித்துக்கொண்டவற்றையல்லாது, செய்ய உத்தேசங்கொள்ளும் நுங்களது அந்தரங்கத்தின் கோரிக்கைகளையே குறிப்பிட்டு உங்களது தகுதியை மதிப்பிடுந் தன்மையராதலாலுமென்க.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால்நீங்கள் தெளிந்துகொள்ளவேண்டியது யாதெனில், எதிர்ப்படும் யாவரையும் நீங்கள் ஆனந்தமடைவித்தலே வேண்டுமென்க. இதுவே ஸ்ரீகுருதேவன் நுங்களுக்களித்திருக்கும் ஆணையாகும். ஏனெனில் நீங்கள் மனத்துயரங் கொள்வீராயின் அஃது நுங்களொடுமட்டும் நில்லாமல், நுங்களைச் சமீபிக்கும் எவரையும் தாவிப்பிடித்துக் கொள்ளுமோர் தொத்துநோய்போலாகின்றதெனக், குருதேவன் மொழிந்திருப்பதை நீங்கள் மறந்துவிடல் கூடாது. வைசூரியெனும் நோய் ஒரு நோயாளியினண்டையிற் சேரும் பிறரையும் உடனே சம்பந்தித்துத் துன்புறுத்துமாபோல், மனதின் சஞ்சலமும் ஒருவரிடமிருந்து மற்றொருவர்க்கு எளிதிற் பரவுகின்றது. இதனாற்றான் யானும் நீங்கள் குருநாதனையடைய முயலுங்காலை சாதித்துக்

கொள்ளவேண்டிய முதற்சாதன மாகுமென 'முகமலர்ச்சி' எனுங் குணத்தைக் குறிப்பிட்டுக் கூறலுற்றேன் எனக்கொள்க.

இனி இவ்வசனங்களைக் கேட்டவுடன் எப்பொழுதும் இவ்விதம் சந்தோஷமே நிறைந்தவராய் நிற்றற்கு நுங்களால் இயலாமையின் அதற்கு யாதுபுரிவதெனை நும்மனங்களில் ஓர் வினவெழுமன்றே! இதற்கு விடையும் அளிப்பேன். உங்கள் மனதில் இன்பதுன்பம் எவையிருப்பினு மவற்றைப் பாராட்டாது சதா காலமும் மலர்ந்த முகத்தையே நீங்கள் காட்டிவரல் வேண்டுமென்க. இப்படி நிற்றல் உள்ளொன்றும் வெளியிலொன்றுமான பொய்வேடத் தோற்றமாகாதோ எனின், ஆகாதென்க. எனெனில் உங்களது யதார்த்தமான ஆன்மநிலையைச் சோதித்துப் பார்ப்போமாயின் அங்கு எப்பொழுதும் இன்பமயமாஞ் சோதியே நிறைந்துநிற்பதால், நீங்கள் யாவரும் அந்நிலையில் ஆனந்தமே சுவரூபமாய் பிரகாசிக்கிறீர்களென்பது உண்மையன்றே! ஆதலின் இவ்வுண்மையை உணர்ந்து நீங்களும் எதிர்ப்படுமெவருக்கும் சந்தோஷ நிறைந்த பார்வையையே காட்டிவரத் துணிவீர்களாயின், அஃது உங்களது ஆன்மவியற்கையை ஸ்தூலசரீரத்தின் அங்கமாகிய மூளையினிடத்தும் ஏற்படுத்திக்கொள்ள முயலுமோர் முயற்சியாகுமேயன்றி வேறாகுமோ! ஆகவே இவ்வகையான பிரயத்தனம் உண்மையில் மேன்மையுடையது வாகுமேயன்றி ஒருபோழ்தும் வீண்வேடப் பாசாங்கு ஆகாதென்பது பெறப்பட்டது.

நீங்கள் துயருறும்பொழுதெல்லாம் அஃது குருதேவருக்குத் தெரியுமன்றே! பாடசாலையிலும் மற்றைய வியவகாரங்களிலும் நீங்கள் படும் கவலைகள் யாவற்றையும் அவர் நன்கு அறிவர். ஆதலின் அவருங்களை முழுதும் உணர்ந்து நுங்கட்கு எப்பொழுதும் ஆதரவுசெய்ய உள்ளங்கொண்டவரேயாவர். * ஆயினும் பிறர்க் குதவிபுரியு நோக்கமும், ஆவலும் கொண்டோருக்கே அவர் அதிகமாய் ஆதரவுசெய்யுந் தன்மையுடையவ ரென்பதை

* சிந்தித்தவெல்லாமென் சிந்தையறிந்தேயுதவ
வந்தகருணை மழையேபராபரமே. தாயுமானவர்.

நீவிர் அறிவீர்கள்.* ஆதலினித்தகைய வெண்ணம் நும்மிடம் குடி கொண்டாற்றான், குருதேவரும் நீங்கள் கவலையும் அதைரியமும் அடையும்பொழுதெல்லாம் சடுதியில் அவற்றை நீக்கியருளுவார். ஆகவே அந்தரங்கத்திற் அன்பமுடையீராயினும் பிறர் யாவ ரிடமும் சந்தோஷமே பிரகாசிக்குமுகத்தைக் காட்டுவீராயின், குருநாதனும் நுங்களை யாதரித்துக் கட்டிக்காத்து அருளுவனென் பதிற் றடையுமுண்டோ? அவ்விதம் மனத்திலுட் டியாரடையும் தருணங்களிலெல்லாம் கருணையங்கடலான குருநாதனையே நினை ந்து உள்ளுருகி, "நீதில் பரமாம் குருதேவரே! எமக்கு வாய்த்த தந்தைவடிவான பேருறவே! எப்புறத்தும் யாவரும் ஆனந்த மயமேயாகும் வண்ணம் எந்தநாளும் யாங்கள் ஆனந்தமே நிறை ந்த பார்வையுடனிருக்க ஐயனே நீ முன்னிற்கவேண்டும்" என நீவிர் வழுத்திவரல்வேண்டும். எவ்வித உதவியையும் உலகினர் பொருட்டுச் செய்ய நீவிர் எண்ணங்கொள்வீராயின் அதை உடனே குருநாதனும் நுங்கட்கு முழுவதுமுவந்து அளிப்பன் என்பதில் சந்தேகமேயில்லை.

...

* சித்தநினைவுஞ் செயுஞ்செயலுநீயெனவா
முத்தமர்கட்கான வறவேபராபரமே. தாயுமானவர்.

நோக்கற்கரிதான நுண்ணியவான்மோனநிலை
தாக்கற்குபாயஞ் சமைத்தபிரான்
காக்குமுயிரத்தனைக்கு நானடிமையாதலினால்
யானெனதென்றித்தனைக்கும் பேசவிடமில். தாயுமானவர்,

சிந்தைபோய்நானெனல்போய்த் தேக்கவின்பமாமழையை
வந்துபொழிந்தனைநீ வாழிபராபரமே.

நந்தமதென்றெண்ணி நலிந்தவுடல்வேருக்கி
வந்தபொருளுன்னதல்ல வென்றெனதுவல்லமையும்
உந்தனதன்றெல்லா நமதென்றேயுட்புகுந்த
தந்தையுநீமற்று மருளாந்தாயுமானவனே. தாயுமானவர் புகழ்.

நினையுநினைவக்கெட்டாத நெறிபெற்றுணர்ந்தநெறியாளா!
வினையைக்கரைக்கும்பரமவின்ப வெள்ளப்பெருக்கே! நின்தருளான்
மனைவிபுதல்வரன்னைபிதா மாடுவீடென்றிடுமயக்கந்தனையு
மறந்திங்குனைமறவாத்தன்மை வருமோதமியனேற்கே.

இதுவே நீங்களடைய முயலவேண்டிய முதற்சாதனமாகும் "முகமலர்ச்சி" அல்லது "மலர்ந்த பார்வைகள்" என்க. இத்தகைய குணங்களைச் சம்பாதித்துக்கொண்ட பின்னர் ஜீவன் முக்தனும் குருநாதனிடம் சிடனாயடைக்கலம்புகுந்த நீங்கள் அப்பால் அவ் வள்ளலுக்கு புத்திரர்களாதலையும் அடைவீர்கள். புத்திரபாவ மென்பது முக்திமார்க்கத்தில் சிடபாவத்திற்கு மப்பாலுள்ளதோர் நிலையைக் குறிப்பிடும் பதமாகும். இந்நிலையில் உங்கள் யாவரை யும் குருதேவர் தனது பிரக்ஞையின் விலாஸத்திற் குள்ளாக்கி, உங்களது மனங்களினின்று மெழும் மலங் கலந்தவாசனை தன்மன திற் கெட்டாதபடி எற்படுத்தியிருந்ததோர் திரையை அறவே நீக்கிவிட்டு, நுங்களை விசேஷ நெருக்கத்துடன் தன்னுடுமைக்கி யப்படுத்திக்கொள்வர். இவ்விதம் தனக்கு முங்கட்கு மத்தியில் ஓர் திரையை ஏற்படுத்திக்கொள்ளல் இப்பொழுது அவசியமாகா தன்றோ! ஏனெனில், நீங்கள் யாவரும் மிகச் சிறுவர்களேயாத லின் உங்களிடமின்னும் காமமாதி துற்குணங்கள் அத்தனையதிக மாய் நிலைபெறவில்லை. உங்களிடம் சிறிது அன்பின்மையும் அதை ரியமுமே காணப்படுகின்றன. ஆயினும் குருதேவன் தனது காரி யங்களில் நீங்கள் தனக்குதவி புரிவீர்களென்று கண்டு, உங்களை தனதருகிற் சேர்ப்பித்துக் கொண்டிருத்தலே, உங்களிடம் மேம் பட்டதோர் நற்குணமமைந்திருப்பதை பகிரங்கமாய் வெளிக் காட்டுகிறதன்றோ! ஆதலின் அதிசமீபத்தில் நீங்களொவ்வொரு ரும் குருநாதரது புத்திரனுதலை அடையக்கூடும்; ஆகவே அந நிமித்தம் யான் இதுகாறும் இயம்பிவந்த பெருங்குணமாம் சாத னத்தை சாதகஞ்செய்துகொள்ள முயலுதல் நுங்கடமையாகும்.

நீங்கள் யாவரும் ஞானமூர்த்தியாம் அரசனெனத் தகும் குருநாதனது குழந்தைகளேயாகி நிற்கின்றனரன்றோ! ஓர் மன்ன னின் மைந்தர்கள் தங்களரண்மனையை விட்டு வெளியேறி வீதி வழிவருங்காலை, அத்தேயத்தின் குடிகள் யாவரும், அவ்விராஜ குமாரர்கள் தம்பிதாவாகு மரசனது கம்பீர நடையுடைகளைச் சிறிதளவு வெளிக்காட்டுவரென எதிர்பார்ப்பரன்றோ! அவ்விதமே உங்கள் யாவருக்கும் தந்தையேயான ஸ்ரீகுருதேவனது உயர் குணங்களையு நீங்கள் எங்கிருப்பினும் வெளியிற் பிரகாசிக்கும்

வண்ணம் நடித்துக்காட்டி வருவீராகி, இவ்வுலகில் அம்மகாபுருடனுக்கேற்ற பிரதிநிதிகளாய் நிற்றலும் வேண்டும். அரசகுமாரர்கள் தம் தந்தையினது ராஜரீகப்பிரபாவத்தை சிறிதளவு உலகிற்றமது நடத்தைகளாற் காட்டி வருவதுபோலவே நீங்களும் குருதேவனது மகிமையையும் சிறிது உலகில் நுங்கள் மூலமாய்க் காட்டிவருதல் அவசியமாகும். நீங்கள் யாவரும் வாலிபர்களேயாயினும் உங்கள் தந்தையாரின் குணங்களமையப் பெற்றவர்களாயிருத்தல் வேண்டுமன்றோ! அவரது உன்னத சுவபாவம், ராஜரீகமான கம்பீரம், கௌரவம் இவை இப்பொழுதே நுங்களிடம் விளங்காவிடின், அத்தகைய பெரியோனிடம் நீவிர் பிறப்படைந்தவரென உலகினர் கொள்ளுதல் எங்ஙனமமையும். இவ்வித காரணங்களால் பாடசாலையிலிருக்குநாளில் உங்களைப்போன்ற சிறுவர்களையோ, அல்லது வீடுகளிற் பெற்றோர் முதலிய மூத்தோரையோ, யாவரையாயினும் நீங்கள் காணும்பொழுதெல்லாம் சந்தோஷத்தையே பொழியும் முகவிலாசத்துடன் விளங்கி, எவரையும் ஆனந்தமடைவித்து வரல் நுங்கள் கடமையேயாகுமன்றோ!

நுஞ்சகோதரர்களாகு மானிடர் யாவரையும் நுங்கள் முகங்களின் வழியாய் ஸ்ரீகுருதேவரே உற்று நோக்கிவரத் திருவுள்ளம் குவித்திருக்கிறாரென்பதை நீங்கள் மறத்தல் கூடாது. அதற்குக் காரணம் யாதோவெனில் நீங்கள் யாவரும் உலகினரின்மீது அன்பு செலுத்து மியற்கைய ராதலினாற்றானென்க. உங்களினும் பன்மடங்கதிகமாய் உலகின்மீது குருதேவன் அன்புவைக்கு மாற்றல் உடையராயினும், நீங்கள் உலகை நேசிக்கும் வழியானது அவனது வழிக்குச் சற்று வேறாகிய வழியாதலின், உங்கள் வழிகளையுமறிந்து நீங்கள் நேசிக்கும் விதமாகவும் தானுமன்பு செலுத்த வேண்டுமெனும் கருத்துடன், அவன் உங்கள் பார்வையல்லது திருஷ்டியினுள்ளும் பிரவேசிக்க விச்சை கொள்ளுகிறானெனக் கொள்க. உங்களில் ஒவ்வொருவரும், பரமனது காரியமேயாகிய இப்பிரபஞ்சத்தின் அழகு வைபவங்களைக் கண்டறிந்துகொள்ளுதற்கென, ஸ்ரீகுருதேவர்க்கு நூதன நூதனமான திருஷ்டிகளையளித்தற்குதவும் ஒவ்வோர் ஜன்னலேயாவீர். ஆகவே உங்களது சந்தோஷம், தைரியம், அன்புமுதலிய நற்குணங்கள் யாவும் குரு

தேவன் அருமையாய் சம்பாதித்திருக்கும் விலையுயர்ந்த சிறரத்தினங்களாகும். இவற்றைக் குருநாதனுந் தனது சிரத்தில் தரிக்கத் தகுந்ததோர் கிரீடத்தில் இழைத்துக்கொள்ள விச்சிக்கின்றனன். ஆதலாற்றான் உங்களைத் தன் சீடர்களாய் ஏற்றுக்கொண்டு உங்கட்கேற்ற உதவிகளைப்புரிந்து அடிமைகொள்ள முன்வந்திருக்கிறானென்பதை நீங்கள் உணர்ந்தறிந்து கொள்ளல்வேண்டும். இனி இக்குருதேவனும் பிரபஞ்சத்தையாளுமக் கருமமாகு நியதியினது ஓர் கருவியேயாதலின், உலகிற் குதவிபுரிவதில் நீங்கள் உங்களைப் பழக்குவித்துக் கொள்ளுவீராயின், வேண்டியவளவு உங்களுக்குத் தானும் உதவியருளுவனன்றோ! *

யானிதுகாறு மியம்பியவற்றால் நீங்கள் யாவரும் தெளிந்துணரவேண்டியது யாதெனில், இம்மகா மார்க்கத்தில் பழக்கமடைந்து மேற்செல்லு முதலுபதேசமுடையீராய நீங்கள் யாவரும் பிரதிதினமும ஸ்ரீகுருநாதனும பெருமானை மனத்திலுன்னி "நீதில்பரமாம குருதேவரே! எமக்கு வாய்த்த தந்தை யடிவான பேருறவே! யாங்கள் அனைவரும் நினதருளாலே யாவரிடமு மலர்ச்சியுடை முகத்தையே காட்டி வருவோமாக" என நும் மனத்துள்ளேயே பிரதிக்ஞை யொன்றைச் செய்துவரல்வேண்டு மென்பதே.

---

* ஒன்றதாய்ப் பலவா யுயிர்த்திரட் கெலாமுறுதி
யென்றதா யென்று முள்ளதா யெவற்றினு மிசைய
நின்றதாய் நிலை நின்றிடும் அறிஞ வென்னெஞ்ச
மன்றதா யின்ப வுருக்கொடு நடத்திடின் வாழ்வேன்.

தாயுமானவர்.

கணமதேனு நின்காரணந் தன்னையே கருத்திலு
ணரு மாதவர்க் கானந்த முதவினை—

அவனே பரமு மவனே குருவு
மவனே யகில மனைத்து—மவனேதா
மானவரே சொன்னலவரே குருவெனக்கு
நானவனாய் நிற்ப தெந்நாள்.

—

'யானுங்களுக்கு கூற முன்வந்த விஷயங்கள் நான்கனுள் முதலாவதான "மலர்ச்சியுடைய பார்வை"களைப் பற்றி நேருநல் பேசினேனாதலின், இன்று இரண்டாம் சாதனமான "தீரமொழிகள்" என்பதை விரிக்கத் தொடங்குவேன். தைரியம் அல்லது உறுதியெனுங்குணம் பெரியோனாங் குருநாதனிடம் சிட்பாவமடைந்தவன் எவனிடத்திலும் விளங்கவேண்டியவற்றுள் ளொன்றே யாகுமென்பதை நீவிர் அறிந்துகொள்ளல்வேண்டும். தைரியமென்பது யாதோவெனில் கூறுவேன். ஓரிடத்தில் சிலகுழந்தைகள் சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்குங்காலே அவைதடுமாறி பூமியில்விட்டுறி விழுமாயின் உடனே அதனாலுண்டாகும் வேதனையைப் பொறுக்கவியலா தழத்தொடங்குமன்றோ! இவ்விதம் பூமியில் வீழ்வதனால் துன்பமடையும்பொழுது வயதுவராத சிறுபிள்ளைகள் அழுவது சகஜமேயாகும். ஆயினும் மேலேவிழுந்து வேதனை அடையுந்தருணத்திலுங்கூட கண்ணீர்விடாத குழந்தையொன்றைச் சில அபூர்வ சமயங்களில் நாம் காண்பதுண்டன்றோ! இத்தன்மையான குழந்தையை நாம் தைரியமுள்ளதுவெனக் கூறுகிறோம். இக்குழந்தை மற்றவைகளைப்போலல்லாது தைரியத்துடன் நிற்கும் காரணமாவதியாதோவெனில், தனக்குத்துன்பம் விளைவித்த தனது சரீரத்தைக் காட்டிலும், தான் உண்மையில் அதிக தைரியமுடை வஸ்துவேயெனும் நம்பிக்கையை அடைந்து கொள்ளலாற்றான் என்க. இந்நம்பிக்கை அல்லதுணர்ச்சியே தைரியமாங் குணத்திலுள்ள முக்கிய அம்சமாகும். துன்பமல்லது துக்கத்தைத் தனக்குக் கொணர்விப்பதாகிய தன் ஸ்தூலவுடம்பை விட்டுத் தன்னைத்தனியே பிறித்துக்கொண்டு, தனதுடம்பைக் காட்டினும் தானே பலமுடையன் என, ஒருவன் தன்னுள்ளே யறிந்துகொள்ளலே தைரியமாகுமென்க. ஆதலின் தன்னை யடக்கியாளப்பார்க்கும் துன்பத்தைத் தானே யடக்கியாளத் துணியுமுறுதியே தைரியமெனப்படுமென்க.

அன்றியும் யுத்தமுதலிய மற்ற வழிகளில் தைரியத்தைக் காட்டும் மானிடரும் பலருண்டென்பதையும் நீங்கள் அறிவீர்கள். போருக்குச் செல்லுவோன் ஆங்கு தனதுயிரையுமிழக்க நேரும் ஆபத்துக்கள் வருமென்பதை யறிந்தேசெல்கிறான். ஆயினும் பிறரின் க்ஷேமம் தன்றேயத்தின் கவுரவமிவற்றையுன்னித் தன்னுயிரிழக்கு மாபத்தையு மிலக்ஷியஞ்செய்யாது நிற்கத் துணிகிறான். இங்கு இவனது துணிவையாராயின் அஃது கேவலம் ஸ்தூலவுடம்பை மதிக்காதுநிற்கும் தைரியம் மாத்திரமன்றென் பது புலப்படும். ஓர் ஊரில் ஒரு துஷ்டன் மற்றொருவனை நோக்கி யுன்னையானுதைத்துத் தள்ளிவிடுவேன்' என்று வீரம்பேசின், அஃது உண்மையான தைரியமாகுமோ? பின்னை யதார்த்தமான தைரியமென்பது அயோக்கியத்தன்மை சிறிதுமின்றி, பிறருயிரைக் காக்கும்பொருட்டுத் தனதுயிரை விடத்துணியுந் துணிவேயாகும். தண்ணீரில் மூழ்கியிறக்குந் தருணத்திலுள்ளா னொருவனைக் காக்கும்பொருட்டுத் தன்னுயிரையு மிழக்கத் துணியுமொருவனையாவது, அல்லது நெருப்புப் பிடித்தெரியும் வீட்டிற் கிடப்போனைத் தப்புவித்தற்கா வந்நெருப்பினுட்டானும் நுழையு வீரனொருவனையாவது பாருங்கள். இவ்வகையினரை நாமனைவரும் உள்ளபடியே தைரியமுடையோர் எனவழைப்போமன்றோ! ஆதலின் சிலாக்கியமானதோர் விஷயத்தில் தன்னுயிரிழக்கத் துணியுந்துணிவு தைரியமெனுங் குணத்திலுள்ள மற்றோர் அம்சமாகும். இத்தன்மையினர் தம்முத்தம சுபாவத்துடன் தம்மையைக்கியப்படுத்திக் கொண்டோராகி, தமது அதமவியற்கை மேலோங்கித் தம்மையடக்கித் தம்மிடங் கோழைத்தனத்தைத் தாபித்துவிடாது ஜாக்கிரதையுட னிருப்பவரேயாவர்.

---

* புன்புலான் மயிர்த்தோ னரம்பென்பு மொத்திடு
புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்லவே, யிதனை மெய்யென்று நம்பியென்
புந்திசெலுமோ பாழிலே,
துன்பமா யலையவோ, வுலகநடை யையவொரு
சொப்பனத்திலும் வேண்டிலேன்,
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.
தாயுமானவர்.

இனி நாமனைவரும் மிகத் தைரியமுடையோரா யிருத்தலே வேண்டும்; ஏனெனில் நமது குருநாதர் தைரியமே வடிவுடையா ராதலினென்க. * அவருக்கே யாட்பட்ட நம்மனைவருக்கும் தைரியமெனுங் குணம் அவசியம் வேண்டுமென்பதற்கு இதுவே முக்கிய காரணமாகும். இனி குருநாதரும் இவ்விதம் தைரிய முற்றவரா யிருத்தற்குக் காரணம் யாதோவெனின் அவரிடம் சகல வீரியமும் நிறைந்து நிற்பதாலென்க. அவரது நினைவுணர்வு கள் யாவும் கடவுளது குணங்களோ டொத்தவைகளன்றோ! கடவுள் சகல வீரியமும் பிறக்குமிடமேயாதலின் அவனோடைக் கியமுற்ற குருநாதனு மவ்வாறே யாவரென்க. கிறிஸ்தவமதத் தின் ஆசாரியனாகிய யேசுவெனும் பெரியோனைப்பற்றிய வரு ணனையில் ஓரிடத்தில், 'யுகங்கள்தோறு மசையுருக் குன்றமே' எனக் கூறப்பட்டிருக்கின்றது. அதனுட்கருத்தாவது கொந்தளிப் புள்ள பெருங்கடலின் மத்தியில் அசையாக் குன்றுபோல் † அம்

பாரொடுநன் னீராதி யொன்றோ டொன்றுகவே
பற்றிலய மாகுபோழ்து
பரவெளியின் மருவுவீர், கற்பாந்த வெள்ளம்
பரந்திட னதற்குமீதே
நீரினுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர், விகற்பமாகி
படியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
யூரென விளங்குவீர், பிரமாதி முடிவில்விடை
யூர்தியரு ளாலுலவுவீ
ருலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
றுலாவினற் றூணையினுன்
மேருவென வசையாம னிற்கவல்லீ, ருமது
மேதக்க சித்தியெளிதோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

† உலகமெங்குங்கலந்துதானே நிகழனந்தானந்தமயக்குன்றே!
சமயகோடியத்தனையுந் தொடர்ந்துபுகுமாதிநட்பே!
இமையளவுமுபகாரமல்லால் வேறொன்றியக்கா
நிர்க்குணக்கடலா யிருந்தவொன்றே!
எந்தையேயெம்மானே யென்றென்றேங்கிக்
கன்றாகிக்கதறினர்க்குச் சேதாவாகிக்
கடிதினில்வந்தருள்கூருங் கருணைவிண்ணே! தாயுமானவர்.

மகாபுருடன் விளங்கினன் என்பதும்,' அக்கடலில் வீழ்ந்து தன் புருவோர் பரிதவிப்புடன் அலைகண்மத்தியி லாழ்ந்துவிடாமற் றம்மைத் தப்புவித்துக் கொள்ளும்பொருட்டு, ஆங்கசையாது நிற்கும் பெருங்குன்றம்போன்று விளங்கும் குருநாதனுக்கும் அவரைப் பற்றிக்கொள்ளும் வண்ணம் முயலவேண்டுமென்பதுமே மன்க. குருதேவன் இவ்வாறே யாவருக்கும் பேருதவியாய்' விளங்கும் பொருளேயாவன். * சம்சார சமுத்திரத்தில் வீழ்ந்து பரிதவிக்கும் மானிடரனைவரும் தன்னைப்பற்றிக் கரையேறியுய்யும்வண்ணம் அசைவிலா வுறுதியுடைப் பாறையேபோன்று விளங்குகின்றனர். இதுவுமன்றி யவர் சகல மானிடவர்க்கத்தின் துன்பமூட்டைகளையுந் தன்மீது சுமற்றிக்கொண்டு தாங்குதற் குட்பட்டிருத்தலாலும் அதற்கேற்றவாறு மிகத்துணிவுந் தைரியமுடையவராய் நிற்கின்றனரெனவு மறிக. நாமிங்கு பெருஞ்சுமைகளைத் தாங்கிச்செல்லும் கூலிக்காரர்களைக் கண்டு வியந்து அத்தகைய பாரங்களை நாமுஞ்சுமக்க வியலாமையைக் கண்டு நிற்பதுமுண்டன்றே! இம்மாதிரியே மற்றவரால் முடியாதவிதமாய் உலகினரின் தீமை, பாபங்கண்முதலிய கருமச்சுமைகளில் சில பாகங்களை பெரியோரான குருமூர்த்திகள் தாங்கிவருகின்றார்கள். அவர்கள் நம்மிடம் பிரீதியுடன் அவ்விதம்பரிந்து மேற்கூறிய கூது பாபமூட்டைகளைச் சுமந்துநிற்கின்றனர். † இவ்விதமாய் உலகினரின் பாபங்களைச் சுமந்துநிற்றலும் அவர்களிடம் மிகுந்த தைரியமு முறுதியுநிறைந்து விளங்கலாற்றனென்றறிக.

---

* அருள்பழுத்தபழச்சுவையே கரும்பேதேனே!
யாரமிர்தேகண்ணே, யரியவான்
பொருளனைத்துந் தரும்பொருளே!
கருணைநீங்காப்பூரணமாய் நின்றவொன்றேபுனிதவாழ்வே!
கருதரியகருத்ததனுட் கருத்தாய்மேவி
.....................................
யுயிர்த்திரளை யாட்டும்பொருளே! — தாயுமானவர்.

† எவ்வுயிர்த்திரளையுமியக்கி மன்னுந்தண்ணருள்வடிவமே,
யுனக்கன்புவைத்துந் துன்னுமின்னலேன்,
யானெனுமகந்தை யேன்சொலாய்! — தாயுமானவர்.

குருநாதனிடமுள்ள வித்தைரியமெனுங் குணத்தின்கண் கர்வமல்லது தற்பெருமை யென்பதெள்ளளவுமில்லையென்பதையு நீவிருணருதல் வேண்டும். உலகினரை நோக்கி விசேட தைரிய முள்ளவனெனக் குருதேவன் தன்னைக் காட்டிக்கொள்ளலுமுண்டோ? பகவானன புத்தர் உலகினிலவதரித்தருளிய பொழுதும், பகவான் மைத்திரேயர் ஸ்ரீகிருஷ்ணனாகவும் பின்னர் கிறிஸ்து நாதராயும் இங்கு தோன்றியபொழுதும், இவர்களைக் கண்ணுற்ற உலகத்தவர் அவமதித்து பரிகாசம்பண்ணிவந்ததையும் இம்மகா புருடர் லக்ஷியம் செய்தனரோ? இவ்விதம் உலகினரின் அவமதிப்பை சிறிதுங் கவனியாது நிற்றலே பெரியோரின் மனவுறுதியை வெளியிற்காட்டி வருகிறதன்றோ! கடவுளின் காரியாதிகளை நிறைவேற்றுதற்காகவே இக்குருமூர்த்திகள் இவ்வுலகில் வசிக்கின்றனராதலின், கடவுளின் உத்தேசமல்லது ஆக்ஞையின்னதென்பதை யறியாமாந்தர் பலர்கூடிப் பேசுமொழிகள் பயனுளவாமோ? ஆகாவென்பது திண்ணமாதலின் அவற்றைப் பெரியோர்கள் பொருளாய் மதிப்பதில்லை யென்பதுண்மையே. *

இனிக் குருநாதனும் தன்னிடமுள வில்வுறுதியாங் குணத்தை நோக்கி ஆசைகொள்ளு முலகினருக்கெல்லாம் அதனைப் பகிர்ந்தளிக்க விச்சைகொள்ளுகிறார். தனது குணசம்பத்துக்களையெல்லாம் இவ்விதமே பிறர்க்களிப்பதுவே அவரது விருப்பமாகும். உங்கட்கு மனத்தளர்ச்சி, பயமிவை யுண்டாகுமாயின், அவையாவற்றிற்கும் பரிகாரமாகும் தைரியமெனுங்குணம் வேண்டியவளவு குருநாதனிடம் தயாராய் நிறைந்திருக்கின்றது. அதை ஏற்றுக்கொள்ளும் வழியைமட்டும் நீவிரறிந்து கொள்ளுவீராயின் அதனையெடுத் தாண்டுகொள்ளும் பாக்கியமுமுங்களுக்குக் கிட்டுமென்பதிற் றடையுமுண்டோ? †

---

* பாலரொடுபேயர்பித்தர் பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே! தாயுமானவர்.

† ஏதமின்றித்தன் னடியிணைக்கன்புதானீட்டுங்
காதலன்பர்க்குக் கதிநிலையீதெனக்காட்டும்
போதநித்திய புண்ணிய! தாயுமானவர்,

கைவிடாதேயென்ற வன்பருக்கன்பாய்க்
கருத்துணர்த்து குருவே!

இவ்விதமான தைரியமெனுங் குணத்தை நாமனைவருமடைதல் வேண்டுமென்பதற்கு மற்றுமோர் காரணம் யாதெனில், உலகிலெப்புறத்திலும் தைரியமென்பது இத்தருணத்தில் மிகவும் தேவையாயிருத்த லாற்றுனென்க. உலகின்கண் துக்கமுந்துன்பம் மிகவதிகமாயிருத்தலை நீங்கள் அறிவீர்கள். அவற்றைத் தாண்டுதற்கு வழியறியாத பலவீனராய் கோடிக்கணக்கான மன்பதைகளு முளரென்பது முங்கட்கு தெரிந்தவிஷயமே. அவற்றையெல்லாம் கரையேற்றுதற்கு எவ்வளவுறுதியும் வீரியமும் வேண்டுமென்பதை யாலோசியுங்கள். அவ்வித மிவ்வுறுதியை, தம்மொழுக்கத்திலே காட்டி பிறரையுமவ்வாறே யஃதை கைக்கொள்ளும் வண்ணம் தூண்டிவரத்தக்க மானிடர் அநேகர் தற்காலத்தில் அவசியம் வேண்டுமன்றோ!

இனியித்தைரியமெனுங் குணத்திலும் பலவிதங்களுண்டு. அவையாவன: முதலாவது, செயல்களில் தைரியம்; அஃது தீப்பிடித்தவீட்டிற் றுணிவுட னுழைவோனிடம் விளங்குவதுபோன்றது. இரண்டாவது, நினைவில் தீரமும், மூன்றுவது வசனங்களில் தீரமுமாகும். இவற்றுள் கடையதான 'வசனங்களில் தைரிய'த்தைப்பற்றி யிப்பொழுது பேசுவேன்.

இனிப்போலித் தைரியமென்பது மொன்றுண்டென்பதை முன்னமே விளக்கினேனன்றோ! சிறு பிள்ளைகளில் ஒருவனுக்கு ஒவ்வோர் வேளைகளில் துஷ்டகுணம் உண்டாகும்பொழுது மற்றொருவனை நோக்கியவன் 'உன்னை யடித்துவிடுவேன்' என பயமுறுத்துவதை நாம் பார்க்கிறோம். இவ்வசனங்கள் யதார்த்தமான தைரியமுடையனவாகுமோ? ஆகமாட்டா. ஏனெனில், உண்மையான தைரியத்தில் மூன்று அம்சங்களிருத்தல் வேண்டும். அவையாவன: உண்மைத் தைரியமுடைய வசனங்கள் அன்புடையனவாயும், சத்தியமுள்ளனவாயும், அப்படியே யழகுமுடையனவாயும் விளங்கலேவேண்டும். இம்முக்குணங்களும் எங்கு விளங்குமோ அங்கேதான் உண்மைத் தைரியம் பிரகாசிக்குமெனக்கொள்ளலே தகும். ஆதலின் குருதேவனுக் கடிமை

பூண்ட நீவிர் யாவரும் அவரைப்போல் தைரியமுடையீராய் நிற்றல் வேண்டுமாயின், நமது வசனங்களிலும் முக்குணங்களு மிருக்கவேண்டுமென்பதை மறவாதிருத்தலே கடமை. நமது வசனங்கள் யாவும், அன்பு, சத்திய, மழலைவை பொருந்தியன வாதலே வேண்டுமென்க.

முதலில் அன்புடை வசனங்கள் யாவையென விளக்கு வேன். கோபங்கொண்டு நாம் ஒரு மொழிபேசின் அஃது அன் புடையதாகாதன்றே! நமக்கு அடிக்கடி கோபம் வருவது சக ஜமே. அஃதை நிவிர்த்தித்துக்கொள்ளமுடியாமலே பொழுதுபோ க்குகிறேம். கோபம் வருந் தருணங்களிலெல்லாம் அக்கோபத் தை நம்மாற்றடுக்க முடியாமையையு மடிக்கடி வெளியிற்சொல் லிக்கொள்ளுகிறேம். இஃதுசிதமன்று, பின்னை நமக்குக் கோபம் வரினும் அதற்கு வசப்பட்டு கோபச்சொற்களைப் பேசாது நிற்ற ற்கு முயலுதலேவேண்டும்.* கோபம் வரும்படி விடுதலே நியாய மன்று, ஆயினும் கோபம் வந்தவுடன் கோபச்சொற்களைப் பேசற் கும், கோபம்வரினு மஃதை யுள்ளேயேயடக்கி கோபச்சொற் களைப் பேசாது நிற்றற்கும் வித்தியாசமுண்டன்றே! ஆதலின் கோபத்தையறவே நீக்கிக்கொள்ள முடியாதுபோயினும், அஃதை மனத்துள்ளேயே நிற்கும்படியாவது செய்துகொண்டு அவ்வித கோபஞ் சிறிதாயினுமுள்ள வசனங்களை மொழியாது ஒழுகிவரு தற்குப் பிரயாசைப்படுதலே வேண்டுமன்றே!

பிறர்க்கு எவ்விதமேனும் துன்பமென்பதை விளைவியாத வசனமே அன்புடையதாகும். மானிடர் எண்ணிறந்த வழிகளில் யோசனையின்றியே பிறர்க்கு மனத்துன்ப முண்டாக்கிவிடுகிறார் கள். அன்னியனொருவனைப் பற்றிக் கெடுதலாகிய செய்தி யொன்று நமக்குத் தெரிந்திருந்தா லஃதைப்பற்றி நாம் மற்றும் வேறொருவரிடத்தில் கூசாது பேசுவது வழக்கமன்றே! இஃது எவ்வாற்றானு மன்புபொருந்திய செய்கையாகாது. பிறரைப் பற்றியது எதுவும் முற்றிலும் சிலாக்கியமல்லாது கடுகளவேனும்

---

* பொறிவழியேயேழை பொறியாயுழல்வதுநின்
னறிவின்விதித்தவிதி யாமோபராபரமே! தாயுமானவர்.

கெடுதல் கலந்ததாயிருப்பின், அஃதையின்னு மற்றவரிடம் நாம் பேசுதல் அடாது. பின்னையவற்றை நம்முள்ளேயே கிடந்தழுந் தும்படி புதைத்துவிடவே வேண்டும். எனெனில், குருதேவனுக் குச் சீடர்களான நுங்கள் கடமையாவது, பிறரிடமுள்ள வீரிய முதலிய நற்குணங்களைத் தேடியானந்தித்தலு, மவற்றையே பிற ரிடம் பேசிவருதலுமேயன்றி வேறாகாதாதலினென்க. இவ்வி தஞ்செய்து வருவீர்களாயின் உங்களிடமிருக்கு நற்குணங்களு முறுதியடைவதை நீங்களே கண்டுகொள்வீர்கள். ஆகவே ஒருவ னிடத்தில் விசேஷ கோழைத்தனமுஞ் சிறிதளவு மாத்திரமே வீரியமும் நிற்கக் காண்பீராயின், அவற்றுள் அக்கடுகளவுள்ள வீரியமாம் நற்குணத்தையே நீவிர் குறிப்பிட்டுப் பேணுதல் வேண்டும். அவ்வித மவனிடந் தங்கும் வீரியாம்சத்தையே பேணி நிற்பீராயின், அவனிடத்திலேயே யக்குணமும் பலமடை ந்து ஆழ்ந்து அபிவிர்த்தியடைந்து வரும்படி செய்துவிடுவது மன்றி, நீங்களு மந்நற்குணத்தில் முன்னிலுமதிகமாய் நிலைபெற்ற வர்களாகி விடுவதையுங் காணலாம். அன்னியரிடமுள்ள பலம் தைரியமிவற்றை நாம் மெச்சிப் புகழும்பொழுது அவை நம்முள் ளும் வேறன்றி நாமுமவைமயமாகி விடுகிறோம். இதன் கார ணம் யாதோவெனில் கூறுவேன். எங்கும் எவ்விடத்தும் நிறைந்து விளங்கும் சேதனமாம் கடவுளின் வாழ்வு ஏகமயமேயாகி உங்க ளிடத்திலும், என்மாட்டும், மற்று நுங்கள் திருஷ்டியிற்படு மன் னிய மானிடரிடத்திலும் பிரகாசிக்கிறதன்றோ! ஆதலின் பிற னொருவனிடத்தில் நற்குணமொன்றைக் கண்டு நீங்கள் சந்தோஷ மடையும் பொழுதெல்லாம் அவ்வன்னியனிடத்திலும் விளங்கா நின்ற கடவுளையேயன்றோ நீவிர் கண்டு ஆனந்திக்கின்றீர். அத் தருணத்தில் உம்முட் டங்கிநிற்கும் கடவுளது அம்சமாகும் நன் மையாமமுகும் கிளர்ச்சியடைகின்றது. நுங்களிடம் தைரியத் தின் வடிவமாய் நிற்கும் கடவுளே நுங்களைக்கண்டு சந்தோஷிக்கு மன்னியனிடமும் தன்னம்சமா மக்குணத்தைத் தூண்டியெழு ப்புகின்றனர்.

இனி நீங்கள் எவருடனும் சம்பாஷிக்கும்பொழுது மரி யாதையற்ற வசனங்களை யொருபோது முபயோகித்தல் கூடாது.

ஒருவனைப் பரிகாசம்பண்ணுவது மவனை யவமதித்தலே யாகு மென்பதை நீவிர் அறிந்துணருதல் வேண்டும். சிலசமயங்களில் பிறரைப்பற்றி வேடிக்கையாய் நீங்கள் கதைகள் சொல்லுவது முண்டன்றோ! இவ்வித கதைகளிலெல்லாம் சொற்பவளவு அழுக்காறு நிறைந்து நிற்கின்றதென்பதற் கையமில்லை. பிறர் நகைக்கும்வண்ணம் நீவிர் எடுத்துக்காட்ட உத்தேசிக்கும் கடுகளவு ஆபாசமாவது அக்கதைகளி லில்லாமலிருக்குமோ? அவ்விதம் வேறொருவரை நகைப்புக் கிடமாக்குவது பெரியோனுங் குருநாதனையண்டிய சீடர்களின் தொழிலாவதெங்ஙனம்? குருதேவனது சீடர்களாம் நுங்கட்கு பிறரிடமுள்ள நற்குணத்தை மட்டுங் கிரஹிப்பதுவேயன்றி அவர்களைக் கண்ணுற்று நகைப்பதுங் கடமையாகுமோ? ஆதலினிவ்வகையான வேடிக்கைக் கதைகளைப் பிறரைப்பற்றி நீங்கள் கூறுவதால் அவர்களை மற்றவர் நகைக்கும்படி செய்தல் கூடாது. குருவின் சீடர்களல்லாதார் செய்யுஞ்செய்கையே யிதுவாகுமன்றோ! பின்னை ஆண், பெண், குழந்தை இவர்களில் எவரைக்காணினும், அவரை ஸ்ரீகுருதேவன் எவ்வித திருஷ்டிகொண்டு பார்ப்பனோ அவ்விதமே நாமனைவரும் காணுதல்வேண்டும். ஸ்ரீகுருநாதன் எப்பொழுதும் பிறர் சகிக்க முடியாதபடி கம்பீரமான பார்வையுட னிருப்பதில்லை, பின்னை ஹாஸ்யரஸமு மவரிடத்தில் நிறைந்து விளங்குகிறதாதலின், சாமானிய மானிடரின் குற்றங்குறைகளையெல்லா முணர்ந்தறிந்துகொள்ளுந் திறம்படைத்தவரேயாவர். எச்சமயத்திலும் எவ்வகைச் சந்தர்ப்பத்திலும் ஏற்படும் சூழல்கள் ஆபாஸங்கள் யாவற்றையு முடனே யறிந்துகொள்ளுவர். ஆயினும் நாம் பிறரைத் தாழ்வுடன் மதித்து நகைப்பதுபோல் அவர் ஒருபோதும் நகைத்தல் செய்யார். அவர் எச்சமயத்திலும் பிறர் பவரிடத்திலாவது குற்றங்குறையைக்கண்டு புன்சிறிப்புக்கொள்ளினும், அப்புன்சிறிப்பால் அஜ்ஜீவனை யலக்ஷியமு மவமதிப்புஞ் செய்தவராகார். ஏனெனில், தன்னந்தரங்கத்துணின்றும் அம்மானிடன்றனது குற்றங்களைக்களைந்து மேற்செல்லும் வண்ணமவனுக் குறுதியை யளித்துக்கொண்டே, அவன்மீதச் சிறுநகையுங் காட்டுவ ராதலின் என்க.

இனி மற்றவரது அபிப்பிராயங்களையும் அவரது ஆசாரங்களையு மிவ்விதமே குறைவாய்ப்பேசும் பழக்கத்தையும் நீவிர் தவிர்த்தல்வேண்டும். இவற்றுள்ளும் முக்கியமாய் அன்னிய சமயங்களின் கொள்கையைச் சிறிது மிகழாதிருத்தலே வேண்டும். ஏனெனில், எச்சாதியாரிடத்திலாவது அவரது பழக்கங்களிலோ, அல்லது சமயாசாரக் கொள்கைகளிலோ காணப்படும் எவ்வித உயர்வு அல்லது அழகும் நுங்கள் குருநாதனும் பெருமானிடத்தில் விளங்குவதுவேயாகும்.* ஆதலின் குருதேவனது சின்னங்கள் எங்கு காணப்பெறினும் அங்கெல்லாமவன் பிரத்தியக்ஷமாய் நிற்பதாகவே நினைந்து, அவற்றை கவுரவப்படுத்திக் கொண்டாடுதல் நுங்கடமையாகுமன்றோ! ஆனால் எல்லாவிடங்களிலும் சிறந்த நடைகளும் பழக்கங்களுமே யுண்டென யான் கூறவந்தேனில்லை. பின்னை அநேகமிடங்களில் மிகக்கொடிய பழக்கங்களும், பொய் நிறைந்த கருத்துக்களுங் காணப்படுமாயினும், அவற்றைத் தரிசிக்கும்பொழுதெல்லாம் குருதேவனுக்குச் சீடனாயமைந்தவர்கள் செய்யவேண்டியது யாதெனில், அவற்றைக் கண்டித்துத் தூஷியாமல் உள்ளத்தில் வியசனமு மிரக்கமுங்கொண்டே நடித்துவரலேயென்க. ஆதலின் நீங்கள் எக்காலமும் சகல ஜனங்களிடத்திலும் அவ்வவரிடத்தில் விளங்கும் நற்குணங்களைச் சிறப்பித்துப் போற்றியே யவையவை முன்னிலுமதிகமாய் உறுதியடையும்படி செய்துவரலே வேண்டுமென்க.

ஆகவே எங்கும் எவரிடத்தும் நீவிர் ஆங்காங்குயர்ந்ததோர் குணத்தையே யுற்றுநோக்கி வரல்வேண்டும்; ஏனெனில் எவ்விடத்திலாவது உயர்வல்லது மேன்மையைக் காண்பீராகில் அங்கு நீவிர் குருதேவனையே யொருவாறு தரிசிப்பவரேயாவீர். இனி வருநாட்களில் நீங்கள் யாவரும் அதிகமாய்ச் சஞ்சாரம் செய்ய நேரிடும். ஜகத்குருவாம் பெருமானது செய்திகளைத் தாங்கி இவ்வுலகில்ப் பலவிடங்களிலும் நீங்கள் சஞ்சரித்துச் சென்றுவரும்படி நேருவது திண்ணம். அப்பொழுது பல்வித

---

* என்னதியானென்பதற, வெவ்விடமுமென்னுசான்
சன்னிதியாக்கண்டுநிட்டை சாதிப்பதெந்நாளோ? தாயுமானவர்.

நடையுடைபாவனைகள் நோக்கங்களை யுடையாராகும் மானிடர்களை நீவிர் காணவேண்டி வருமன்றோ! இந்நோக்கங்களிலநேகம், விசித்திரமானவைகளாயும் வெறுப்பைத் தரத்தக்கவையாகவும் வாய்க்குமென்பதற் கையமில்லை. அச்சமயங்களிலெல்லாம் உங்களுக்குண்டாகும் வெளியுணர்ச்சிகளா லுங்களதந்தரங்க நிலையும் மாறிவரும்படி விடல் தகாது. பின்னை யவை யெதிர்ப்படினு மவற்றையெல்லா மாழ்ந்து நோக்கி, யாங்காங்கு கடுகளவாயினும் அழகுமதிசயமும் பொருந்திய அம்சங்கள் உளவோ என்பதைத் தெளிந்தறிந்துகொள்ளலும், அவ்விதங் காணப்படு முயர்வுகளை யெல்லாம் உடனே யங்கீகரித் தேற்றுக்கொள்ளலும் வேண்டும். இனியந்நாளில் இவ்விதமேற்பட வேண்டுமாயின் அதற்கவசியமாய் நுங்களிடம், அன்புகொண்ட வசனங்களையே பேசிவரும் பழக்கமுமிப்பொழுதே மேற்பட்டுவரவேண்டுமென்பதே யெனது கருத்து. இதுவே 'அன்புநிறை வசனங்கள்' எனுமுதற்பாகத்தின் தாத்பரியமாகும்.

இனியித் தைரியமெனுங் குணத்தின்கண் ணுள்ள 'அழகு' எனுமிரண்டா மம்சத்தை விளக்குவாம். அதாவது அழகு அல்லது உசிதம் விளங்கிய வசனங்களையே நீவிர் கூறிவரல் வேண்டுமென்க. இவ்விஷயத்தில் இங்கிலாந்து தேசத்திய சிறுவர்களைக் காட்டிலும் நீங்களே சிரேஷ்டமானவர்கள் ஆகிறீர்கள். ஏனெனில் உங்களுக்கு விசேட சௌகரியமிருக்கின்றது. எவ்விதமெனில், ஆங்கில பாஷையைப்போல நம்மிந்திய நாட்டின் பாஷைகள் அத்தனையாபாஸம் அல்லது அனுசிதத்தன்மை விளங்குபவைகள் அல்ல. இவ்வாங்கிலத்திலும் இலக்கணத்தின் மணம்பெறுறு சாமானிய ஜனங்களின் பழக்கத்தில் நடமாடும் பேச்சுக்களே மிகவுங் கொச்சையு மருவருப்புமுடையனவாய் விளங்குகின்றன. அழகு அல்லது உசிதமுள்ள வார்த்தையாவது ஆபாஸமல்லது விகாரத்தன்மை யற்றதுவாகும். விகாரத்தன்மை அல்லதுசிதமின்மையாவது தான் யாதோவெனின், அஃதின்னதென யான் விளக்குவதற்கு ஒரேயோர் வழிதானுள்ளது. அஃதியாதெனில், அழகுசிதமென்பவை யாவற்றிற்குங் குருநாதனுறைவிட மாதலின், அவரிடம் எது கிடையாதோ அதுவே அனுசிதமாமென்க.

ஆதலின் அவரிடம் விளங்காத் 'துர்க்குணம் நிறைந்த வசனங்களை அநுசிதங்கள் அல்லது ஆபாஸமான வசனங்கள் எனக் கொள்ளலாகும். உதாகரணமாய், குருதேவன் தன்னிடம் துவேஷஞ் சிறிதுமமையப் பெறாதவரன்றோ! ஆனதுபற்றி அத்துர்க் குணத்தை வெளிப்படுத்துஞ் சொற்களைச் சிறிதும் நாமுபயோகப்படுத்தல் கூடாது. துவேஷமெனும் பதத்தையே எவ்வாற்றானு நாமுபயோகித்தல் நியாயமன்று. இஃது இங்ஙனமாக, இங்கிலாந்து தேயத்தில் துவேஷத்தன்மையின் கொடுமையை யுள்ளபடி யுணராமலே சாதாரணமான சமயத்திலுங்கூட, தான் சம்மதியாததோர் விஷயத்தைக் குறிப்பிட்டுப் பேசத்துடங்கிய எவனும் இத்துவேஷத்தைத் தழுணர்த்தும் பதங்களை யுபயோகிப்பது வழக்கமாய் ஏற்பட்டிருக்கிறது. உதாகரணமாய், ஒருவன் 'எனக்கும் அதிகாலையில் துயிலைவிட்டு எழுதற்கும் பெரும்பகை நேர்ந்திருக்கின்றது' என்பான். இஃது எவ்வளவு ஆபாஸகரமான பேச்சு! பாருங்கள். இத்தன்மையதான வசனங்களை நீங்கள் எத்தருணத்திலு முபயோகித்தல் கூடவேகூடாது. நுங்களுக்கு அந்தரங்கத்தில் எதையேனு நோக்கி யருவருப்புண்டாகுமாகில் அதற்குத்தக்க வசனங்களையே தெரிந்தெடுத் துபயோகஞ் செய்தல்வேண்டும். இவ்விதமே யோர் சிறுவன் மற்றொருவனை நோக்கி, 'நீ முழுமுடன்' என மொழிவன். குருதேவன் இம்மாதிரி வசனங்களை யொருக்காலும் பேசார். ஆதலின், கோபங் குரோதம் குரூரமுதலிய துர்க்குணங்களை விளக்கும் மொழிகளில் எதையும் நீங்கள் கூறுதல் நியாயமாகாது. குருநாதனியற்கையில் நிலைபெறாத எக்குணங்களையாவது குறிக்கும் வசனங்கள் உங்கள் உபயோகத்திற்கேற்ற அகராதியிலே தங்கும்படிக் கூட விடலாகாது. இத்தகைய நியாயங்களால் உசிதமற்ற வசனமாவது குருதேவனிடமில்லாத துர்க்குணமெதையாவது வெளிக்காட்டும் பதமேயாகுமென்பது பெறப்பட்டது.

(இன்னும் வரும்.)